தேரையர்

# குணவாகடம்




தஞ்சாவூர் மகாராஜா சரபோஜியின்

**சரசுவதி மகால் நூலகம்**

தஞ்சாவூர்.

தஞ்சாவூர் சரசுவதி மகால் வெளியீட்டு எண் : 495

# தேரையர் குணவாகடம்

பதிப்பாசிரியர்கள்

முனைவர் **மரு. எஸ். பிரேமா,** எம். டி.,(சித்தா)பிஹெச். டி.
தலைவர், சித்தமருத்துவத்துறை,

முனைவர் **மரு. ச. அரங்கராசன்,** பி.ஐ.எம்.பிஹெச்.டி.
தஞ்சை மாவட்ட சித்த மருத்துவ அலுவலர் (ஓய்வு)
தஞ்சாவூர்.




தஞ்சாவூர் மகாராஜா சரபோஜியின்

**சரசுவதி மகால் நூலகம்**

தஞ்சாவூர்.

2006

விலை : ரூ.100-00

# நூற்பதிப்பு விளக்கக் குறிப்பு

| | | |
|---|---|---|
| நூற்பெயர் | : | தேரையர் குணவாகடம் |
| பதிப்பாசிரியர்கள் | : | முனைவர் மரு. எஸ். பிரேமா,<br>முனைவர் மரு. ச. அரங்கராசன், |
| வெளியிடுபவர் | : | இயக்குநர்,<br>சரசுவதி மகால் நூலகம்<br>தஞ்சாவூர். |
| வெளியீட்டு எண் | : | 495 |
| மொழி | : | தமிழ் |
| பதிப்பு | : | முதற் பதிப்பு |
| வெளியீட்டு நாள் | : | அக்டோபர், 2006 |
| தாள் | : | TNPL 18.6 kgs. |
| நூல் அளவு | : | 21 x 14 c.m. |
| பக்கங்கள் | : | 270 |
| படிகள் | : | 500 |
| எழுத்து | : | 12 புள்ளி |
| அச்சிட்டோர் | : | சரசுவதி மகால் நூலகம் |
| புத்தகக்கட்டு | : | மெலிந்த அட்டை |
| பொருள் | : | மருத்துவம் |
| விலை | : | ரூ. 100-00 |

# வெளியீட்டாளர் முகவுரை

தேரனின் 'குணவாகடம்' (எண்.973/ டி ) என்ற சுவடியும் சுரத்தின் குணவாகடம் என்ற சுவடியும் சரசுவதி மகால் நூலகத்தில் உள்ளன. இவைகளை ஒன்றாகப் பதிப்பு செய்யும் பணி சித்தமருத்துவ முனைவர்கள் எஸ். பிரேமா மற்றும் ச. அரங்கராசன் ஆகியோரிடம் ஒப்படைக்கப்பட்டது. இத்துறையில் அளப்பரிய பணியாற்றிவரும் இம்மருத்துவர்கள் இச்சுவடிகளை 'குணவாகடத் திரட்டு' என்னும் பெயரில் பதிப்புக்கு ஏற்றபடி அமைத்துப் பதிப்பித்துள்ளார்கள்.

குணபாடம் என்பது பொருள் பண்புகளையும், வாகடம் என்பது நோய், மருத்துவம் என்றபொருளையும் கொண்டதாகும். தேரனின் சித்த மருத்துவ நூல்கள், இலக்கண இலக்கிய அமைப்புடன் கூடியவை. 1. சிகாமணிவெண்பா, 2. நிகண்டு, 3. சேகரப்பா, 4. காப்பியம், 5. தரு, 6. அந்தாதி, 7. மருந்துபாரதம், 8. வண்ணம், 9. நாண்மாலை, 10. யமகவெண்பா, 11. எதுகைவெண்பா, 12. கரிசல் என்பவையாகும். இது தவிர, நீர்க்குறி, நெய்க்குறி, தேரையர் அந்தாதி என்னும் நூலை, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் வெளியிட்டுள்ளது. தேரையரின் தைலவர்க்கச் சுருக்கம் என்பதும் பல்லாண்டுகளாக பயன்பாட்டில் வழங்கி வருகிறது.

இந்நூலாசிரியர், நெல்லை மாவட்டத் திருக்குறுங்குடியைச் சேர்ந்தவர் என்பதை பாடல் 25 இன்வழி அறியலாம். இவரது ஆசிரியர் இயற்பெயர் மா. சுத்தேரர் என்பதாகப் பாடல் 155 வழி அறியலாம். பதிப்பாசிரியர், இதிலுள்ள சில பாடல்களை, அகத்தியர் 2000இல் உள்ள பாடல்களுடன் ஒப்பிட்டுப் பாட வேறுபாடுகளை அடிக்குறிப்பில் தந்துள்ளனர். மேலும் பொழிப்பு உரையும், பதவுரையும், பதிப்பாசிரியர்களால் எழுதப்பட்டுள்ளன. நோய்களின் அட்டவணை, மருந்துகளின் அட்டவணை என்பனவும் பிற்சேர்க்கையில் இடம் பெறுகின்றன. இவை படிப்பவர்களுக்கும்,

ஆய்வாளர்களுக்கும் பெரிதும் உதவியாக இருக்கும். பல இடங்களில் உள்ள இலக்கிய நயம், விளக்கப்பட்டுள்ளது. மறைபொருள் அகராதியின் வழி, சொற்களுக்கு பொருள் அறியப்பட்டது.

சுரத்தின் குணவாகடம் என்ற சுவடியில், சுரங்களின் வகைகளுக்கான மருத்துவம் என்பது இடம் பெறுகின்றது. முப்பிணி எனப்படும் சன்னிநோயும், அதற்கான மருத்துவமும் கூறப்பட்டுள்ளது. இச்சுவடியின் ஆசிரியரது வரலாற்றை அறியமுடியவில்லை.

இந்நூல் வெளிவர நிதியுதவி நல்கிய நடுவண் அரசுக்கும், நிருவாக அலுவலர் மற்றும் வெளியீட்டு மேலாளர் (பொறுப்பு) திரு. சாமி. சிவஞானம் அவர்களுக்கும், இந்நூல் கணினி அச்சில் வெளிவர, கணினிப் பிரிவில் பணிபுரிந்த ஏனையோருக்கும் எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

**சா. விஜயராஜ் குமார், இ.ஆ.ப.,**
மாவட்ட ஆட்சித்தலைவர் மற்றும் இயக்குநர்,
சரசுவதி மகால் நூலகம்.

தஞ்சாவூர்.
8-10-2006.

ஓம் ஸ்ரீ மஹா கணாதிபதயே நம:

# முன்னுரை

தேரனின் குணவாகடம் (எண்.973/D) என்ற சுவடி, சுரத்தின் குணவாகடம் என்ற சுவடி சரசுவதி மகால் நூலகத்தில் உள்ளன. இவைகளை ஒன்றாகப் பதிப்பு செய்ய எண்ணினோம். எனவே "குணவாகடத்திரட்டு" என்னும் பெயரில் பதிப்புக்கு ஏற்றபடி அமைக்கப்பட்டது.

குணபாடம் என்பது பொருள் பண்புகளையும், வாகடம் என்பது நோய்கள், மருத்துவம் என்பவைகளையும் கொண்டதாகும். தேரனின் சித்த மருத்துவ நூல்கள், இலக்கண இலக்கிய அமைப்புடன் கூடியவை. 1. சிகாமணிவெண்பா 2. நிகண்டு 3. சேகரப்பா 4. காப்பியம் 5. தரு 6. அந்தாதி 7. மருந்துபாரதம் 8. வண்ணம் 9. நான்மாலை 10. யமகவெண்பா 11. எதுகைவெண்பா 12. கரிசல் என்பனவாகும். இது தவிர, நீர்க்குறி, நெய்க்குறி, தேரையர்100, 500, 1001, 1500 என்பனவும் இவர் பெயரிலுள்ளன. அண்மையில் தேரையர் அந்தாதி என்னும் நூலை, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் வெளியிட்டுள்ளது. தேரையரின் தைலவர்க்கச் சுருக்கம் என்பதும் பல்லாண்டுகளாக பயன் பாட்டில் வழங்கிவருகிறது. தேரன் என்ற பெயரிலுள்ள நூல்களை ஆய்வு செய்தபோது, இப்பெயரில் பல்வேறு காலங்களில், பல்வேறு தேரர்கள் இருந்துள்ளது தெரிய வந்தது. இதை மரு.இரா. தியாகராசன், மகாக் கரிசல்[1] என்னும் நூலில் குறிப்பிட்டுள்ளார். தேரையர் என்ற பெயர் பற்றிப் பல புலவர்கள் கருத்துகளைக் கூறியுள்ளார்கள். தளவரிசை சுப்பிரமணியப் பண்டிதரின் மகன் ஆறுமுக பண்டிதர், விருதை. சிவஞானயோகி, யாழ்ப்பாணம் நா. கதிர்வேற்பிள்ளை ஆகியோரின் கருத்துகளை கடுமையாக மரு. இரா. தியாகராசன் மறுத்துள்ளார். இக்கருத்தை இவரது ஆசிரியரும், தமிழ்ப் புலவருமான மாங்காடு வடிவேலு முதலியார் செந்தமிழ்ச் செல்வி, சிலம்பு 1,2

1. தேரையர் மகாக் கரிசல் – இரா. தியாகராசன், பக். 1, அன்பு செல்வி அச்சகம் – 1994

வெளியீடுகளில் 1923 – 24 ஆம் ஆண்டில் எழுதியுள்ளார். இக்கருத்துகளை நோக்க மூன்றுவகைத் தேரர்கள் இருந்துள்ளார்கள்; மூவரின் ஆசிரியர்களும் ஒருவரல்லர். செய்யுள்நடை, சொல் நோக்கு, பொருள்நோக்கு முதலியவைகள் முரண்பட்டிருந்தலால், தனித்தனி நூலாசிரியர்கள் எனலாம். தருமசௌமியரின் மாணவர் தேரையர் புலத்தியரின் மாணவர் தேரையர், அகத்தியரின் மாணவர் தேரையர் என்ற மூவர் இருந்துள்ளார்கள். யூகிவைத்திய சிந்தாமணி 800 இல், புலத்தியரின் மாணவர் தேரையர் என்பதை புலப்படவே, புலத்தியருக்கு உபதேசிக்க புலத்தியரும், தேரையருக்கு புகன்றிட்டாரே[2] தேரையரின் ஆசிரியர் தருமசௌமியர் மகாகரிசலில் இவரைத் துதிக்கின்றார் நிச தரும சவுமிய குரு வசமே[3]. என்றும் அகத்திய முனிவரின் அடியிணைப்பரவி, தரும சவுமிய தன்மந்திரி சற்குரு[4] என்றும் போற்றுகின்றார். பேயகத் தேரன் என்று பாடலில் வருவதால், இது இவரது இயற்பெயராதல் கூடும், மூன்றாவது தேரர், அகத்தியரை ஆசிரியராகக் கொண்டவர், இதை விருதை சிவஞானயோகிகள் கூறுகின்றார். இதற்கான சான்றுகள் இல்லை என்று மரு. இரா. தியாகராசன் கூறுகின்றார். அகத்தியரின் மாணவர் தேரையர் என்பதை, போகர் 7000 இல் காணலாம் சங்கத்தாரிக்குத் தலைநோய் மருத்துவம் செய்த வரலாறு இதில் உள்ளது. விருதை. சிவஞான யோகியார் இதைக் கொண்டே அகத்தியரின் மாணவர் தேரையர் என்று கூறினார் என்பது தெளிவு. ஆயின் தேரன் என்ற பெயரில் விளக்கத்தை யாரும் கூறவில்லை.

சங்க இலக்கியத்தில், சிறுவெண்தேரையர், ஐயாதி சிறுவெண்தேரையர் ஆகியோர் பாடல்களைப் பாடியுள்ளார்கள். தேரன் என்பது பௌத்த சமயத்துறவிகளைக் குறிக்கும் பொதுவானச் சொல்லாகும். ஞானசம்பந்தர், தேவாரத்தில் பௌத்தர்களை தேரன் என்றே அழைக்கின்றார்.

"நினைவென்ன, சிந்தையடையாத தேவர்"
"உண்டு உடுக்கை விட்டார்களும்"
"உயர் கஞ்சி மண்டை கொள் தேரரும்"
"நின்று துய்ப்பவர், நீசர் தேரர்"
"கற்றமணரும் உலவு தேரருரைசெய்த"
"செறிந்த சீவரத்தேரரும்"

............................................................................................................................................

2. மகாக்கரிசல் – இரா. தியாகராசன், பக்.10, அன்பு செல்வி அச்சகம் – 1974
3. மேலது பக்.6
4. மேலது பக்.7

"ஆலும் மயிலின் பீலிஅமணர், அறிவில் சிறு தேரர்"

"தேரர்களோடு அமணே நினையே மொழி"

"அறிவிலாச் சமணரும், தேரரும்"

"தேரர் அமணரைச் சேர்வில் கொளசமன்"

"குண்டர் தேரருக்கண்டன் அன்னியூர்"

"மண்டை கொண்டுழல் தேரர்"

"தெள்ளியரல்லாத் தேரரொடு அமணர்"

"மொட்டை மண் ஆதர், துகின் முடுலிர் தேரர்"

"நின்றுணும் சமண் தேரரும் நிலையிலர்"

"மண்டைக் கலனாக் கொண்டு திரியும்"

"மதியில் தேரரும்"

எனவே, புத்தசமயத்தவர்கலை குறிப்பதாக தேரர் என்பதைக் கொள்ளலாம். மாறவர்மன் சுந்தரபாண்டியனின் 15ஆம் ஆண்டு விருத்தாசலம் கல்வெட்டில் "இருங்கோளப்படி நாட்டுப் பழுவூருடையான், தேரையராயன் பொன்வழங்கினான் பருவூருடையானான கச்சிராயன்", எண்டு, தேரன் என்ற பெயர் வழங்கி வந்ததைக் காணலாம். மேலும் பேராசிரியர் திருநாவுக்கரசு தன் நூலில் அதிகமான செய்திகளை வழங்கியுள்ளார். கி.பி.4 ஆம் நூற்றாண்டில் புத்த, தத்தா மகா தேரர் அபிதம்ம அவதாரம் விநய விநிச்சயம் ஆகிய நூல்களை இயற்றியுள்ளார். இலங்கையிலுள்ள கோகல்லா கல்லெட்டில் தோட, காழுவ ஸ்ரீ இராகுலத் தேரர் என்ற சிங்களப்புலவரின் பெயருள்ளது. சாங்கமித்திரத் தேரர், சோழநாட்டவர். மகாயான புத்தமதப்பிரிவை, இலங்கையில் பரப்பினார். கி.பி. 5ஆம் நூற்றாண்டில் புத்தா, தத்தா மகா தேரர் இலங்கையில் இருந்தவர். காஞ்சியைச் சேர்ந்த, ஆனந்தத் தேரர் இலங்கையிலிருந்து பர்மா (பெகு) நாட்டுக்குச் சமயப் பணியாற்ற அழைக்கப்பட்டவர். அநிருத்த தேரர் அபிதம்மார்த்த சங்கிரகம் என்ற நூலை எழுதியுள்ளார். கி.பி.14ஆம் நூற்றாண்டில், சோழ நாட்டைச் சேர்ந்த மகாதேரர் 4 ஆம் பராக்கிரமபாகுவின் குலகுருவாக இருந்தார். இவர் புத்தரின் சாதக்கதைகள் 350ஐ பாலி மொழியிலிருந்து, சிங்களத்திற்கு மொழிபெயர்த்தார். இலங்கையில், 12ஆம் நூற்றாண்டு புனிதப் பல் கல்வெட்டில் மகா தேரர் மொக்கலனா என்ற புத்தபிட்சு, புனிதப் பல்லைக்காக்கும் பணியில் இருந்ததாக உள்ளது. மேற்கண்ட சான்றுகளால் தேரன் என்பது புத்த சமயத்தாரின் பொதுபெயர் என உணரலாம்.

.................................................................................................

ARE 89 / 1918

ARE 162 / 1906

5. இலங்கையில் தமிழ்ப் பண்பாடு – க.ந. திருநாவுக்கரசு, கேரி பதிப்பகம், 1978

இந்நூலின் ஆசிரியர், நெல்லை மாவட்டத்திருக்குறுங்குடியைச் சேர்ந்தவர் என்பதை பாடல் 25 இன்வழி அறியலாம். இவரது ஆசிரியர், அகத்தியர் அல்லது அவரின் மரபைப் பின்பற்றக்கூடியவர். மேலும் இவரது இயற்பெயர் மா, சுத்தேரர் என்பதாகப் பாடல் 156 வழி அறியலாம். சுத்தோதனத்தேரர் என்பதின் சுருக்கமே, சுத்தேரர் என்பதாகக் கொள்ளலாம். கௌதம புத்தரின் தந்தை பெயர் சுத்தோதனர் என்பதாகும். இவ்வாறு தேரன் என்பதின் விளக்கம் தரப்பட்டுள்ளது.

தேரன், குண வாகடம் என்ற இந்நூல் இதுவரை பதிப்பிக்கப்படாத ஒன்றாகும். இதிலுள்ள சிலபாடல்களை, அகத்தியர் 2000இல் உள்ள பாடல்களுடன் ஒப்பிடப்பட்டு பாட வேறுபாடுகள் அடிக்குறிப்பில் தரப்பட்டுள்ளன. மேலும் உரையும், பதவுரையும், பதிப்பாசிரியரால் எழுதப்பட்டுள்ளன. மேலும் நோய்களின் அட்டவணை, மருந்துகளின் அட்டவணை என்பனவும் பிற்சேர்க்கையில் இடம் பெறுகின்றன. இவை, படிப்பவர்களுக்கும், ஆய்வாளர்களுக்கும் பெரிதும் உதவியாக இருக்கும். பல இடங்களில் உள்ள இலக்கிய நயம், விளக்கப்பட்டுள்ளது. மறைபொருள் அகராதியின் வழி, சொற்களுக்கு பொருள் அறியப்பட்டது.

சுரத்தின் குணவாகடம் என்ற சுவடியில், சுரங்களின் வகைகள் மருத்துவம் என்பன இடம் பெறுகின்றன. முப்பிணி எனப்படும் சன்னிநோயும், அதற்கான மருத்துவமும் உள்ளன. உலகளாவிய அளவில் பறவைக் காய்ச்சல், இந்திய அளவில் சிக்கன்–குனியா போன்ற நச்சு சுரங்கள் பரவியுள்ளன.

இச்சுவடியின் ஆசிரியரது வரலாறு என்பனவற்றை அறியமுடியவில்லை. சுரநோய் பற்றிய ஏனைய நூல்களுடன் ஒப்பிடப்பட்டது; சுரவாகடம் என்ற நூலின் உள்ள சில பாடல்களை மரு. க.ந. குப்புசாமி முதலியார் சித்தமருத்துவம் என்ற நூலில் மேற்கொளாகத் தருகின்றார். அவற்றில் சில இந்நூலில் உள்ளவைகளுடன் ஒத்துள்ளது. சுரவாகடம் என்ற நூல் பதிப்பில் இதுவரை வெளிவரவில்லை. யூகிவைத்திய சிந்தாமணி, சரயேந்திரவைத்தியம் (சுரரோகம்) அகத்தியர் 2000, சித்த மருத்துவம்–பாகம்I, ஆகிய நூல்களுடன் ஒப்பிடப்பட்டது. இதில் 55 வகையான நோய்களுக்கு மருத்துவம் உள்ளது. சித்தமருத்துவத்தில் கூறப்பட்ட சுரவகைகளையும், சுரவாகடத்திலுள்ள சுரவகைகளையும் ஒப்பிட்டதில் வாதசுரம், வாத பித்தசுரம், பித்தவாத சுரம், கப சுரம் என்ற 4 வகைகள் மட்டுமே, ஒத்துள்ளன. சந்நிநோயை, தேரனின் பட்டியலுடனும், யூகி வைத்திய சிந்தாமணி 800, அகத்தியர் 2000 ஆகிய

நூல்களுடன் ஒப்பிடப்பட்டது. இதில்லாத சந்நி, தோன்பட்டியலுடனும், பிரலாப சந்நி என்பது, யூகிவைத்திய சிந்தாமணி 800, அகத்தியர் 2000 ஆகியவற்றுடன் ஒத்துவருகின்றது. சுரநோய்களின் தொகை 64 என்றும் தன்வழிச் சுரங்கள் 52, பிறவழிச் சுரங்கள் 12 எனப்பட்டாலும், பெரும்பான்மையான சுரங்களுக்கு பாடல்பகள் இல்லை உரை நடையிலேயே உள்ளது வியப்பைத் தருகின்றது. மேலும் சுரவாகட நோய்களின் பட்டியலில், அதிசாரம், இருமல், இளைப்பு, ஈளை, தலைவலி, தலைக்குத்து, தடிப்பு என்பன இடம் பெறவது பொருத்தமின்றி உள்ளது. ஒரு வேலை சுரத்தின் துணை நோயாகக் கொள்ளலாம். அல்லது துணை சுரவகைகளைப் பற்றிய பாடல்கள் கிடைக்காத காரணத்தால், இவைகள் இடம் பெற்றதாகவும் கொள்ளலாம். எனவே, சுரநோய் பற்றிய விரிவான ஆய்வுகளைச் செய்தல் வேண்டும்.

இந்நூலைப் பதிப்பிக்க அனுமதி வழங்கிய மாவட்ட ஆட்சியர் திரு. சா. விஜயராஜ்குமார், இ.ஆ.ப., அவர்களுக்கும். முந்திய மாவட்ட ஆட்சியர் திரு. மா. வீரசண்முகமணி, இ.ஆ.ப., அவர்களுக்கும் நிதி நல்கிய நடுவண் அரசுக்கும், பதிப்பு மேலாளர் மற்றும் நிருவாக அலுவலர் திரு. சாமி. சிவஞானம், எம்.ஏ., அவர்களுக்கும் நுண்ணாய்வு செய்த பேராசிரியர் திரு. வே.இரா. மாதவன் அவர்களுக்கும், திருத்தம் செய்த பாவலரேறு திரு. ச. பாலசுந்தரனார் அவர்களுக்கும் சரசுவதி மகால் நூலக அச்சகத்தார்க்கும் நன்றி. இந்நூலை சித்த மருத்துவர்கள், ஆர்வலர்கள், ஆய்வாளர்கள் வழக்கம்போல ஆதரிக்க வேண்டுகிறோம்.

நாள் : 11.9.2006. மரு. முனைவர். **எஸ் பிரேமா,**

தஞ்சாவூர். மரு. முனைவர். **ச. அரங்கராசன்.**

# எமது வெளியீடுகள்

| | |
|---|---|
| ஜாதக அலங்காரம் | 125-00 |
| காலபிரகாசிகா | 100-00 |
| நக்ஷத்திர சிந்தாமணி (பாகம்-I) | 200-00 |
| நக்ஷத்திர சிந்தாமணி (பாகம்-II) | 100-00 |
| அமரகோசம் (பாகம்-I) | 65-00 |
| அமரகோசம் (பாகம்-II) | 60-00 |
| அமரகோசம் (பாகம்-III) | 60-00 |
| பிரகதீஸ்வர மாகாத்மியம் | 43-00 |
| ஜைனிஸம் கேட்லாக் | 10-00 |
| தக்ஷிணாமூர்த்தி ஸம்ஹிதை | 35-00 |
| காயத்ரீ கோசம் | 30-00 |
| கீதகோவிந்தம் | 25-00 |
| கல்பலதா (ஸ்ரீருத்ரபாஷ்யம்) | 22-00 |
| பாணினீய தாதுபாடம் | 30-00 |
| விருத்தரத்னாவளி | 30-00 |
| பலவதி | 120-00 |
| நந்திநாகரி சுவடிகளின் அட்டவணை | 25-00 |
| பிரபஞ்சசாரசார ஸங்கிரஹம் (பாகம்-I) | 180-00 |
| பிரயோக ரத்னமாலா | 55-00 |
| ரத்ன பரீக்ஷை | 40-00 |
| சப்தம் தாளம் சொற்கட்டு | 40-00 |
| ஸாம்ராஜ்ய லக்ஷ்மீ தீபிகா | 100-00 |
| ஸ்தோத்ர ராமாயணம் | 25-00 |
| நாககுமார காவியம் | 55-00 |
| விமானார்ச்சன கல்பம் (பாகம்-II) | 75-00 |
| சூலினிகல்பம் | 50-00 |
| சூர்யசதகம் | 50-00 |
| தஞ்சை நாயக்கர் வரலாறு | 205-00 |
| யதிராஜவிஜயம் | 35-00 |
| பிரபோதசந்திரிகை | 70-00 |

# சுரத்தின் குணவாகடம் உரையுடன்

## சுந்நீ – 13 ஆயுர்வேதம்

1. சந்திரிகன்
2. தாந்திரிகன்
3. விப்ரமன்
4. கண்டகுச்சன்
5. கன்னிகன்
6. சீகுவீகன்
7. உருரத்திரன்
8. அந்தகன்
9. புக்குநேந்திரன்
10. இரத்த சாட்டிகன்
11. பிரலாபன்
12. சீதார்க்கன்
13. அபின்யாசன்

## சித்தமருத்துவம் – 13.

1. சந்திகசன்னி
2. அந்தக சன்னி
3. ருத்தாக சன்னி
4. சித்தவிப்ரமக சன்னி
5. சீதாங்க சன்னி
6. தாந்திரிக சன்னி
7. கண்ட குப்ச சன்னி
8. கர்ணிக சன்னி
9. புக்னநேந்திர சன்னி
10. இரத்தட்டீவிச் சன்னி
11. பிரலாப சன்னி
12. சிம்மக சன்னி
13. அபின்யாச சன்னி

## தேரன் – குணவாகடச் சுவடி

1. சந்திக சன்னி
2. இந்திர சன்னி
3. இரத்தக்கட்டி சன்னி
4. சீதமந்த சன்னி
5. சீதாங்க சன்னி
6. பிரலாப சன்னி
7. கண்டதீர சன்னி
8. கண்குளிர்வு சன்னி
9. மெலிவு சன்னி
10. அதிக சன்னி
11. கண்டக சன்னி
12. அசுவமேக சன்னி
13. செங்கைகொட்டு சன்னி

## சுரம்

| | | | |
|---|---|---|---|
| 1. | வாதசுரம் | 7. | (குழந்தை) ஆமசுரம் |
| 2. | பித்த சுரம் | 8. | சத்தி சுரம் |
| 3. | கப சுரம் | 9. | சன்னி வாதசுரம் |
| 4. | சன்னி சரம் | 10. | மாந்த சுரம் |
| 5. | தோடசுரம் | 11. | குளுந்த சுரம் |
| 6. | திரிதோடசுரம் | 12. | பித்தவாத சுரம் |

## சுரத்தினுட குணவாகடமும், குடிநீரும்

1. **வாத சுரம்**

காலுச்சி, அபாதி[1]யளவாகவே சென்று
(ஸ்)தம்பித்து நிற்குமுடனே
மேலுத்தி[2] வாதமுளதாகியே சென்று பின்
மெய்யும் நலிந்து மெலிவார்
கோலில் சிறந்ததோர், வாதமுறக்கூறுடன்
கொண்டதோர், பித்த மூன்று
வலியில் சிறந்த,தோர் அய்யமொரு
வாத சுரம் வந்திடுவதே.

உரை: காலிலிருந்து, தலை முதல் மலப்புழைவரை, வாதம் நிலைத்து இருக்கும். மேல் வயிறு வாதத்தால் நிறைந்து, பின்னர் உடலை நலிவடையச் செய்யும். உடல் எடை குறையும். இத்துடன் பித்தம் மூன்று பங்கு. கபமும் சேர வாதசுரம் உண்டாகும்.

2. **குடிநீர் மருத்துவம்**

பெரியவாகைப் பெருங்குமிழ் பாதிரி
பாரென் முன்னை சதா

............................................................................................................

1. அபானாதி என்றிருத்தல் கூடும்
2. மேல் உந்தி என்றாதல் கூடும்

வேரிக்கூவேளைவேர் நன்னாரி நற்புடல்
உளரெனச் சீந்தில் போமட்டியே[3]
ஏராரும் சித்த மல்லிப் பேராமல்லி எண்திசை
எண் சிற்றா முட்டி ஆடாதோடை
காராரும், கண்டங்கத்திரி முத்தக் காசு
கருது இலாமிச்சமுடன் அவுரி தானும்
சீராரும், செங்கழுநீர்க் கிழங்கு சிறுகுறிஞ்சில்
சிறந்த சிறு காஞ்சொரி வேரும்
பேரான காவேளைவேர், சாரணை வேருடனே
பெருகில், கடைச்சரக்கு பேசுங்காலே.

உரை: பெருவாகை, பெருங்குமிழ், பாதிரி, முன்னை சதாவேரி, வேளைவேர், நன்னாரிவேர், நெரிஞ்சில், நற்புடல், சீந்தில், பேராமுட்டி, பேராமல்லி, சிற்றாமல்லி, சிற்றாமுட்டி, ஆடாதோடை, கண்டங்கத்திரி, முத்தக்காசு, இலாமிச்சவேர், அவுரி, செங்கழுநீர்க்கிழங்கு, சிறுகுறிஞ்சான், முட்காவேளை சாரணை ஆகியவற்றின் வேருடன் கடைச்சரக்குகளைக் கூட்டவும்.

4. தேவதார அரத்தை வசம்பு சொற்
செருஞ்சுக்குடன் கோட்டம்
நற்திப்பிலி ..............உளோரெனமிளகு
மருந்தையெல்லாம் பொருந்த
தற்சமன், கொண்டு இடித்துப்பினை
மேவு நீருமிருநாழியும் கூட்டியே
மேலீராறு கழஞ்சிட்டுக் காய்ச்சியே
காவிநேர் விழியால் நாலொன்றாக்கியே
கருதிக்கொள்ள வாதசுரமேகுமே.

உரை: தேவதாரம், அரத்தை, வசம்பு, சுக்கு, கோட்டம், திப்பிலி, மிளகு - சம அளவு நீர் 2 நாழி - சேர்க்கவும், 12 கழஞ்சு எடை வருமளவுக்காய்ச்சி, 1/4 பங்கு அருந்த வாதசுரம் நீங்கும்.

.....................................................................................

3. பேராமுட்டி என்றாதல் வேண்டும்

5. **வாதசுரத்தின் குணம்**

வாதசுரத்தின் குணஞ்சொல்ல முன்னோர்
வகுத்த வன்மையிது
சீதம் அதிகமாக வந்துச்
சிந்தை கலங்கி நெஞ்சுமுறச்
சாதிவாழ் எரிவன்னப் போத
வலமும்[4] வரண்டு
திரும்பாது போகம்,
இருமலும் தோன்றிடுமே.

6. தோன்றும், உடலந்தன்னை, நடுக்கத்
தொலையா, நடுக்கத்தானும் உறக்
காண், உண்டிடு நஞ்சதுபோல்
கனத்த, சத்தி வரும்போது
ஆன்ற இரவும் பகலும் தானி
இல்லை மயக்க முதலாக
நான்ற, கைகால் கடுத்தழிக்கும்
நலஞ் சேர்ந்தத்த முளைத்திடுமே.

உரை: வாதசுரத்தின் இயல்பு குளிர் அதிகமாகும், உடலில் மனத்தடுமாற்றம், எரிச்சல், மலம், வரண்டு போதல் இடைவிடா இருமல், உடல் நடுக்கம், உணவுமீது வெறுப்பு, வாந்தி, கைகால் கடுப்பு, மயக்கம் என்பனவாகும் என முன்னோர்கள் கூறினார்கள்.

7. **வாதசுரத்திற்கான மருத்துவம்**

உளையும் சிலிர்த்துப் பாம்புவிடம்
மெத்த இதுதான் குலைப்புடனே

..........................................................................................

பாடல் 104, 105 என்று சுவடியிலுள்ளது, படிப்போரின் நலன் கருதி, எண்.5,6 இல் மாற்றப்பட்டுள்ளது. சித்த மருத்துவம் - பக்.9 இல் இப்பாடல் உள்ளது.

4. மலமும் என்றாதல் கூடும்.

கலையும் தெளிவாம், காந்தியுண்டாம்
கண்டாலிந்தக் குணந்தன்னை
விளையும், சுரமுந்தோன்றிய நாள்
வேர்க்கொம்புடனே, பேராமுட்டிவேர்
அளையும், வேளை வேருடனே
அதனைக் காய்ச்சிக் கொடுத்திடுமே.

8. குடிநீர்ஏழு நாளளவும்
குறுநொய்[1]க் கஞ்சியுடன் சுக்கை
பிடி[2]த்தோல்சீவி, வெல்லமுடன்[3] நறுக்கி....
சிலையிலிறக்கக் கட்டி
வடிநீர் உலையிட்டதுக் காய்ச்சி
வகையில் கொடுத்தே ஆடச் சென்றால்
கடிதாம் திசை மூலந்தன்னைக்
காய்ச்சிக் கொடுக்கமிக நன்றே

9. இட்டே நாளம் இரண்டே நாள்
இந்தவிலையில் செற்றாக்கித் (சோறாக்கி)
தொட்டைமிகு (மிளகு), நீருடனே சுகத்தைக்
கொடுத்து பன்னிரண்டு வகைகேள்
மட்டே சென்றால் முற்குடிநீர் வகையே
கேளிரண்டுபடி (நீர்தான்)
விட்டே கொன்றைத் தோலுடனே(தோல்வட்டின்)
வெறி(வேர்) இந்துப்பு, வேர்க் கொம்பே,
நோய்தான் சீந்தில் இலாமிச்சம்
துகளும் கண்டங் கத்தரிவேர்

..........................................................................................................

பா.வே. 1. நெல் 2. படி 3. நறுக்கி 4. நலம் 4. படல்வேருடன் சீலையில் கட்டி, வடிநீர் உலையிட்டதைக் காய்ச்சி, வற்றிக் குடித்தேழ் நாள் சென்றாலட், நெடிய தசமூலகம் திரிந்து, நீர்தான்நாழி தன்னிலிட்டே சித்தமருத்துவம் - பக்.58

குறிப்பு: சுவடியில் 106 முதல் 170 வரையுள்ள பாடல்கள் 7 முதல் 15ஆவதாக மாற்றப்பட்டுள்ளன.

மொய்பூ, பூங்குழலாய் கழஞ்சரைத்து
முயன்று சிறுக்கொள்ளாயே.

10. கொண்டே இருநாழி தண்ணீரில்
கூட்டி அகடுக் குடிப்பீராய்
பண்டே, நடுக்கிக் குளிர்வதும்
பாரமான சுரந்தானும்
விண்டே, அலறி வாராமல்
விரைந்தே, ஓடுமது சொன்னேன்
கண்டேயனையமொழி மடவாய்
கடிதாய் ஆறும் கண்டாயே.

11. கண்டகாலி கோட்ட முத்தக்காசு
சிறு காஞ்சோரி சீநதில்
தண்டும், திப்பிலி பற்பாடகம் சாற்று
சிறுதேக்கு, நிலவேம்புக்கொன்றங்
கொண்டு, முக்கழஞ்சு சமமாய்
கூட்டி, நால் நாழிநீரும் முக்கால்
உண் டாங்கிருக்கும், அருவருப்பு
ஊறுவாய்நீர், சுரமும் போமே.

12. வாத சுரமும், குலைப்பும் போம்
வட்டில் சீந்தில் நன்னாரி
சீதம், புங்;கம் பாளையுடன்
சுக்கு பற்பாடகம்
போத, ஆடாதோடையுடன்
புனல் எட்டொன்றாக்கி
பாதம், பருக, ஆறுதலாய்
பரிந்தேயிதனைப் பருகிடவே.

13. பரிந்தே, கூவிளைவேரிரு கழஞ்சு
பயந்தான், இருநாழியிட்டுக்
விரிந்தே, பொரித்துச் சீலையில் கட்டி
விட்டே நீர், சுவரக் காய்ச்சி
மருந்தம் பொரியைக் கூழ்போல்
மசியப் பிசைந்து, தேன் கலந்து
அருந்தீர், தாகம் சத்தி, வெதுப்பு
அலைந்தே லிரைவிலகன்றிடுமே.

14. அகஞ்வோர்வில்ல மறு கழஞ்சு
அளியர், நெற்பொரி தன்னுடனே
சுகஞ்சேர் சுக்கிருவேலி துய்ய
இலாமிச்சம் ஒருகழஞ்சாய்
முகத்தா(ன்) அரைய்யா நீரிலிட்டு
முயன்றே காய்ச்சித்தேனுடனே
சிரத்தான் எரியக் குடித்தே, நீர்
சத்தி, வெதுப்பைப் கொடுத்திடுமே.

உரை: உடல் நொந்து, சிலிர்க்கும், பாம்பு நஞ்சு ஏறுவது போல் ஏறும். வெப்பமாக இருக்கும். இத்தகைய இயல்புகளையுடைய வாத சுரம் தீர மருத்துவம். வேர்க்கொம்பு, பேராமுட்டிவேர், வேளைவேர், சமஅளவு; இவைக்காய்ச்சி குடிநீராக்கி 7 நாள் தரவும். நொய்கஞ்சி. தோல் சீவிய சுக்கு, வெல்லம் இவைகளைத் துணியில் முடிந்து, நீரிலிட்டுக் காய்ச்சி வடிகட்டவும், பின் தரவும், இது நல்லது.

இவ்விதம் இரு நாள் அருந்த, நீங்கும். இரண்டுபடி நீரில் கொன்றைத்தோல் இந்துப்பு, வேர்க்கொம்பு, சீந்தில், இலாமிச்சப்பொடி, கண்டங்கத்திரி வகைக்கு கழஞ்சு வீதம் பொடி செய்யவும், தண்ணீரில் இரு நாழி சேர்த்துக் குடிநீர் செய்தருந்த, பழைய நடுக்கல் சுரம், நீங்கும்.

கண்டங்காரி, கோட்டம், முத்தகாசு, சிறு காஞ்சோரிவேர், சீந்தில் தண்டு, திப்பிலி, பற்பாடகப்புல், சிறுதேக்கு, நிலவேம்பு-3

கழஞ்சு, நான்கு நாழிநீர் குடி செய்து, அருந்த, வாய்நீர் ஊறுதல் வாத சுரம் நீங்கும்.

சீந்தில், நன்னாரி, புங்கம் பாளை, பற்பாடகம், ஆடாதோடை - இத்துடன் நீர் சேர்த்து 1/8 பங்காகக் காய்ச்சி அருந்தவும் கூவிளவேர் 2 கழஞ்சு - நீர் 2 நாழி வறுத்துக்கொண்டு, நீரில் நன்கு காய்ச்சிக்கொள்ளவும். பொரியைக் கூழ் போல் மசித்துத் தேன் கலந்து உடன் தர, நீர்வேட்கை, வாந்தி வெதுப்பு விரைவில் தீரும். 6 கழஞ்சு பொரி, சுக்கு, இருவேலி, இலாமிச்சவேர் 1 கழஞ்சு அரைத்துப் பொடி செய்து நீரிலிட்டுக் காய்ச்சி வடிகட்டிக் குடிக்க, வாந்தி வெதுப்பு என்பன நீங்கும்.

15. **பித்தசுரம்**

பித்த சுரத்தின் குணஞ் சொல்லின்
பேரிதஉழலை மிகச் சொல்லிக்கும்
மெத்த, மருள்போலே இருக்கும்
மிகவே, சுழற்றும் நாவரளும்
குத்தும் தலையில் வலியுள்ளதாம்
கொடியதாம் பித்தமுக் கூறு
சுத்த சேத்தும ஒரு கூறாய்ச்
சொன்னேம், பித்த சுரத்தினுடவே.

16. **பித்தசுரம்**

செய்யும் பித்த சுரத்தனுக்குச்
செய்யும் குணங்கள், நாவுணரும்
பெய்யும் சிறுநீர் சிவந்திருக்கும்
பித்தசித்தி ஓக்காளம்
மெய்யும் வெதும்பும் வாய்கசக்கும்
மிடறும் வாய்ப்புண் உடன்பற்றும்
நய்ய, கழியுமலமுடனே
நயனந்தானும் மஞ்சளித்தே.

..............................................................................................

:இதிலுள்ள 4 வரிகள் மட்டுமே பித்தசுரத்தைக் குறிப்பிடுவதால், இவ்வரிகள் மட்டுமே காட்டப்பட்டுள்ளன.

17. அஞ்சனக் குழாய், வாய்முகங்களுக்கு
வாங்குந் தண்ணீர் குளிர்ந்து சிர
தஞ்சரவண்ணம் வேண்டயினி
இதுதான் பித்த சுரமென்க

18. சொல்லும் பித்தசுரத்தின் வகை
துலங்கக்கேளு, மிகக்குளிரும்
மெல்ல மூச்சுண்டாயிருக்கும்
மெத்த வெதும்பும் இருமலுண்டாய்
வல நரம்பு, வரண்டிருக்கும்
வதங்கு உடம்பு மிகப்பித்தும்
நல்லவேர்வும், தலை வலியாம்
நலங்கு உடம்பு அடந்தடந்தே.

19. அடர்ந்த தலையும் துய்யக்
கழுத்துடியும் விடாமலேவியர்க்கும்
தூடந்த, இருகண்வெளுத்திருக்கும்
சொல்லும் பரிகாரம் கேளாய்

உரை: பித்த சுரத்தின் இயல்புகள்: உழலைமிக மயக்கமாக இருக்கும் நாவரளும், தலைக்குத்து, வலி என்பன பித்தம் 3 பங்கு கபம் 1 பங்கும் சேர, இது வரும். நாக்கு உலரும். சிறுநீர் சிவப்பு நிறமாக வெளியேறும், பித்தவாந்தி, வாய்க்குமட்டல், உடலில் சூடும், வாய்க்கசப்பும், வாய்தொண்டையில் புண்கள் உண்டாதல், கண் மஞ்சள் வண்ணமாதல், மலம் மஞ்சளாகக் கழிதல் என்பனவும் வாய், முகம் கறுப்பாக மாறும், கண்ணீர் குளிர்ந்து வரும் என்பன பித்த சுரக் குறிகளாகும்.

........................................................................................

16. சித்தமருத்துவம் - பக்.17இல் இப்பாடல் உள்ளது.

20. **இதற்கு மருத்துவம்**

வெச்சென்றிருக்கும் தவிப்பெய்தும்
மிகவும் பெண்தலை விட்டேனும்
மச்சந்தரு கண்ணதுனக்காகும்
குடிநீரடைவு சொல்வன்
மெச்சுங் கோட்டமதி விடையம்
வீரமாந்தோல் தன்னுடனே
பச்சைக்கற்பூரம் தோல்
பற்பாடகம் அத்திப்பட்டையும்,

21. பட்டங் காணோர் ஒன்று
பதறிக்கழஞ்சாய் நிறுத்ததிலே
விட்டங்கு இருநாழிப்புனல்
தன்னை மிகவும் வற்றி உழக்கானால்
தோட்டங் கருதில் அதிசாரம்
தொலையுமெனவே தொல்புவியில்
கட்டங் குருவே, மாமுனிவர்
கருதிப்புகன்றனர் காசினிக்கே.

22. காரமுத்தக்காசு சந்தனம்
கமழுங் கோட்ட நன்னாரி
சிறு காஞ்சோரியுடன்
தேதாரம் பற்பாடகம்
நீரார், நளிமைதனில் வளையம்
நீரார், நளிமைதனில் வளையம்
நிகழ்வோர் கொம்பு தன்னுடனே
ஆராயும் புங்கங் பாளையுடன்
இசமோதகமும் தேடுகவே.

23. தேடும் சேரொன்றுகிற
கரும் கழஞ்சாய் நிறுத்ததிலே

ஓடும் புனல், தானிரு நாழி யுடனே
விட்டாங்கு உழக்காகிக்
போடும் புதிய அதிவிடையம்
பொடி நீரருந்தப்பித்த சுரம்
வாடும், பித்த அதிசாரம் மாறும்
உடலும் மயங்காதே.

24. தேடும் சேர்வொன்று எழில் சேர்
பற்பாடாகமிலா மிச்சம்
நீடும் காஞ்சோரி மரமஞ்சள்
நெருங்கும் தேவதாரமுடன்
கூடும் சிறு மூலகடுஞ் சுக்கு
குலவுமோ ரொன்று கழஞ்சு
நாடும் படியே, நிறுத்திடித்து
நல்ல நீர்நாழி விட்டே.

25. நாழி தானும் வழக்கந் தானானால் நறுக்கித்
துய்ய திப்பிலித் தூள்
ஆழி வினையு இந்துப்பு அதுவே கலந்து
கொண்டிடவே தான் மேவுங்குவளை
விழி சாயல் போலுந்தன் மாதே, கோழி கூவி
விடிந்தளவில் குடித்தே நடித்தகல் லிடுமே.

26. அறிந்தே இரண்டாங் குடிநீரின்
அடைவுகேளும் திரிபலையும்
செறிந்த விலாமிச்ச செய்யவோர்
கொம்பொ ரொன்று
பிரிந்து கழஞ்சிருநாழி
பெருநீர் புகட்டி உழக்காக்கி
உறுஞ்சி விட்டுங் கார்திப்பிலித்
தேனுடனே குடிநீருடன் கலந்தே.

27. கலங்காதே, செவ்வியங் கடுக்காய்

கடுகு ரோகிணி சீந்தில் தண்டோடிய

வங்கா புதிய இருநாழிப்புனலில் காய்ச்சி

நாழி செய்து

நலங்காதேயிப்படி ஏழுநாளுங் காய்ச்சிக்

குடித்தற்பின்

குலையின் சேர், மலையின் முலையில்

முற்குடி நீரடைவு கூறுவமே.

உரை: கோட்டம், அதிவிடையம், மாம்பழத்தோல், பச்சைக்கற்பூரம், பற்பாடகம் அத்திப்பட்டை கழஞ்சு எடை இருநாழி தண்ணீர் இதைக்காய்ச்சி உழக்காகக் குடிக்க, அதிசாரம் நீங்கும். இதை, குருவான முனிவர் உலகத்தோர்க்குக் கூறினார்.

முத்தக்காசு, சந்தனம், கோட்டம், நன்னாரி சிறு காஞ்சோரிவேர், தேவதாரம், பற்பாடகம், தாமரைவளையம், வேர்க்கொம்பு, புங்கம்பாளை, ஓமம், 2 கழஞ்சு தண்ணீர் - 2 நாழி; உழக்களவு வரும்வரைக் காய்ச்சி, புதிய அதிவிடையத்தின் பொடியைச் சேர்க்கவும், இதைக்குடிக்க, பித்தசுரம், வாட்டி எடுக்கும் பித்த சுரம், பித்த அதிசாரம் என்பன தீரும்.

28. **சேத்தும சுரம்**

அறையக்கேள், சிலேத்தும சுரத்தின்

அடைவு உடம்பு நொந்தால்அறும்

நிறைய இருமும், இளைப்புண்டாம்

நெஞ்சும் உருகி, மனந்துவளும்

அறிவும் நினைவாய் மயங்கி விடும்

மங்கும் உடனே தெளிவுண்டாம்

உறையும் சலமு மலந்தானும்

உரைக்கில் வெள்ளுறும் விரைகுழலே.

.........................................................................................................

28. சித்தமருத்துவம் நூலில் பக்கம் 22இல் உள்ளது.

29. விரைவாய் துயில்லாதாகும்
விழிதுஞ்சாது மிகக்காயும்
புரைசேர் உடம்பு குமிழ்ந்திருக்கும்
புகந்துடக் குளிரும், உடனேதான்
சூரைசூழ் கடல் நஞ்சமுதாக்கும்
தற்பானைத்துதியா சமயத்துறை
சோரலாது துலங்கு வருமுடல்
போயெனவு உழலையுண்டோ.

உரை: கபசுரத்தின் குறிகுணங்களைக் கேளுங்கள். உடல்சோர்வு, இருமல், இளைத்தல், மனம் வன்மையை இழத்தல், அறிவு மாறுதல், மயக்கம், மலம், சிறுநீர் தடைபடுதல். கண்ணெரிச்சல், கண்மூடாது உறக்கமில்லாமலிருத்தல், குளிருதல், சோர்வு ஆகியவைகளாகும். பால்கடலில் தோன்றிய நஞ்சைவுண்டு உலகத்தைக் காத்த சிவபெருமானின் கதையும் இடம் பெறுகின்றது. நஞ்சாக நோய்களும், அமுதமாக மருந்துகளும், நஞ்சைவுண்டவராகச் சிவபெருமானும் புராணக் கதையின் வழி விளக்கப்படுகின்றார்கள்.

30. **குளுந்த சுரக்குணம்**

பார்மேல் முழுத்த சுரத்தனுக்கு
பகரக்கேளும், தலைசுழற்றும்
சீர்வாய்கைக்கும், பற்கடிக்கும்
சிவக்கும், விழியும் சிதறி நிற்கும்
நீர்தான் மூக்கில் உருகி நிற்கும்
சரீரமுழும் உழற்றும்
கார் கேர் தண்ணீர் பூளையுண்டாம்
கலையை மறைக்க வேர்வே முமே.

31. **சேத்துமசுரக் குறிகுணம்**

வானீர் கொளுத்து உடம்பு பல
வண்ணமாகும் மலமடைக்கும்
தானே, குளிர்ந்து மிக வெதும்பும்
தரியா இருமல் தானுமுண்டாம்
தேனே, நாவும் தித்திக்கும் சிறந்த
மூக்கு நீர்பாயும்
மானே விழியாய் சேத்துமமாய் வந்த
சுரத்தின் வகை அறியே.

உரை: வாய்நீர், நாக்கும் இனிப்புச் சுவையாக இருக்கும், மலக்கட்டு; இருமல். மூக்கில் நீர் ஒழுகுதல். உடலின் நிறம் மாறுதல் அடைதல் வெப்பமடைதல், என்பன கப சுரத்தின் குறி குணங்களாகும்.

32. வேர்க்கும், முறுக்கும் வயிறிழியும்
வீணே, பகர்ந்து, தலை நோவும்
பார்க்கவே, வெறிபோலே மயக்கும்
பகர்ந்து நாவும் புண்ணாகும்
எறகு சீர் கேடறிவுகெடு
ஏற்றவாயும் பிரிதவிக்கும்
அறகு மிளகிலையில் சோறு
ஏழுநாளும் வைத்துண்னே.

உரை: குளுந்த சுரத்தின இயல்புகளைக் கேட்பாயாக. தலைசுற்றல்., வாய்கசப்பு சுவையுடன் இருக்கும், சுரத்தின் வன்மையால் பற்களைக் கடித்துக் கடித்துக் கொள்ளுவார்கள். விழிகள் சிவப்பு நிறமாயிருக்கும். கண்களில் பீளை சேர்ந்து. கண்ணீர் வரும். மூக்கிலிருந்து சளியானது வெளியாகும். வியர்வை, வயிறு இழிதல், தலைவலி, மயக்கம், நாக்கு, வாயில் புண்கள், அறிவுமாறம், 7 நாள் மிளகு, இலையில், சோறு சேர்த்து உண்ணவும்.

33. **விசம சுரத்துக்குணம்**

அறிந்தோர் விசம சுரந்தன்னில்
அடைவைக்கேளும், சுரங்காயும்
நறுஞ் சேர்த்தங்கால் காயாது
நாவும் வரளம் அன்றி விக்கும்
அறிந்த பேரக் காட்டியிடும்
அய்யோ, பிழையோ யெனுந்தலைநோம்
நிறைந்த சந்த சந்து மொழிய
நெடிய, காலும் காய்ந்திருமே.

உரை: விசம சுரத்தின் குறி குணங்களைக் கேளுங்கள். கைகளில் வெப்பம், நாவரட்சி தலைவலி, கால்வலி, சந்துகளில் வலி, என்பனவாகும்.

34. **முளுத்த சுரம்**

புகலு முளுத்த சுரம், வரட்சி
போகாமுள வெக்கை
பகரும், பழைய வெதுப்பொட்டும்
பரவு இரண்டொன்றானதுவும்
அதிகளுத் திருஞான சம்பந்தர்
தீரா வெதுப்பு தீர்த்ததுபோல்
அகலுமெனவே, வாகட நூலறிந்தோர்
புகன்றார் அவனியிலே.

உரை: மருத்துவ நூல்களை அறிந்தவர்கள், முளுத்த சரத்தின் இயல்புகளை உலகுக்குக் கூறினார்கள், வரட்சி, உள்ளே வெப்பம், பழைய வெப்பத்துடன் சேர்ந்து பரவி, ஒன்றாகும். ஆயின் திருஞான சம்பந்தர் பாண்டியனின் வெப்ப நோயை திருநீறு பூசித் தீர்த்ததுபோல், பற்ப சுண்ணங்களை நீறால் வெப்புநோயை மருத்துவர்கள் போக்குவார்கள்.

குறிப்பு: ஞானசம்பந்தர் பாண்டிய மன்னனுக்கு வெப்புநோயை நீறுபூசி தீர்த்த வரலாறு கூறப்படுவதால், இவர் சைவ சமயப் பற்றுள்ளவர் என்பது விளங்கும், மேலும் நீறு கொண்டு நோயைப் போக்கிய முறையையும் நயம்பட உரைத்துள்ளார்.

35. **தோட சுரத்தின் குணம்**

கை கால் குளிரும், தலை வலிக்கும்
கண்ணூறு, வெள்ளோக்காளம் உண்டாகும்
மெய்தான் வெதும்பும், தாகமறும்
மிகவும் உழலை உண்டாகம்
பொய்யதனக் குத்திடும், பொருந்தும்
சிரிக்கும், செவிகேளா
அய்யா, வாத பித்த முன்னதாகும்.

35. (அ) **தோட சுரம் கதித்தே**

மலமானது இறுக, அறிவும் குலைந்து
சுரமானது உளதாக்கியே
தலை, மார்பு கண்டமிவை
மிக வெதும்ப வருதலை
வலியும் மிஞ்சிடவே, பலவா எழுந்திரும்
ஈளையுடனே வந்து பாரித்த
சோப மிகவாய்க்குல வாதமேசரியும்
பித்தமும் காலுடன் கூடுவதுதோட சரமாம்.

உரை: மலமானது இறுக, அறிவுமங்கும் தலை, நெஞ்சு, தொண்டை இவைகளில் வெப்பம். வலியும் இருக்கும்.

ஈளையுடன் பெரிய வீக்கம் இருக்கும். வாதத்துடன் பித்தம் 1/4 பங்கு சேருவது தோட சுரம்.

உரை: தோட சுரத்தின் இயல்புகள்: கை கால்கள் குளிந்திருக்கும், வாந்தி, வெப்பமடையும், துன்பமடையும், நீர் வேட்கை, துன்பம் செய்யும், செவி கேளாமை இருமல் வாத பித்தத்தின் சேர்க்கையில் தோட சுரம் பிறக்கும்.

36. **சன்னி சுரம்**

சிக்கிக் கழியும், உழலைமிகச்
சிவந்த, அதன் மிகத்துடிக்கும்
மெய்க்குள இதனமா வெதும்பும்
மிகவுமற்று மொழியுண்டாம்
தக்கதாகம் பாரிக்கும்
தரிய பித்தம், சேத்துமமும்
மைக்கண் மடவாய் வாதமுங்கால்
மன்னும் சன்னி சுரத்தினியல்பே.

உரை: மலம் தடங்கலுடன் வெளியேறும். துன்பம் தரும். சிவப்புநிற உதடுகள் துடிக்கும். நீர் வேட்கை ஏற்படும்.

கபமும், பித்தமும் அதிகமாகும். வாதம் 1 பங்கினின்று 1/4 பங்காகக் குறையும். இதனால் சன்னிசுரம் தோன்றும்.

37. **திரிதோட சுரம்**

ஒப்பொடு குளிர்ந்து வரும் முகவேர்வுட
பலகாலும் உள்சேத்தும் எதிரெடுக்கும்
வெப்போடு, முழங்கால் குலைந்திடும்
தலைவலியு மிஞ்சி, மலமுஞ்சிக்கி அங்கை

..........

குறிப்பு: கால் என்பது வாதம் எனவும் 1/4 பங்கு எனவும், இருவகையாகப் பொருள் கொள்ளலாம். இது நூலாசிரியரின் இலக்கிய நயத்தைக் காட்டும்.

உப்பு, புளிப்புடன் தித்திக்கும் வாயும்............
கறுத்திடும் வாதமுடனே
செய்புற்ற பித்தமும், சேத்துமமும் முற்றியது
செய்யும், திரிதோட குணமே.

உரை: திரிதோட சுரம் ஒட்டிக் கொண்டு, குளிருடன் வரும் வேர்க்கும், வாந்தி, வெப்பம் முழங்காலில் பாதிப்பு, தலைவலி, மலக்கட்டு உப்பு, புளி, இனிப்புச் சுவையுடன் வாய் இருக்கும். கறுப்பான காற்றுடன், பித்தமும் கபமும் முற்றிச் சேருவதால், இச்சுரம் தோன்றும்.

38. **சந்திகசன்னி**

கண்ணும் சிவந்தே கரித்தேயிருந்து
பலகாலும் எழுந்திருக்கும்
எண்ணுங் கழுத்தில் மிகவற்றி அறிவின்றியே
எழும்பொழுதுமே மூர்ச்சையாம்
நண்ணும் தலைக்குள் வலியதாய் வெதும்பிடும்
நடமாடியே கச்சை நிலையும்......
உண்ணின் எழுந்திவையான குற்றமே
செய்யுரை, சந்திக சன்னி சொலிலே.

உரை: கண் சிவந்திருக்கும். உறுத்தலுடன் காணப்படும். மயக்கம், அறிவு குன்றுதல் தலைவலி, வெப்பம், நடக்கும்போது உடை நழுவுதல், இவைகள் சந்திக சன்னிக்கான இயல்புகளாம்.

விளக்கம்: சித்த மருத்துவ நூல்களில் சன்னி எனப்படும் முப்பிணிநோய் 13 வகைகளாக வகைப்படுத்தப்பட்டுள்ளது. இந்நூலில் 13 வகைகளாக முப்பிணிநோய் எண்ணிக்கையில் ஒன்றுபட்டாலும், கூறப்படும் பெயர்களில் மாறுபட்டுள்ளது.

.................................................................................

38. துடிக்கும் என்றாதல் வேண்டும்.

39. **இந்திரசன்னி**

நடுவிரல், நெற்றி வெஞ்சுரமிகுத்தே
வடக்கு அனல் வாயினாலே
உடலாதி உண்மையிது, பல குணம் செய்யுமே
உற்ற அசனஞ் செல்லாமல்
கொடியதாகிய மெத்தாகம், மிகுதாகம்
குறித்த நாவில் கைகள், தளர
நடுமார்புடம்பு, குளிர், கைகால் வாராது
இதுதான் இந்திர சன்னி விதமே.

உரை: நடுவிரல், நெற்றியில் கொடிய வெப்பமாக இருக்கும். இது வடவனல் எனத் தோன்றும். பசியின்மையால் உணவு ஏற்காது. நீர்வேட்கை அதிகமாக இருக்கும். கைகள் தளர்ந்திருக்கும். நடுமார்பில் குளிர்ச்சியுடன் காணப்படும். கைகால்களை நன்கு இயக்குதல் இயலாது. இவை, இந்திர சன்னியின் இயல்புகள். இப்பெயருள்ள சன்னி நோய் வேறு சித்த மருத்துவ நூல்களில் கூறப்படாதது இந்நூலின் சிறப்பு என எண்ணலாம். யூகி முனிவர் தாந்திரிக சன்னி, அந்தக சன்னி, உருத்திரகசன்னி, சீதாங்க சன்னி, கண்டகபுச்சன்னி, பட்சி நேந்திர சன்னி, கர்னிக சன்னி, இரத்தேழு சன்னி, பிரலாப சன்னி, சிங்குவா சன்னி, அபின்னியாச சன்னி, என்பனவற்றைக் கூறுவார்.

40. **இரத்தக்கட்டு சன்னியின் குணம்**

பல்லடிகள், நாசி இருகண்களும் சொருகியே
பலபேதமாக உடனே
கோல் ஒடுங்கி இடைகோளா இயல்பாகியே
உற்ற துயரோடு, உப்பிடதுவாய்

.......................................................................

நா-பொலிவு; கோல் – திரட்சி. கோள் – வலிமை; உப்பு – உப்புச்சுவை

நல்ல குணமானது இல்லாமலே சற்றும்
நலமிலா வடிவாகும்.........
மெல்ல இரத்தக்கட்டியும், நலமான சன்னியிது
நால்வரும் புகலும்வகையே.

உரை: பல்லடிகள், மூக்கு, கண்கள் இவை பல்வேறு மாற்றமடையும். கண்கள் சொருகும். வலிமை, ஒடுங்கும் திரட்சியை இயல்புடனுள்ள வாய் உப்புச்சுவையுடன் இருக்கும். மனநிலை மாறும். இதுவே இரத்தக் கட்டி சன்னியின் இயல்புகளாகும். இச்சன்னிநோய், மதில் உள்ள ஊரில் அழகுடன் நுழைவது போல் வரும். உடலை அரண்மனையிலுள்ள மதில் சுவராக ஒப்பிட்டவர், சன்னி நோயை, பொலிவு என்ற சொல்லால், இழிவுச் சிறப்பாகச் சுட்டியுள்ளார்.

41. அறிந்தும், அறியாமலும், வயிறு கழியாமலும்
மற்றங்கு ஒடு புறமே,
செறிந்த கால்கையும் குளிந்து நாவதன்
சிவப்பின்றியே கறுக்கும்
நிறைந்த நீரும் கழியும், விசையினோடு
தலை, முகம் நிற்ற, முற்றே வலிக்கும்
அறந்தனையும் எண்ணாத மந்தசன்னி
சுரமடைவாகவே, கூறுமே.

உரை: குற்றங்களையுடை மந்த சன்னியின் குறி குணங்கள், மலக்கட்டு, சிறுநீரை உணர்வுடனும், உணர்வில்லாமலும் கழித்தல், கை கால்களில் குளிர்ச்சி, சிவந்த நாக்கு கறப்புநிறமாக இருத்தல், சிறுநீர் அதிகமாக வேகமாக வெளியேறுதல், தலை, முகம், இவற்றில் வலி, என்பனவாகும். வயிறு கழியாமலும் என்பதால் மலக்கட்டை, விசையினோடு நிறைந்த நீரும் கழியும் என்பதை அறிந்தும் அறியாமலும் என்பதுடன் பொருத்திப் பார்த்தால் இலக்கியச் சுவையானது தோன்றும்.

.......................................................................................................

அறம் – குற்றமின்மை; உளைதல்–மிக்கவருந்துதல்;
உளை – அழுகை

42. **சீதாங்க சன்னி**

குளிர்ந்து காய்ச்சல், இருமலும். மயிரும் சிலிர்த்திடும்
குலவு தண்ணீர் தாகமாய்
தளர்ந்து, பசியாமலே தானுமாய் மாரபினில்
தாக்க உளைப்புண்டாகியே
வளர்ந்த தலைவலியுமாய் உளையில் பொருந்தாமலே
மன்னும் பல குணமாகியே
வளைந்தயிவை சீதாங்க சன்னியென்றே சொல்வர்
மிகவும் நூல்வல்லோர்களே.

உரை: மருத்துவ நூல்களின் நுட்பத்தைக் கண்ட மருத்துவர்கள் சீதாங்க சன்னியின் இயல்புகளைச் சொல்வார்கள். அவைகள் குளிர்சுரம், இருமல், மயிர் சிலிர்த்தல், நீர்வேட்கை, செரியாமை, தளர்ச்சி, மிக்க வருத்தத்தை மார்பில் ஏற்படுத்துதல், தலைவலி என்பனவாகும். நல்ல உடலுக்குப் பொருத்தமில்லைமல் அழுதலைத்தரும் இக் குறிகுணங்களைக் கொண்டது சீதாங்க சன்னியாகும்.

43. **பிரலாப சன்னியின் குணம்**

பலகாலும் மருள்கொண்டு சொல்லாது, சொல்லியே
பாயிலும், படுக்கை தனிலே
கலவாய, அடிக்கடி எழுந்தே இருந்திடும்
கங்குலின் பொது சுரமாங்கில் வாழும்
பின்னையுடனே நகைத்திடும், கேடுழலைத்
தானு மளதாய்சில
பாலமிது பிரலாப சன்னிக் குணம்
சீர்கெடவும் வந்துவிடுமே.

உரை: பல நேரங்களில் மயக்கத்துடன், இயங்காமல் இருக்கும், பாய், படுக்கையில் படுத்து அடிக்கடி எழுந்து இயங்கும். இரவில் சுரம்

இருக்கும். மனநிலை மாறுபடும். மிகுநீர்வேட்கையும் இணைந்து உடல் நன்னிலை சீர் கெடத்தோன்றும். இவை பிரலாப சன்னியின் இயல்புகளாகும்.

44. **கண்டதீர சன்னிக் குணம்**

கழுத்து பதைத்திடும் அஞ்சு உறக்கவிசை
கடுக்கும் சுரத்தோடுபய
அழுத்து மொழித்திறமும் வாயும் வரண்டிடும்
அனேக உருவாகும் மார்பில்
செழித்துநீர் மெத்தக் குளிர்ந்திடும் மாறாது
இடற்செய்யும் பலங்கள் பலவாம்
விழுந்திடும் தரணி தன்னில் வருகண்டதிற
சுரம் வந்தில் வகை தீரவே.

உரை: கண்ட தீரச் சன்னியின் இயல்புகள், உடல் நடுங்கி, வலிக்கும், சுரத்துடன் அச்சம் உணர்வு இருக்கும். பேசும் தன்மை மாறும். வாய் வரட்சியாக இருக்கும். மார்பில் மிகவும் குளிர்ச்சியாக இருக்கும்.

45. **கண் குளிர்வு சன்னியின் குணம்**

கண்ணு மினுங்கிக் குழித்தே உரம் செறிக்க
கறுக்கும் நாவும் பல்லுமே
என்னும், சுரம் கடுக உழலை யுண்டாகும்
இனிய நித்திரையும் வாராது.
உண்ணும் படிக்கும், நினைவொட்டாது
கொண்டது மூவெட்டுங் குணங்கள் செய்யும்
நண்ணும்படி இவையள்கண் குளிர்வுசன்னி
குணம் நன்றா யறிந்து கொள்ளுமே.

---

45. போது என்றாதல் வேண்டும். மருள் – மயக்கம் செல்லாது என்றாதல் வேண்டும், உழலை – மிகுநீர் வேட்கை. தானு முளதாய் என்றாதல் வேண்டும்.

பாலம் – இணைப்பு

உரை: கண்ணின் ஒளிமங்கும், குழியில் வலி, இறுக்கி கறுப்பு நிறமாக பல், நாக்கு என்பன மாறும். எண்ணப்படும் சுரநோய், விரைவாக மிகுநீர்வேட்கையை ஏற்படுத்தும், உணவை உண்ணாது. முதுமையை நெருங்கச் செய்யும் இயல்பினைத் தரும். இவை கண் குளிர்வு சன்னியின் இயல்புகள்.

46. **மெலிவு சன்னியின் குணம்**

நீரும் கறுப்பாய் மிகுத்த திடமும் பலமும்
நிதமும் குறைந்து, வலமாய்
பெருங்கையும், காலுந் துனுக்குகென்றுடாத
தளர்வு பெற்று, முதுகும் எரிப்பாய்
அருந்தலைக்குள், வயிறுவலி தானம்
அடர்ந்தே, செரிந்துவிதமே
சாறும்படிக்கின்ற, கண்டில்வர மெலிவு
சன்னியென்றே அறியுமே.

உரை: மெலிவு சன்னியின் குறிகுணங்களைக் கூறுகின்றேன். உடலின் வலிமையானது நாள்தோறும் குறைந்து கொண்டே வரும். வலதுபுற பெரிய கை, கால் தளர்ச்சியடையும். முதுகில் எரிச்சல், தலைவலி, முதுகுவலி, சீரணமாகும் போது வயிற்றுவலி துன்பம் தரும். இவைகளைக் கண்டால், மெலிவு சன்னி என அறியலாம்.

47. **அதிக சன்னியின் குணம்**

ஒண்ணியதோர் வாய்வெதும்பும் வயிறுசிக்கும்
முற்றுழந்த தாகமும் உண்டாகும்
கண்டீர், தண்ணீர் நீர்த் தெளிவாகச் சுரமும்
அன்றி நலங்கிய............

................................................................................

47. மூ - முதுமை எட்டுதல் - நெருங்குதல்; மினுக்கும் - பொலிவு, ஒளி; குழி - பள்ளம்; உரம் - வலி; செறித்தல் - இறுக்குதல்; கடுகு - விரைந்துவா; உழலை - பெருந்தாகம்; எண் - கணக்கு.

வெண்பசிகள், அது சொல்லும் காலை

..........................................

வண்ணமுடன் புழுகுளியும் சன்னி தானே

அடவாக அறியுங்காலை துண்டுனெவேப்

பண்டிதர்கள் அறிந்தறிந்து சொல்வார்

அதிக சன்னி சுரங்கள் தானே.

உரை: நெருக்கமாக அதிக சன்னியின் குறி குணங்களை, மருத்துவ நூல்களைக் கற்றுப்பயன் படுத்தும் வல்லுநர்கள் கூறுவார்கள். வாயானது வாடி இருக்கும். நாக்கைச் சுற்றும்படியான அதிக நீர் வேட்கை, சுரம் என்பனவாம்.

## 48. கண்டக சன்னி

அங்கங்கள் எங்கும் புண்போல் இருப்பனவும்

அன்றியும், சந்துக்களிடம்

எங்கும் செறிந்து, (ப)தளி தரித்து வயிறானது

எரித்துக் கடுஞ்சுரமாய்

தங்கும் செல ஆகாரமதுவும் செல்லாதே

தரிக்கில் வெள்ளோக் காளமாய்

செங்கண் உறங்காது, மருளே பயின்றிடும்

செய் கண்டக சன்னியே.

உரை: எல்லா உறுப்புகளிலும் புண்ணைப் போல வலி மூட்டுப் பொருத்துகளில் இறுக்குதல் வயிற்றில் மழை போல இருந்து, எரிச்சலுடன் சுரமும் இருக்கும். உணவை உட்கொள்ள முடியாது. மீறின் உண்டால் உண்ண வாந்தியாகும். உறக்கம் வராது. இவை கண்டக சன்னியின் இயல்புகளாகும்.

..........................................

49. வெதும்பும் - வாடுதல் உழந்த - உழத்தல்; வருந்துதல் - உழற்றுதல் - சுழற்றுதல்; தண்ணிநீர்- இரட்டைக்கிளவி; தரித்தல் - தாங்குதல், இருத்தல். 50. பதளி - மழை

49. **அசுவமேகச் சன்னியின் குணம்**

பெறாத தொருக்காலும், மிகவும் சொல்லிடும்
பேதமற, அசனஞ் செல்லும்
ஏறாத்தண்ணீர், தாகமுண்டாய் உடம்பு
இளைத்தே, உரைக்கும் மொழிதான்
நேரான கண்ணுக்குள் நித்திரை மிகுமென
நிகழ்த்தினார், வாகடமெனத்
தோராத அசுவமேகச் சன்னிசுரமென்று
சேர்செப்பமுண்டாகவே.

உரை: சித்தமருத்துவ நூல்களை அறிந்த வல்லுனர்கள் அசுவமேகச் சன்னியைப் பற்றி செம்மையான கருத்துகளை ஒருவேளை அறிந்து சொல்லுவார்கள். இதன் இயல்புகள் மாறுபாடின்றி, உணவை உண்ணுவார்கள் உடல் இளைத்து, நீர் வேட்கையுடன் இருக்கும் தூக்கம் அதிகமாக இருக்கும். ஒரு வேளை அறியாமல் பெருமையுடன் பேசுவார்கள்.

50. **செங்கை கொட்டும் சன்னியின் குணம்**

மிகவே அரற்றி அழும், அறிவுண்டாகவே
இனவலந் தோர்கள் இதனையே
கைபோல் ஆற்றிலே, கைகளது கொட்டியேதன்
சீலையைப் பீறியே, புழ மூலமதில் அரைத்தன்றி
கையைப் பொருந்திடும், இப்படிச்செய் சிகமீது
உள்ளோரா அறி இக்குணம்.

உரை: செங்கை கொட்டும் சன்னியின் குறிகுணங்கள். உளநிலை மிகவும் மாறுபட்டதால், அழுது வாய்புலம்பும். கைகளைக் கொட்டும்.

.................................................................................................

பெறுதல் - அறிதல்; ஒருக்கால் - ஒருவேளை

50. பீறுதல் - கிழித்தல்; புழல் - உள்துளை, மூலம் - அடி; செய் - செய்கை் செகமீதுள்ளோர் - என்றாதல் வேண்டும். செகம் - உலகம்.

உடைகளைக் கிழிக்கும். துளைகளை ஏற்படுத்தும். அடியை அரைக்கும். கைகளைப் பொருத்தி ஒலியை ஏற்படுத்தும். செய்கைகளைப் புரிவர். உலகிலுள்ள இதன் இயல்புகளை அறிதல் வேண்டும்.

51. **கண்டக சுரம்**

துடியிடைக்கால் குளிர்ந்து
துணுக்கென விழித்துபின்னை
அடியட்டதழுதாற்போலே
அயர்ந்தகண் சொருகுமாகில்
முடிவிலும் பிள்ளைக் காமம்
அடைவிலா உளமன் கண்டக
ஆவது ஆகமென்றே.

உரை: வேகமுடன் துன்பத்தை கால்களுக்குத்தரும் குளிரும். அடிப்படையாகக். கண் தளர்ச்சியடையும். உறங்குவதான நிலையில் கண்கள் இருக்கும். உடன், அச்சமுடன் அடுவது போன்ற நிலையுடன் கண்கள் இருக்கும். இளமையாக இன்பத்துடன் கணிக்க இந்நோயைப் பற்றி அறியலாம். எல்லையில்லாத மனயெழுச்சியுடன் இருக்கும்.

52. **குழந்தைக்கு ஆமசுரத்தின் குணம்**

ஆமசுரத்தின் குணஞ்சொல்லில்
அதிகமாக வெதும்பாதே
சாமந்தோறம், வெதும்பிவிக்கும்
தன்னைத்தானே உறங்கிவிக்கும்
சேமமான உடம்பதனைச் சிவக்கப்
பண்ணும், உடம் பெய்யும் நடுக்கி
இருக்கு மதுவன்றே.

..........................................................................

குறிப்பு:51. துடியிடை - வேகம், இடை - இடம், துன்பம்; அடி - அடிக்கடை. அயர்தல் - தளர்தல் ; சொருகுதல் - துணுக்கம் - அச்சம், நடுக்கம்.

52. ஆமசுரம் என்பது 64 வகை சுரவகைகளில் ஒன்றாக கூறப்பட்டுள்ளது. உள்-உள்ளம், மனவெழுச்சி; அடைவு - ஒழுங்குமுறை ; பிள்ளை-இளமை. காமம் - இன்பம், விருப்பம்.

உரை: மனிதர்களுக்கு வரும் 64 வகைகளான சுரத்தில், ஆம சுரமும் ஒன்று. ஆமம் என்பது குடலும், குடலையடுத்த பகுதிகளாகும். குடலில் வெப்பமானது ஒவ்வொரு சாமத்துக்கும் அதிகமாகும். தூக்கம் வரும். உடல் சிவந்து, பசியில்லாமல், நடுங்கும். இவை ஆமசுரத்தின் குறிகுணங்களாகும்.

### 53. சிலேத்துமத்தின் குணம்

பேர்நாவுலரும் பெருஞ்சித்தியும் உறக்க முண்டாகும்
சீராரும் உடம்பு குளிரும், சிறந்த சுமலும் போல வெளுக்கும்
நேராய் மூக்கில், வாயில், நீருண்டாக நாட்செல்லும்
தீராவெளுப்புக்கண்வெளிறும், தீயும் வெதும்பும் வேண்டிடுமே.

### 54. வாதசேத்துமக் குணம்

வேண்டும் பலகால் கொட்டாவி மெய்யில்
உரோமம் சிலுசிலுக்கும்
தூண்டுமயக்கம், தெளிவுண்டாம்
தொடைக்கம் கீழ், கையும் சோர்விக்கும்
மான கையிரண்டும் குடையும்
வாதசேத்தும குணங்களே.

உரை: நாக்கு வரண்டு, அதிக வாந்தியும் தூக்கமும் ஏற்படும். உடல் குளிர்ந்து (வெண்) தாமரையைப் போல இரத்தமின்றி இருக்கும். மூக்கு, வாயில் நீர் ஊறும். கண்வெண்மையுடன் காணப்படும். உடல் வாட்டமுடன் தளர்ந்து தோற்றமளிக்கும். இவை கபநோய்க்கான அறிகுறிகளாகும்.

வாத சிலோத்துமத்தின் அறிகுறிகள் உடலிலுள்ள உரோமங்கள் கூச்செரிதல், பலமுறை கொட்டாவி, மயக்கமாக இருத்தல், அறிவு தெளிவாகத் தோன்றுதல், தொடையின் கீழ்ப்பகுதி சோர்வுடன் இருத்தல், கைகளில் குடைச்சல் என்பனவாகும்.

## 55. சன்னி (வாத) சுரம்.

உடல் சேர் சன்னி சுரத்துண்டாம்
குணத்தை உரைத்திடுகில்,
பிடர்நேர்நாவும், வரட்சியதாம்
பெருகதாக முண்டாகும்
விடமே போல் மயக்கம் முண்டாமி
தற்கு நாவாய்நாசி லிண்டே
கடல் போல் நாக்குக் கறுப்புக்கண்டே
கரத்தனதனைப் பலகால் வணங்கே.

உரை: சன்னி சுரத்தின் குணமாவது, நாக்கு உலர்ந்து காணப்படும். நீர்வேட்கை அதிகமாக இருக்கும். நஞ்சுக்கடியால் ஏற்பட்டது போன்ற மயக்கமும், நாக்கு, வாய், மூக்கு என்பன கடலின் கறுப்பு வண்ணமாகத் தோன்றும். இக்குறிகளைக் காண, கை கொண்டு பல முறை வணங்கவேண்டும்.

## 56. மாந்த சுத்தின் குணம்

இளஞ்சேர் மாந்த பித்தமென்றிதுதான்
செய்யுங் குணங்கேளாய்
தினந்தான் சற்றே குளிர்ந்திருக்கும்
சிக்கி மலமும் கழியாது
கறைதான் படவே, வெதும்பிக்கும்கை
கால் முடக்கும் நாபிச் சுற்று
மனந்தான் சலிக்க, மிக வலிக்கும்
மாந்தவயிறு கழிவகை செய்யுமே.

............................................................

55. பிடர் - கழுத்து.

56. இளமை - மென்மை. கனம் - பாரம்

கழி - மிகுதி; வகை - பயன்

குறிப்பு : நாவாய் என்பதற்கு கப்பல் என்றும், நாக்கு, வாய் என்றும் பொருள் கொள்ளலாம். கடல் போல் நாக்கு என்றதால் மேலே அத்துடன் தொடர்புடைய நாவாய் என்பதான சொல்லை நூலாசிரியர் கையாளுகின்றார்.

கறுப்பு - கறை ; கரம் -கை.

உரை: மாந்தபித்தத்தின் குறிகள், இயல்புகளை அறியவும். மென்மையுடைய மாந்த பித்தம், நாள்தோறம் சற்று குளிர்ச்சியுடன், மலக்கட்டுடன் பாரமாகத்தோன்றும். வருத்தத்தைத் தரும். கைகால்களை இயங்காமல் செய்யும். மனம் நோகும்படி, தொப்புள் பகுதிகளில் வலி இருக்கும். மாந்த, வயிறு, மிகுதியாக பயன்பெறச் செய்தல் வேண்டும்.

57. **தாப சுரம்**

உடம்பில் தோன்றும் தாபசுரமுற்ற குணத்தைக் கேளு
இனித்திடச் சோர்வைமுண்டாகும் தீராதாபமுண்டாம்

படர்ந்த கால்கை வயிறு எரிக்கும் பல்லும் நாவும்
பசந்திருக்கும்...........................................
கிடந்துபுரள எழுந்திருக்கும் கிளறும் நாவும் வரண்டிடுமே.

58. வரளும் நாக்கு அக்காமற் போலவே
வயிறு தானம் எரிப்பது வாய் விடும்
புரளும் வாய்தான் மிகப் பிதற்றும்
போத உறங்குமிகச் சிரிக்கும்
திரளும், திரளும் உழற்று செய்யும்
வார்த்தை பலதர்க்குத் தாளம் போல்
குளிரும், கழுநீர், தோன்றிர் பூவைப்
போட்டுக்கட்டே.

உரை: தாப சுத்தால் நாக்கு உலர்ந்து இருக்கும். வயிற்றில் எரிச்சல், அறிவு மங்கி, வாய் புலம்புவார்கள். உணர்வு வரும்போது அறிவு மாறுபட்டு, சிரிப்பார்கள். உருண்டையாகி மிகுதியாக வலியால் புரளச்

........................................................................................................

57. பாடல் சரிவர அமையவில்லை

58. திரள் – மிகுதி; உழற்று – சுழற்றுதல், வலியால் புரளுதல்; தாளம் – தாள் – திளவுகோல்; அம் – சோர்வை – சோர்வு – தளர்ச்சி; பசந்தல் – வேறுபடுதல்.

செய்யும். குளிர்ச்சியாக உடல் இருக்கும். திறவுகோல் போன்று பல சொற்களைப் பேசும்.

உடலில் வரும் தாப சுரத்தின் இயல்புகள்; வாயில் இனிப்புச்சுவை, உடல தளர்ச்சி, அதிக நீர்வேட்கை, கை கால், வயிற்றில் எரிச்சல், பற்கள், நாக்கு பச்சை நிற மாக மாறபட்டிருக்கும். நாக்கு உலர்ந்திருக்கும், படுக்கையில் படுத்துப்படியே புரளும், எழுந்திருக்கும்.

59. **பித்தவாத சுரம்**

**மாறும் பித்தவாத சுரம் அருங்குணத்தைக்கேளு**
**கூறும், கிளியே பலவிதமாய்க் குழையும் வயிறுகழியும்மிக**
**வீறும், வயிற்றின் நடுவே, வேண்டாதுரைக்கு அன்ன**
**உறும் தண்ணீர் வேண்டுமந்த உடலும் சற்றே வச்சிலுமே.**

உரை: பித்தவாத சுரத்தின் மாறுபட்ட இயல்புகளைக் கேட்கவும். வயிறுபல வாறு மலத்தை வெளியாக்கும். நடு வயிற்றில் மிகுதியாக இளகும். உணவில் நாட்டமில்லாமல், நீரை அதிகம் அருந்தும். வேண்டாத அத்தன்மையான சொற்களைக் கூறும்.

60. **பித்த சுரத்தின் குணம்**

**சொல்லும் பித்த சுரத்தின்வகை**
**துலங்கக் கேளுமிக்க குளிரும்**
**மெல்ல மூச்சுண்டாயிருக்கும்**
**மெத்தவெதும்பும் இருமலுண்டாம்**
**வலநரம்பு வரண்டிருக்கும்**
**வதங்க உடம்பு, மிகப்பித்தும்**
**நல்லவேர்வும், தலைவலியாம்**
**நலங்க உடம்பு அடர்ந்தடந்தே.**

..........................................................................

59. கிளியே என்பது பெண்ணை விளிக்கும் சொல் ; மகடூஉ முன்னிலை. வீறுதல் - மிகுதல்; குழைதல் - வருந்துதல். அன்ன - அத்தன்மையானவை ; வேண்டாதுரைக்கு அன்ன - எனபதற்கு உணவை விரும்பாது எனவும், விருப்பமில்லா சொற்களைக்கூறும்.

61. அடர்ந்த தலையும் துய்யக் கழுத்தடியும்
விடாமலே வியர்க்கும்.............
துடர்ந்த இருகண் வெளுத்திருக்கும்
சொல்லும் பரிகாரம் கேளாய்.

உரை: பித்த சுரத்தின் இயல்புகளை நுணுக்கமாக அறிவாய். அதிகமான குளிர், மூச்சுத்திணறி மெதுவாகவிடுதல், வருத்தமாக இருக்கும், இருமல், வலநரம்பு வரட்சியாக உலர்ந்து உடல் வாடி இருத்தல், அதிகமான பித்தமும் வியர்வையும், தலை வலியும், உடல் வருந்தி இருக்கும். வரிசையாக இவ்வழியில் அறியலாம்.

62. **குளுந்த சுரத்தின் குணம்**

சிரத்தில் அவையத் தீங்கு உடம்பினுந்தான்
செரியப்பூசி மாற்றி விட்டால்
உரைத்த சிலேத்தும சுரத்துடன்
பித்த சேத்தும சுரம்
வரட்சி காத்த இவையும் பழவெதுப்பும்
கவனம் செய்யும் தலைநோயும்
பரத்தில் ஓடிவிடுமென்று
பகர்ந்தார் முனிவர் பார்தனிலே.

உரை: கபசுரம், பித்த கபசுரம், இவைகளைப் பற்றிக் கூறிய பின்பு, வரட்சி பழைய வெப்பம், கேடு செய்யும் தலைவலியும் உடன் நீங்கும் என்ற உலகத்திலுள்ள மக்களுக்கு முனிவர் கூறினார்.

..............................................................................

60. பித்து – பித்தம் ; நலங்கு – வருத்துதல் அடந்தடந்தே என்பது அடுத்தடந்தே என்றாதல் கூடும். அடுக்கம் – வரிசை. தடம் – வழி

61. குறிப்பு : முதல் இரண்டு அடிகள் மருந்துகளைப்பூசும் முறைபற்றிக்கூறுகின்றது. துய்ய– கூர்மை அடர்தல் – வருந்துதல்
"தவலம்" என்றாதல் வேண்டும். தவல் – கேடு. பரம் – உடன்
தலைப்பில் குளுந்த சுரம் என்பது பாடலில் முழுத்த சுரம் என்று வருகின்றது. முழைத்த சுரம் என்றாதல் வேண்டும். முழைத்தல் – துளைத்தல். சீர் – அழகு. வாய் – இடம்.

63. **வேறு**

பார்மேல் முழுத்த சுரந்தனுக்குப்
பகரக்கேளுந் தலை சுற்றும்
சீர்வாய், கைக்கும் பற்கடிக்கும்
சிவக்கும், விழியும் சிதறி நிற்கும்
நீர்தான், மூக்கில் உருகி நிற்கும்
சரீரமும் உழற்றம்
கார் சேர்கண்ணீர், பூளையுண்டாம்
கலையை மறைக்கும் வேர்வேழமே.

64. வேர்க்கும், முறுக்கும் வயிறிழியும்
வீணே பகர்ந்து தலை நோவாம்
பார்க்கில், வெறிபோலே மயக்கும்
பகர்ந்து, நாவும் புண்ணாகும்
எறகு சீர் கேடறிவுகெடும்
ஏற்றவாயும் பிருதுவிக்கும்
ஏற்கும் இளருலையில் சோறு
ஏழுநாளும் வைத்துண்ணே.

உரை : உலகில் வரும் துளைக்கும் சுரத்தின் இயல்புகளைக் கேளுங்கள். தலை சுற்றல் அழகான வாயில் கசப்புச் சுவை, பற்களைக் கடித்தல், கண்களில் பீளை, அச்சமுடன் சிவப்பாகக் கலங்கி, மழையென நீருடன் இருத்தல், மூக்கில் நீர் வடிதல், உடல் வருந்துதல், என்பனவாகும். உடலில் வியர்வை கழிதல், தலைவலி, வெறி என்பது போல மயக்கம் பற்கள் நாக்கில் புண். வாய் அரற்றல், அறிவு மாறுபடுதல் என்பனவாகும். 7 நாள், உலையில் புரளும் சோற்றினை உண்ணவும். இங்கு உலைச்சோறு என்பது அரிசிக் கஞ்சியாதல் கூடும்.

# மருந்தியல்

65. **பித்த சுரத்தின் குணம் கசாயம்**

ஏலமதி மதுரமோடு, இருவேலியின் வேர்
இலாமிச்சங் கொழுங்கலைக் கொம்பு
இலுப்பைப்பூ, கொடி, நன்னாரி பேய்புடல்
சீலமுத்தம், தொடையிலை, பற்பாடக
அஞ்சுமிடித்துக் கோபமுள்ள பன்னிரு
கழஞ்சு குடி நீரிட்டுக் காய்ச்சிக் கொள்ளே.

உரை: ஏலம், அதிமதுரம், இருவேலி, விலாமிச்சவேர், இளமான்கொம்புத்தூள், இலுப்பைப்பூ, அதன் கொடி, நன்னாரிவேர், பற்பாடகம், முத்தக்காசு, ஆடாதோடை இலை, இவைகளைச் சமஎடையில் கொண்டு, அடுப்போற்றிக் காய்ச்சிக் குடிநீராக்கிக் குடிக்க, பித்த சுரம் நீங்கும். அஞ்சு இடித்து என்பதால் நன்னாரி பேய்ப்புடல், முத்தக்காசு, ஆடா இலை, பற்பாடகம் இவைகளை இடித்துக் கொண்டு, பின்னர் ஏனையவற்றுடன் சேர்த்துக் கொள்ளவும்.

66. **சேத்தும சுரக்குடிநீர்**

தூதுவளை இம்பூரல் ஆடாதோடைத்
தூய்ய சிறு காஞ்சோரியும் முத்தக்காசு
ஏதுலதாம் கற்றாழைக் கண்டங்கத்தரி
ஏற்ற சிறு வழுதலைச் சுக்கு இடித்துக்கூட்டி
பேதமறப்பன்னிரு கழஞ்சு கூட்டிப்
பெரும்புனல் இருநாழி உரியாகக் காய்ச்சி
ஓதிரிய திப்பிலிப் பொடியும் தேனம் கொள்ள
ஓடிடும், சேத்தும சுரம், உண்மைதானே.

..............................................................................

65. சிதறி – மழை ; கார் – அச்சம். எறகு – எறகு என்பது எயிறாதல் கூடும் – எயிறு – பல்; மிளிர்தல் – புரட்டுதல்.

66. முதலடி, தேரையர் குடிநீர் 100 இல் உள்ளது. CCRAS வெளியீடு.

உரை: தூதுவளை, இம்பூரல், ஆடாதோடை, சிற காஞ்சோரி, முத்தக்காசு, கற்றாழை, கண்டங்கத்தரி, சிறுவழுதுணை, கண்டங்கத்தரி, சுக்கு - 12 கழஞ்சு - தண்ணீர் - இருநாழியளவு எடுத்துக்கொண்டு, அடுப்பிலேற்றிக் காய்ச்சவும். உரியளவு வற்றியபின் வடித்துக்கொண்டு, தேன், திப்பிலிப்பொடியையும் சேர்த்து உண்ண, கபசுரம் நீங்கும் என்பது உண்மையாகும்.

67. **தோட சுரத்திரக்குடிநீர்**

குழல்சீரார், நன்னாரி முத்தக் காசின்
எண்பேய்ப்புடல், பேரமுட்டி
வழக்கமாம் கூவிளைவேர், குளவிக்கூடு
வார்த்திடு, செவ்வல்லிக் கொடி
செழுங்கழுநீர், மூலம் சுழல் பொருந்து
நீர் நாழிக்கறு, கழஞ்சாச் சுருக்க
உழக்காய் இஞ்சிச்சாறுழக்கு கூட்டி
நீதான் கொள்ள நாளமுடைந்ததொடு
தோட சுர முண்மை தானே.

உரை: அழகுக் கூந்தலையுடையவளே, தோடசுரம் நீங்கக் குடிநீர்: நன்னாரி, முத்தக்காசு, பேய்ப்புடல், பேராமுட்டி, கூவிளவேர், குளவியின் கூடு, செவ்வல்லிக்கொடி, செழுங்கழுநீர்க் கிழங்கு, திப்பிலி மூலம், ஆறுகழஞ்சு, ஆற்றுநீர் நாழி இவற்றை அடுப்பேற்றிக் காய்ச்சி வடிகட்டவும். இத்துடன் உழக்கு இஞ்சிச் சாற்றைக் கூட்டி அருந்த, தொடுவதால் ஏற்படும் தோட சுரமானது நீங்கும்.

68. **சன்னி சுரம் தீரக் குடிநீர்**

இலந்தையிலை நன்னாரி சீந்தில் தண்டு
இருவேலி, இலாமிச்சம் எழு பூநாகம்

.................................................................

66.குறிப்பு: பெரும் புனல் இருநாழி என்பதை இருநாழிகையளவு தண்ணீரைக் காய்ச்சி என்றும் பொருள் கொள்ளலாம். நாழி - படி.

கலந்ததொரு பேய்ப்புடல், முத்தக்காசு
கனகோட்டம், சுக்குடனே ஆடாதோடை
தலம் புகழும், முலைப்பாலும், இஞ்சிச்சாறு
தற்சமனாய் இரு நாழி நீரிட்டு
உலந்ததொரு திப்பிலி, மென் பொடியயே தூவி
உகந்து கொள்ள சன்னிசுரம் ஒடுந்தானே.

உரை: இலந்தைமர இலை, நன்னாரி, சீந்தில் கொடியின் தண்டு, இருவேலி, விலாமிச்சம், மண்புழு பேய்ப்புடல், முத்தக்காசு, கோட்டம், சுக்குஆடாதோடை, தாய்ப்பால், இஞ்சிச்சாறு - இரண்டு நாழி நீரில் போட்டுக் காய்ச்சி வடிகட்டவும். உலர்ந்த திப்பிலியின் பொடியைத்தூவி, விருப்பமுடன் உட்கொள்ள, சன்னி சுரம் தீரும்.

விளக்கம்: தலம் புகழும் முலைப்பால் என்பது சீர்காழியில் திருஞானசம்பந்தருக்கு, பார்வதி தேவி தாய்ப்பால் தந்துள்ள புராணக் கதையை ஒட்டி எழுந்த தொடராகும்.

69. **வேறு**

கற்றாழைச் சருகு வேப்ப நாக்கும்
கண்டங்கத்தரிவேர்
உற்றான கற்கண்டு கடுகு ரோகணியும்
நீருறுங்காரம், பூவினுடனே
வேற்றாரும் முந்திரிகைப் பழமுங்கூட்டி
பிசைந்து, வெந்தசாறுழக்காய்
வற்றாத, முலைப்பால் முக்கூறு கூட்டிக்கொள்ள
வன்மமாம் சன்னியிவை தீருந்தானே.

உரை: கற்றாழையின் உலர்ந்த மடல், வேப்பம் புண்ணாக்கு கண்டங்கத்தரிவேர், கல்கண்டு, கடுகு ரோகணி பூநீறு, சீனாக்காரம், கிராம்பு, வேலமரப் பூ, இவற்றை சம அளவு எடுத்துக்கொள்ள வேண்டும். பிசைந்து கொள்ளவும், பின் அடுப்பிலேற்றிச்

சூடுபடுத்தவும், வடிகட்டவும். ஆழாக்கு அளவுக்கு மூன்று பங்குத் தாய்ப்பால் சேர்த்துக் குடிக்க, வலிமையுள்ள சன்னியானது விலகும்.

70. **திரிதோடம் தீரக்கசாயம்**

துய்ய சிறு காஞ்சோரி வட்டத்திருப்பிவேர்
தூதுவளை, நன்னாரிவேர்
எய்யு ஆடாதோடை, சிறு வழுதலைவேர்
இனிய கண்டங்கத்தரிவேர்
மெய்யுலவு நெல்லிச் சுக்கோடு கடுக்காய்
மிகுதூன்றிக் காஞ்ச நீரில்
உய்யவே தேனினோடு திப்பிலி
அளவிக் கொள்ளோடு திரிதோடமே.

விளக்கம்: கூறு என்ற சொல் கமரி மாவட்டத்தில் வழங்கும் சொல், எனவே நூலாசிரியர் குமரிமாவட்டத்தைச் சேர்ந்தவர் அல்லது வாழ்ந்தவர் என அறியலாம். வேல்தார் என்பது வேலமரத்தின் மாலை என்று பொருட்பட்டாலும் , இங்கு தார் என்பது மாலையைக் குறிக்காமல், மாலை செய்யப் பயன்படும் பூவை உணர்த்தியது. ஆகுபெயர்.

உரை: மென்மையான சிறு காஞ்சோரி, வட்டத் திருப்பி, தூதுவளை, நன்னாரி, ஆடாதோடை, சிறு வழுதுணை, கண்டங்கத்தரி இவைகளின் வேர்கள் இவற்றை சூடுபடுத்தி வடிகட்டவும். மேலும் திப்பிலி, தேன்சேர்த்து, அருந்தி, திரிதோடம் நீங்கி வாழ்வர்.

.....................................................................................................

69.காரம் என்று முடிவடையும் பொருள்கள் சீனாக் காரம், வெங்காரம் என்பன. பூ என்று முடியும் பொருள் கிராம்பு ஆகும். மலர் என்ற சொல் குங்குமப் பூவைக் குறித்தாலும், இடம் நோக்கி பொருள் கொள்ளப் பட்டது.

நீறும் காரம் என்றாதல் வேண்டும்.

துய் – மென்மை; காஞ்ச – காய்ந்த என்பதின் திரிபு. அளவு – வரையறை

71. **சந்நி தீரக் கசாயம்**

சோர் பெரிய ஆடாதோடையிலை
சிறுவழுதலை தூதுவளை நன்னாரி
வேர், கற்புடைய நற்சிற்றாமுட்டி வேர்
சுக்கு கலந்து முத்தக் காசுடன்
பற்பாடகச் சந்தனம் இலுப்பையின்
பூ இவைகள் பன்னிரு கழஞ்சுகொண்டே
பிற்படையநீரும், இருநாழிடெடொன்றாய்
பேசிக்கோ சந்தி கெடுமே.

உரை: பெரிய ஆடாதோடையின் இலை, சிறுவழுதலை, தூதுவளை, நன்னாரி, சிற்றாமுட்டி என்பவைகளின் வேர்கள், சுக்கு, முத்தக்காசு, பற்பாடகம் சந்தனம், இலுப்பைப்பூ -12 கழஞ்சுகள் தண்ணீர் - இரண்டுநாழி, அடுப்பேற்றி 1/8 பங்காகக் குறுக்கிவடிகட்டவும். இக்குடிநீரை அருந்த சன்னிபாத நோய் நீங்கும்.

72. **சன்னி தீரக் குடிநீர்**

சீந்தில் முத்தக்காசு கூவிளை வேருடன்
சீர் மருவு, பேய்ப்புடல் இவை மாய்ந்ததோர்
மாய்ந்ததோர் கொத்தமல்லி சுக்குடன்
மிகு சிற்றாமுட்டி வேர் தன்னுடனே
மாய்ந்ததோர் இலாமிச்சம் நன்னாரி
வெண்கடுகு ரோகணியுடன்
கெந்ததோர் இருநாழி நீர் உழக்காக்கிக்
கொள், திகழ் சன்னி நட்டமாமே.

உரை: சீந்தில், முத்தக்காசு, கூவிளவேர், பேய்ப்புடல், கொத்தமல்லி, சுக்கு, சிற்றாமுட்டிவேர், விலாமிச்சவேர், நன்னாரிவேர், வெள்ளைக்கடுகு ரோகணி சமஅளவு - தண்ணீர் 2 நாழி கலந்து

கொண்டு அடுப்பேற்றிச் சூடு பண்ணி உழக்காகக் குறுக்கவும். வடி கட்டி அருந்த சன்னி பாத நோய் நீங்கும்.

73. **இரத்தக்கட்டி சன்னி தீரக் கசாயம்**

பூசணித்தண்டு முத்தக்காசு தன்னுடன்
பொற்பானகம் பந்துராய மா சரக்கும் கம்பம்
சிறுவழுதுணையின் வேர் கொத்தமல்லி
யோடு பற்பாடகம்
தேசமிகு சுக்குடன் நன்னாரி
திகழும் நீரில் காய்ச்சியே
நேசமுடனே கொள்ள நின்றடும் இரத்தக்கட்டி
சன்னி மாறிவிடுமே.

உரை: பூசணித்தண்டு, முத்தக்காசு, சிறுவழுதுணைவேர், கொத்தமல்லி, பற்பாடகம், அறுகம்புல், சுக்கு, நன்னாரி இவற்றைச் சமஎடை எடுத்துக்கொண்டு நீரிட்டுக் காய்ச்சிக் குடிநீராக்கிக் கொண்டு அருந்த இரத்தக் கட்டி சன்னி நீங்கும்.

74. **மந்தசன்னி தீரக் குடிநீர்**

யோரகு இருவேலிவேர், விலாமிச்ச
இனிய பற்பாடக மதுவும்
சீரான, சுக்குடன் சிறு தேக்குமே
சமன் சேர்த்து மிகவே கூட்டி
யப்பா ஒருரைத்த இருநாழி நீரில்
காய்ச்சிப்பத(ம்) உழக்காக இறுத்தே
கோரோசனை, முலைப்பால் கூட்டியிட
மாறிடும் கூறில் மந்தசன்னியே.

உரை: இருவேலிவேர், விலாமிச்சம் வேர், பற்பாடகம் சுக்கு, சிறுதேக்கு - சமஎடை எடுத்துக்கொள்ளவேண்டும். இரு நாழி தண்ணீரில் போடவும். பின் அடுப்பேற்றிக்காய்ச்சி. உழக்களவு குறுக்கி, வடிகட்டவேண்டும். வடிகட்டிய குடிநீரில் கோரோசனை

..........................................................................

கம்பம்-நடுக்கம். துராய் - அறுகம்புல். பொற்பு - அழகு.

தாய்ப்பால் சேர்த்துக் குடிக்க, மந்த சன்னி நீங்கும்.

75. **சீதாங்க சன்னி தீரக் கசாயம்**

ஏலஇலவங்கம், நற்சந்தனம் போரோர்
இடுபூசணித் தண்டுடன்
கொலுஞ் சுரைத்தண்டு, தூதுவளை
வேருடன் சுக்கு ஒக்கக்கூட்டியே
சால, இருநாழிநீர்தானும் உழக்காகவே
தான் காய்ச்சிக் கொடுத்தால்
சீதலமிகு, சீதாங்க சன்னிசுரம்
ஓடிடும், செப்பினோம் பலகாலுமே.

உரை: ஏலம், கிராம்பு, நல்லசந்தனத்தூள், சுரை, பூசணித்தண்டு தூதுவளைவேர் சுக்கு இவற்றை இருநாழி தண்ணீரில் போடவும். அடுப்பேற்றிக் காய்ச்சி, உழக்களவு பதத்தில் எடுத்துக்கொள்வும், குளிர்ச்சி மிக்க சீதாங்க சன்னிசுரம், இக்குடிநீரால் நீங்கும்.

76. **பிரலாப சன்னி தீரக்கசாயம்**

சிறுகாஞ்சோரி, சிறுதேக்குச்
சிறந்த வட்டத் திருப்புயுடன்
உறலாம் சுக்கு, நிலவேம்பு
உகந்தசிறிய வழுதுணையு
மறிவார், முத்தக்காசுடனே
அளந்து நீர் நாழிவிட்டுக்
குறையா, உழக்காய்க் காய்ச்சிக் கொள்வீராய்
கூறும், பிரலாப சுரம் கெடுமே.

உரை: பிரலாபசுரம் நீங்கக்குடிநீர் காஞ்சோரி, சிறுதேக்கு, வட்டத்திருப்பி, சுக்கு, நிலவேம்பு, சிறுவழுதுணை, முத்தக்காசு - சமஎடை நாழியளவு தண்ணீருடன் சேர்த்து, காய்ச்சிக் கொள்ளவும். உழக்களவு சுண்டியபின் எடுத்து வடிகட்டிக் கடிக்கவும்.

77. **கண்டதீரசன்னிக்குக் குடிநீர்**

அரத்தை தேதாரமுடனானக் கடுகுரோகணியும்,
தெரித்த சிறுதேக்கு வழுதலைவேர் - சீராய் விளங்கும்
சுக்குடனே
உரைத்த இவைபன்னிரு கழஞ்சு முகந்தே இருநாழி
நீரிலிட்டுக்
கரைத் துழக்காய்க் காய்ச்சிக் குடித்தால், கண்டதீரன்
ஓடிடுமே.

உரை: அரத்தை, தேவதாரம், கடுகுரோகணி, சிறு தேக்கு, வழுதலையின்வேர், சுக்கு - 12 கழஞ்சு வகைக்கு எடுத்துக் கொள்ளவும். பொடி செய்து கொண்டு இரு நாழித் தண்ணீரில் கரைக்கவும். பின் காய்ச்சி, உழக்களவு பதத்தில் எடுத்து, வடிகட்டவும். இதை அருந்த, கண்டதீரச் சன்னி பாதநோய் நீங்கும்.

78. **கண்குளிர்வு சன்னி தீரக் குடிநீர்**

மட்டாக் கிராம்புடன் கடுகு ரோகிணியும்
வன்மை செறி பற்பாடகமும்
வெட்டால் மிகுந்த கண்டகாரி வேருடன்
மிகுந்த சுக்கும் கூட்டியே
தட்டாத காட்டினில் மல்லிகைத்தண்டும்
தழைத்த, பன்னிரு கழஞ்சாய்
கடாக் காய்ச்சிக் குடித்தவுடன் ஓடிடும்
கண்குளிர்வு சன்னிசுரமே.

உரை: கண்குளிர்வு சன்னிக்கான குடிநீர் கிராம்பு, கடுகரோகணி, பற்பாடகம், கண்டங்கத்திரி வேர், சுக்கு, மல்லிகைத் தண்டு வகைக்கு 12 கழஞ்சு - இவற்றை பெரிய பாத்திரத்திலிட்டுக் காய்ச்சி, வடிகட்டி அருந்தவும். கண் குளிர்வு சன்னி நீங்கும்.

..........................................................

77. குறிப்பு: நீரிலிட்டுக் கரைத்து என்ற சொல்லால், பொடி செய்துகொண்டு நீரில் கரைத்துக் கொள்ள வேண்டும் என்பதைக் குறிப்பால் உணர்த்தியுள்ளார்.

79. மெலிவு சன்னி தீரக் குடிநீர்

பாதிரிகூவிளை முன்னைப் பெருவாகை
பார்முழுதும்தேன், குமிழ் சுக்குச் சிற்றாமல்லி
பேதமில்லா நன்னாரிப் பேராமல்லி
பேதமில்லா நன்னாரிப் பேராமல்லி
பெறல் எனச் சிற்றாமுட்டி பேராமுட்டி
தெமில்லா க்கண்டங் கத்தரி நெருஞ்சில்
ஏற்றமிகு, இருநாழியுழக்காய்க்காய்ச்சி
ஒதறிய, இஞ்சிச்சாறு உழக்கு கூட்டி
உகந்துகொள் சன்னி சுரமோடுந்தானே.

உரை: சன்னி சுரம் நீங்கக் குடிநீர் பாதிரி, கூவிளம் முன்னை, பெருவாகை, நன்னாரி, குமிழ், தேன் சுக்கு, சிற்றாமல்லி, பேராமல்லி, சிற்றாமுட்டி, பேராமுட்டி, கண்டங்கத்தரி, நெருஞ்சில் சமஅளவு. தண்ணீர் இரண்டு நாழி. இதை உழக்களவு வரும்படி காய்ச்சிக் குறுக்கவும். வடிகட்டி, பின்னர் தேனும், இஞ்சிச்சாறு உழக்களவு சேர்த்துக் குடிக்கவும்.

............................................................................................................

78. கடா – காய்ச்சும் பெரிய பாத்திரம்.

79. குறிப்பு : தலைப்பில் மெலிவு சன்னி என வந்துள்ளது. ஆனால் பாடலில் சன்னி சுரம் நீங்க என வருகின்றது.

80. **அதிக சன்னி தீரக் குடிநீர்**

நொச்சியிலைப் பற்காடகம், பேராமுட்டி
நோயதாக உலர்ந்த பூசணியின் தண்டு
பச்சை நிறச் சுக்கு, நற்றிப்பிலியுமித்துப்
பரிவாக பன்னிரு கழஞ்சு கொண்டுகூட்டி
அடவாய் இஞ்சிச் சாறு உழக்காய்
அருந்த, சுரங்கள் அகன்றிடுமே.

உரை: நொச்சி யின் இலை, பற்பாகடம், காய்ந்த பூசணியின் தண்டு, காயாத பச்சை வண்ணச் சுக்கு, நல்ல திப்பிலி இவைகளின் பொடி வகைக்கு 12 கழஞ்சு வீதம் எடுத்து காய்ச்சிக் கொள்ளவும். 1/8 பங்காகக் குறுக்கி, வடிகட்டியக் குடிநீரில் உழக்கு இஞ்சியின் சாற்றை விட்டு உட்கொள்ளவும். இதனால் சுரங்கள் தீரும்.

81. **அசுவமேகச் சன்னி தீரக்குடிநீர்**

செண்பகம் கொத்தமல்லிக் கடுகுரோகணி மாஞ்சில்
செங்கழுநீர்க் கோட்டமும்
எண் பாவுச் சீதேவிசெங்கழுநீர் வேர்க்கொம்பு
ஏரான பற்பாடகமும்
தண்பாவு, இருநாழிநீர் உழக்காய் இஞ்சி
தன்சாறுழக்கு விட்டே
பாண்பாவுத்திப்பிலியும், மென் பொடியதாகவே
படர சுவச்சன்னி போமே.

உரை: செண்பகம், கொத்தமல்லி, கடுகரோகணி சடாமஞ்சில், செங்கழுநீர், கோட்டம், சீதேவிச் செழுங்கழுநீர்வேர், பற்பாடகம் சம அளவு எடுத்துக் கொள்ளவும். இரு நாழித் தண்ணீர்ல் போட்டு உழக்களவு வரும்வரைக் காய்ச்சி வடிகட்டவும், இஞ்சியின் சாறு

.........................................................................................

80. தலைப்பில் அதிக சன்னிக்கானக் குடிநீர் என்பது பாடலில் சுரங்கள் அகன்றிடுமே என வந்துள்ளது.

உழக்களவு திப்பிலியின் பொடி இவற்றைச் சேர்த்துக் குடிக்க, அசுவ சன்னி நீங்கும்.

### 82. செங்கை கொட்டும் சன்னி தீரக் குடிநீர்

செங்க முநீர்க்கிழங்கும், அதிமதுரமோடு
சீந்தில், தாமரை வளையமும்
தூங்கமிகுப் பேய்ப்புடல்வேர் இலுப்பைப்பூ
துலங்கு வழுதுணை தேக்குடன்
தங்கு இருநாழிநீர்ச் சுக்குடன் எட்டொன்று
தானகவே, காய்ச்சியே
அங்குள்ள, முலைப்பாலும் திப்பிலியுடன் கொள்
அலட்டு சன்னியு மோடுமே.

**உரை:** செங்கழுநீர்க்கிழங்கு, அதிமதுரம், சீந்தில் தாமரைவளையம், பேய்ப்புடல், இலுப்பையின்பூ வழுதுணைவேர், தேக்கு இவைகளை சமஅளவு எடுத்துக்கொண்டு சுக்குடன் இரு நாழித்தண்ணீரில் சேர்க்கவும். 1/8 பங்காகக் காய்ச்சிக்கொண்டு வடிகட்டி தாய்ப்பால், திப்பிலியின் பொடியும் சேர்த்து அருந்த, அலட்டு சன்னி விலகும்.

83. பற்பாடகம் நன்னாரி இருவேலி முந்திரிகையின்
பழம்பகரு ஈச்சம் பழத்துடன்
பொற்புலவு, சுக்கு ஆடாதோடை கூடவே
பூசணித்துண்டித்தே
நற்பொடியாய் பண்ணியிரு கழஞ்சு இருநாழி
நீர் நன்றாயுழக்காய்ச்சியே

.................................................................................

குறிப்பு: 82. சுவ - தனது; படு - கொடிய. படா - நீட்டல் விகாரம் தலைப்பில் செங்கை கொட்டும் சன்னி என்பது பாடலில் அலட்டு சன்னி ஓடுமே என்று வருவதால் ஏடுகள் மாறியுள்ளதை உணர முடிகின்றது. சுறுக்கு என்றாதல் வேண்டும்.

83. இளைத்தல் - மெலிதல்

உறப்பான முலைப்பால் உழக்குமென் பொடிதான்
உகந்த திப்பிலியுங் கொள்ளே.

84. **சூலை தீர**

இந்துப்பு, வெண்காய உள்ளிப்பூடுசுக்கோடு
ஓடும் பேராமுட்டியின் வேர்
பந்தித்த, சீந்தில் நாரத்தையிலை நொச்சியும்
பலவும் ஒன்றாயிடித்தே
உற்றுத்த பன்னிரு கழஞ்சுடன் திப்பிலியும்
ஒன்றரைகாசெடையதாய்
கொத்துற்ற, இருநாழிநீர் உழக்காக்கியே
கொள்ள குலைப்போடுமே.

85. **சுரம், விக்கம்தீரக் குடிநீர்**

கையாந்தகரைத் தூதுவளைக்
கடிய நொச்சிப் பிரமியுடன்
மெய்யாக விளங்கும், நீர்முள்ளி
வீறாக்கிய மல்லித் தண்டும்
செய்ய, கரந்தை, பேராமுட்டி, திகழும்
சுக்கு நறுக்கியிட்டுத்
தூய்யதாய்க் காய்ச்சிக் குடிப்பீராய்
சுரமும், வீக்கமும் போய் விடுமே.

உரை: பற்பாடகம் நன்னாரி, முந்திர்பழம், ஈச்சம்பழம், சுக்கு ஆடாதோடை நறுக்கிய பூசணித் தண்டு சம அளவில், பொடியாக்கவும். இப்பொடி இரு கழஞ்சு; 2 நாழிநீர்வார்த்துக் உழக்களவு, மென்மையான திப்பிலிப்பொடி சேர்த்து அருந்தவும். அலட்டு சன்னி நீங்கும்.

.............................................................................

83. புலவு – புலால்; பொன் – பச்சை. பச்சையான இறைச்சியை பதப்படுத்த உதவும் சுக்கு என்பதையே பொற் புலவு என்ற சொல்லால் குறித்தார்.
84. தலை என்றாதல் வேண்டும். குலை – கொத்து.

இந்துப்பு, பூண்டு, வெங்காயம், சுக்கு, பேரா முட்டிவேர், சீந்தில், நாரத்தையின் இலை நொச்சி இலை 12 கழஞ்சு இடித்துக் கொள்ளவும். திப்பிலிப்பொடி 1 1/2 கழஞ்சு, இரு நாழி நீரில் சேர்த்துக் காய்ச்சி உழக்கு அளவில் குறுக்கிக் கொள்ளவும். சூலை நோய் நீங்கும்.

கையான், தூதுவளை, நொச்சி பிரமி, நீர்முள்ளி, கொத் மல்லித்தண்டு, கரந்தை பேராமுட்டி, பொடி செய்த சுக்குப்பொடி சமபங்கு; இதற்கு எட்டு பங்குநீர் வார்த்து 1/8 பங்காகக் காய்ச்சி வடிகட்டி குடிக்க. சுரம் வீக்கம் என்பன விலகும்.

86. **அதிசாரக் கழிச்சல் தீரக்**

சுக்கு முத்தக்காசு பேராமுட்டி துலங்கிய
புங்கம்பாளை சிறுகாஞ்சோரி
தக்க, வரள் சுண்டிப் புளியம்பட்டைத்
தகு இலத்தைப் பட்டை காட்டத்திப்பூ
மிக்க, பெருமாப்பட்டை கடசப்பாலை
மேவு இருநாழி உழக்காய்க் காய்ச்சி
ஒக்க அதிவிடையமோடு காசிக்கட்டி
உகந்துகொள்ள அதிசாரமோடிப்போமே.

உரை : சுக்கு முத்தக்காசு, பேராமுட்டி, புங்கம்பாளை, சிறுகாஞ்சோரி, வரட்சுண்டி, புளியம்பட்டை இலந்தையின்பட்டை, காட்டத்திப்பூ, பெருமாப்பட்டை குடசப்பாலை - சமஅளவு. தண்ணீர் 2 நாழியளவு காய்ச்சி, உழக்களவு சுண்டியபின், அதிவிடயம் காசுக்கட்டிப் பொடியைச் சேர்த்து, விருப்பமுடன் குடிக்க, அதிசாரக்கழிச்சல் விலகும்.

87. **அதிசாரக் கழிச்ல் தீர**

நறுவிலித்துளிர், மாந்துளிரின் பட்டை
செறிவாட்டத்திருப்பி உற்ற

முறுமுழுக்குடன் பேராமட்டி உன்னியே
எரிய பாசோத்தி அதிலிடையங்கேளே.

88. மலைதாங்கி முத்தக்காசு சத்திப்பட்டை
மருவியநீர்ப் புலவர், நாவல்பட்டை
இலைதாங்கு, மாதுளையின் கொழுந்துபிஞ்சு
இருவேலி இலாமிச்சம் மாவின் பட்டை
ஏலம் இலை தாங்கு அதிலிடைய வேர்க்கொம்பு
கோட்டம் வெவ்விய மதுரம் காசுக்கட்டி
கலைதாங்கவேயிடித்துக் காய்ச்சிக்கொண்டால்
கழிச்சலதிசாரமிவை கருகிப்போமே.

உரை: நறுவிலித்துளிர், மாமரத்தின் கொழுந்து, பட்டை வட்டத்திருப்பி, பேராமுட்டி, பாசோத்திப்பட்டை, அதிலிடையம் மலைதாங்கி, முத்தக்காசு, சத்திப்பட்டை நாவல் இலைதாங்கி மாதுளையின் துளிர், பிஞ்சு, அதிவிடையம், வேர்க்கொம்பு, கோட்டம், அதிமதுரம், காசுக்கட்டி சம அளவு இடித்துச் சாறு பிழிந்து காய்ச்சி 1/8 பங்காகக் குறுக்கிக் குடிக்க, அதிசாரக் கழிச்சல் தீரும்.

89. அன்னமும் பாலும் நெய்யும்
அடவியில் பழுத்த வித்தும்
பின்னையும், பயிறு தேங்காய்
பெரியதாகக் காயும்
தின்னவேகால் குளிர்ந்து
தீயெழ வெதும்பு மாகில்
உன்னையே இவை கண்டால்
உகந்துடன் பாருமென்றார்.

உரை: சோறு, பால், நெய், சோலையில் பழுத்த விதைகள், பயறு,

..................................................................

88. புலவன் - அறிஞன்.

அடவி - சோலை; உன்னி - கவனமாக

தேங்காய், வாழைக்காய் உண்ண, வாதம் குறைந்து, பித்தம் அதிகமாக வருத்தத்தை அளிக்கும். இவற்றை கவனமுடன் நோக்கவும்.

90. **ஆமசுரம் தீரக் குடிநீர்**

உத்தணியிலை பாவட்டை
உகந்த சங்கு காவிட்டம்
சித்த முருங்கை நுணா ஈர்க்கு
சொல்லக் கூட்டும் பொடு தலையும்
ஒத்த ஓமம் திப்பிலியும் முத்தச்சம்
.........பாவையோடுடனே
சுத்தக் கருஞ் சீரகமும்
சுகமாய் முடித்துக்கூட்டிடுமே.

உரை: உத்தாமணியின் இலை, பாவட்டை, இசங்கு காவட்டப்புல், முருங்கை, நுணாவின் ஈர்க்கும், பொடுதலை, ஓமம், திப்பிலி, முத்தக்காசு, பாவை? கருஞ்சீரகம் இவற்றைக் குடிநீரிட்டு அருந்த ஆம சுரம் தீரும்.

91. **சத்திசுரம் தீரக்குடிநீர்**

கெடுத்தார், பெருவாகை முன்னையின் வேர்க்
கிளறும் பெரியகுமிழ், நெருஞ்சில்
விடுத்தான் இல்லாக்கூவிளையின்
வளர்சிற்றாமல்லி, பேராமல்லி
அடுத்தார் புகழும், பாதிரியுமான.........
......................கண்டங்கத்தரிவேர்

.......................................................................

91. கெடுத்தாரு என்றாதல் வேண்டும். தாரு - மரம். தலைப்பில் சத்தி சுரம் என்பது பாடலில் குளிர்ந்துவரும் வெப்பு என்று குளிர் சுரத்தைக் குறித்தது.

எடுத்தா உள்ளிவேர்க் கொம்பு
எழிலாம் கோட்டம் திப்பிலியே.

92. திப்பிலியுடனே, இவையெல்லாம் சேரக்
கூட்டிஒருநிறையாய்
அப்புனலின் இரு நாழிதான்விட்டே
அழல் காய்ச்சி எட்டொன்றாய்
செப்பிய, குடிநீர் அதனை யாற்றித்
தேனில் குடிக்கக் குளிர்ந்துவரும்
வெப்பு, இவையெல்லாம் உடல் தன்னை
விட்டே ஓடி விடுந்தானே.

உரை: கேடுமரம், பெருவாகை, முன்னைவேர், பெருங்குமிழ், நெருஞ்சில், கூவிளை, சிற்றாமல்லி, பேராமல்லி, பாதிரி, கண்டங்கத்தரி, பூண்டு, வேர்க்கொம்பு, கோட்டம், திப்பிலி, வகைக்கு சமபங்கு எடுத்துக் கொள்ளவும். இருநாழிநீர் விட்டு, 1/8 பங்கு வரும்படிக் காய்ச்சி வடி கட்டிய குடிநீரில் தேன்விட்டுக் குடிக்கவும். கொடிய குளிர் சுரம் தீரும்.

93. காணார், ஆடாதோடை முத்தக்காசு
சீதேவியின் வேரும்
பேணா, இலுப்பைப்பூ, விழால்
பேரிஞ்சுடனே முந்திரிகை
வாணாள் மயக்கும் கனி இவைதாமரையின்
வளையம், பெருங்குறும்பை
சேனாருங் கூவிளைத்தசையும்
சிறுமூலகமும் தேடுகவே.

94. தேடும் தான்றிக் கருநெல்லிச்
சிறந்தமிளகு திப்பிலி சுக்

கோடும், பெரிய நிலவேம்புடன்
நன்னாரி நறும் பிசினும்
நீடும், செவ்வியமதாவரிசி நிறையும்
செங்கழுநீர்ச் கிழங்கும்
கூடும் பெரிய அதிவிடையம்
கொண்டோர் நிறையில் கூட்டிரே.

95. ..................................

96. கூட்டுநீர்தான் நாழிக் குறுகக்
காய்ச்சி உழக்கானால்
மீட்டுநீர் தாம் உயர்த்தி................
மேலேதேனும்.............
விட்டளவில் உழுட்டுவீரே எப்போது உடலை
நடுங்குளிர்தானும்
காட்டுமயில் போலிய மடவாய்
கடிதாய் எங்கும் கலக்க முற்றே.

97. கலங்கும் கொத்தமல்லி இரு
கழஞ்சு வேர்க்கொம்பு இருகழஞ்சு
நிலங்கொள்நாற்கழஞ்சு கூட்டி
நீரும் இருநாழிவிட்டே
உலங்கக் காய்ச்சி உழக்காக்கி
உள்ளே செல்லப்பருகுவீரே.

98. மருவும் வேர்க் கொம்பிரு கழஞ்சுவழலைச்
சாறெடை லேஹொரு கழஞ்சு
அருவும், பேரா முட்டியின் வேர்
அறுகழஞ்சுடனே, வெள்ளுள்ளியும்
பெருக, இலாமிச்ச மிருகழஞ்சு
பெய்யும் புனலும் இருநாழி

இருநாழிக்கருதியிட்டு உழக்கானால்
காந்த திப்பிலி, கால் கலந்தே.

99. கலந்தே, தேவதாரமுத்தக்காசு
கண்டங் கத்தரிவேர்
கலந்தே சுக்கு, குமிளவேருடனே
கோட்டம் சிறுதேக்கு
மலர்ந்த, பற்பாடகத்திப்பில் சீந்தில்
வழாக்கடுக்காய் ஒன்று
நலந்தேதிக்கேழ் அசர் நாவிரண்டு
நாழிப்புனல் நீர் போட்டிடுமே.

100. புகட்டிய உழக்காய், காய்ச்சியபின்
புதியதேன், திப்பிலிகூட்டி
அகட்டி, சேர் குடித்தக்கால்
அருங்குழி, இரணசுரமெல்லாம்
திகட்டிக் கொல்லும் பரனுடைய
அடியாருடனான பகையாகத்
கருப்பக்கட்டி தினமும் திரிந்துவிடும்
பற்றா எனப் பறந்திடுமே.

101. பாநதிடும் சேவன்பூடு ஈரைந்து
பலமும், பாதிரிக் கூவிளை முன்னை
நெரிஞ்சில், பெருங் குமிழ்
நேர்போ மட்டிக் கண்டக்காலி
சிறுவழுதுணை முத்தம் பலம்பத்து
பிறந்தசிவதை வேரும் பலந்தாபத்து
பெருவாரிகை ஒன்றிரண்டு பல்மான
பத்து சிற்றாமுட்டி அறிந்தபலம்
பத்திடித்து பதினாறு மரக்காலுழக்கு
நீரிட்டு உழக்காய் காய்ச்சே.

102. காய்ந்த முக்குறுணியாய் வடித்துக்
கரைக்கும் மருந்ததி மதுரம் கடுநெல்லித்
தேய்ந்ததிரிகடுகு, கொள்ள சந்தனமு கோட்டத்
தேவதாரமிருவேலி
ஏந்த நறும்பிசின் நன்னாரி ஏல
இலவங்கம், சதகுப்பை இந்துப்புடனே
வாய்ந்த, குங்கிலியம் பச்சை மஞ்சட்டி
வகைசேர் ஒவ்வொரு கழஞ்சு தன்னை வாங்கே.

103. வாங்கி அரைத்துக் கரைத்து மலையில் வெண்ணெய்
மட்டியே அஞ்ஞாழி பதினாழி பால்விட்டாங்கு
கடையே வடித்தபின்பு அன்னோ வானவன்
தலையில் வார்த்து மேலும் பூச
அருகும் தீங்கறவே, திணைப் பானைத்
தொழும்படியார் தம்மைச் சென்ற
அணுகச் சினத்தவளை பயந்தீர்ந்தவகை
போலிங்கு நிற்க
அரிதெனவிட்டேது விடுமதுபோல்
எகிவிடும் இச்சை சுரமென்றியம்புவார்
பெரியோர்.

உரை: (11 பாடல்களில் சத்தி சுரத்திறகான மருத்துவம் கூறப்பட்டுள்ளது.) ஆடாதோடை முத்தக்காசு, சீதேவி செழுங் கழுநீர்வேர், இலுப்பையின் பூ விழால், பேரிச்சம் பழம், முந்திரிப்பழம், வாணாள் மயக்கும் கனி? தாமரைவளையம், பெருங்குறும்பை, கூவிளையின் கதுப்பு, சிறுமூலம், தான்றிக்காய் கருநெல்லிக்காய், மிளகு, திப்பிலி, நிலவேம்பு, நன்னாரி, நறும் பிசின், செவ்வியம், தாவரிசி? ஓர் நிறை செங்கழுநீர் கிழங்கு, பெரிய அதிவிடையம் சமனெடை சேர்க்கவும். நாழி நீர்வார்த்து, 1/8 பங்காகக் காய்ச்சி உழக்களவு குறுக்கி வடிகட்டவும். தேனுடன் அருந்த குளிர்சுரம் நீங்கும்.

கொத்தமல்லிவேர், கொத்தமல்லி இருகழஞ்சு, வேர்க்கொம்பு, நான்கு கழஞ்சு; நாழிநீருடன் சேர்த்து 1/8 பங்கு வரும் வரைக் காய்ச்சவும் குளிர் சுரமானது நீங்கும்.

வேர்க்கொம்பு இரண்டு கழஞ்சு வழலை சாரணைவேர் ஒரு கழஞ்சு பேராமுட்டி வேர் - ஆறு கழஞ்சு, பூண்டு, விலாமிச்சம் வேர் இரண்டு கழஞ்சு, இருநாழியளவு தண்ணீருடன் சேர்த்துக் காய்ச்சி, உழக்களவு எடுத்து 1/4 பலம் திப்பிலி சேர்த்து, தேவதாரம் முத்தக்காசு கண்டங்கத்தரிவேர், சுக்கு, குமிளம் வேர், கோட்டம் சிறுதேக்கு, பற்பாடகம், திப்பிலி? சீந்தில், கடுக்காய் ஒன்று, 8 நாழி தண்ணீர், இதை உழக்காகக் காய்ச்சிக் கொண்டு, புதுத்தேன், திப்பிலிப்பொடி சேர்த்து ஒருசேர் உள்ளுக்குக் குடிக்கவும். மிகவும் குழியாக உள்ள புண்ணால் ஏற்பட்ட எல்லா வகையான சுரங்களும் நீங்கும்.

சேவகன் பூ? 10 பலம், பாதிரி, கூவிளம், முன்னை, நெருஞ்சில், பெருங்குமிழ், பேராமுட்டி, கண்டக்காலி, சிறுவழுதுணை, முத்தக்காசு, சிவதை வேர் - சிற்றாமுட்டி வேர் 10 பலம். 16 மரக்கால் நீரில் காய்ச்சவும். முக்குறுணியளவுக்குக் குறுக்கவும்; அதிமதுரம் கருநெல்லி, திரிகடுகு, கொள், சந்தனம், கோட்டம், தேவதாரம், இருவேலி, நறும்பிசின், நன்னாரி, கிராம்பு, சதக்குப்பை, இந்துப்பு, குங்கலியம், பச்சை மஞ்சட்டி வேர் ஒரு கழஞ்சு அளவு எடுத்துக் கொள்ளவும். பொடி செய்து, அரைத்து, கரைத்து வடிகட்டவும். வெண்ணெய் 5 நாழி, பால் 14 நாழி குடிநீரில் விட்டுக்காய்ச்சி எடுக்கவும். தலையில் கொட்டி, உடலில் பூசவும். இச்சைசுரமானது நீங்கும் எனப் பெரியோர்கள் விளக்குவார்கள்.

..........................................................................................

குறிப்பு: அரிசித்திப்பிலி, கண்டத்திப்பிலி, யானைத்திப்பிலி என்று பலவகைகள் உள்ளன. பொதுவாக அரிசித்திப்பிலியும், கண்டத்திப்பிலியும் மருந்தில் சேரும். எனவே, திப்பிலையை இருமுறைக் கூறினார் போலும்.

104. **வாதசிலேத்துமம் தீர**

கேளாய், மூன்று நாள் அரிகீழ்வேர்க்
கொம்பு கொள்பயிறு
மூளநம், பெரிய இஞ்சியிவை மூன்றும்
ஒன்ற குடித்த பின்னை
நாளநம், பெருக, வெளிச்சென்றால்
நாடிக்குடிநீரிடு மருந்து
நீறும் சீந்தில்லேர் நெடிதான்
எரி ஆல்லோர் (சுர)த் தோடே.

105. தோடு முத்தக்காசு சுக்கு சேரொன்று முக்கழஞ்சா
இடும் பெரிய நீரிலிட்டு எட்லொன்றாகக் காய்ச்சிப்பின்
நீடுந்திப்பிலிப்பொடி செய்து, நீதியுடன் தூவிக் குடித்தால்
வாடும் வாதசீலேத்தும சுரங்கள் வஞ்சக மாயிது மாறிடுமே.

உரை: வாதகபத்தால் வரும் சுரங்கள் தீரக்குடிநீர் வேர்க்கொம்பு, பயிறு, இஞ்சி - இவற்றை சம அளவில் எடுத்துக் குடிநீரிட்டுக் குடிக்கவும். தீராத நிலையில் சீந்தில், மாதுளையின் வேர், ஆலவேர்ப்பட்டை முத்தக்காசு, சுக்கு, 3 கழஞ்சு வகைக்கு எடுத்துக்கொள்ளவும். இதில் நீர் சேர்த்து 1/8 பங்காகக் காய்ச்சி வடிகட்டி, திப்பிலியைப் பொடி செய்து, சேர்த்து அருந்தவும்.

106. **வாதசிலேத்தும் சுரம்தீர**

ஆனதேவதாரமுடன் மந்தவேர்க் கொம்பு படாதக்
கொழுப்பான வேல் விழியாய்பற்பாடகம்
கொத்தமல்லி வசம்பு
சீனமிளகுத்திப்பிலி முந்திரிகைப்பழம், முத்தக்காசு
தாறு ஒன்றிரு கழஞ்சில் தண்ணீரிரு நாழி
தான்விட்டே.

107. விட்டுக்காய்ச்சி, உழக்கானால் மேவும்
பெருங்காயம் கால் இட்டுக் குடிப்பீராமாகில்
விடவே செய்யும், குடல்தன்னில் ஒட்டித்திரியும்
வாதசிலேத்தும சுரங்களிவை தானுள்ள தெல்லாம்
முட்டுப்பட்டுத் தடுமாறி முறிந்தே கும்கண்டாயே.

உரை: தேவதாரம், வேர்க்கொம்பு, கொத்தமல்லி வசம்பு, சீனக்காரம், மிளகு, திப்பிலி, முந்திரிப்பழம் முத்துக்காசு, என்பன இருகழஞ்சு; இருநாழி தண்ணீர்விடவும், இதைக் காய்ச்சி வடிகட்டி, உழக்களவு எடுத்துக் கொள்ளவும், பெருங்காயம் 1/4 பங்கு சேர்த்துக் குடிக்கவும், கடலில் ஒட்டிக்கொண்டுள்ள வாதசுரங்கள் தீரும்.

108. **சுரம் தீரக் குடிநீர்**

ஓயுங்கோட்டம் பெருங்குறும்பையுடனே
சந்தனம்பேய் முசுட்டை
ஆயுங் கடுகு ரோகணி வேப்பலகு
சிறு தேக்காதிவிடையம்
மேவும், சீந்தில், திரிபலையுடனியல்
நாகப்பூ பெருங்குமிளவேர்
தேயும் தேவதாரமுடன் சேரும்
புடல், முத்தகாசே.

109. சேர்ந்ததோர் ஒன்றுசேர், கழஞ்சாகவே
ஆய்ந்தநீர், எட்டில் ஒன்றான பின்போர்
ஆய்ந்த, திப்பிலிபோட்டுக் குடித்திடில்
சாந்தமாய் விடுத்தேன், சுரமானதே.

உரை: சுரநோய் நீங்கக்குடிநீர், கோட்டம் பெரிய குறும்பை, சந்தனம், பேய் முசுட்டை, கடுகு ரோகணி, வேம்பின் இலை, சிறுதேக்கு, அதிவிடையம், சீந்தில், தான்றி, நெல்லி, கடுக்காய், நாகப்பூ,

..........................................................................

108. அலகு - இலைவடிவம்

பெருங்குமிளவேர், தேவதாரம், பேய்ப்புடல், முத்தக்காசு வகைக்கு ஒரு கழஞ்சு, தக்கபடி நீர் சேர்த்து, 1/8 பங்காகக் குறுக்கி வடிகட்டி, திப்பிலிப் பொடியுடன் அருந்த சுரநோய் விலகும்.

110. **வாதசுரம், கபசுரம் தீரக்குடிநீர்**

கண்டங்காரி, கொடிப்பிரமிக்
கடுக்காய் சீந்தில் தண்டுடனே
உண்டா இலுப்பைப்பூ, வேர் கொம்பு
உடனே ஆடாதோடையின்வேர்
தண்டார் செரியும் பெருங்குமிளும்
சாற்றும் புங்கம் பாளையுடன்
கொண்டோர் ஒன்று, இருகழஞ்சுக்
கூட்டியிடித்துக் கொள்வீரே.

111. கொள்ளும் புனல் தான் இருநாழிக்குள்
போட்டுக் காய்ச்சியபின்
கொள்ளும்புனல் தானுழக்கானால்
திப்பிலி இந்துப்புத் தேனும்
விள்ளும்படியே நீரதன் மேல்
வீசிக்குடிப்பாராமாகில்
உள்ளுங்காயும் வாதசுரம்
உழற்றும் சேத்துமமோடிடுமே.

உரை: கண்டங்கத்தரி, பிரமிக்கொடி, கடுக்காய், சீந்தில் தண்டு, இலுப்பைப்பூ, இலுப்பை மரவேர், கிளை, ஆடாதோடைவேர், பெருங்குமிழ் புங்கம்பாளை – வகைக்கு இருகழஞ்சு, இவற்றை இரு நாழிநீரில் போட்டுக் காய்ச்சி வடி கட்டவும். உழக்களவு நீரில், தப்பிலிப்பொடி இந்துப்பு, தேன் கலந்து குடிக்க, வாதசுரம் சேத்தும சுரம் நீங்கும்.

112. இனிநெற்பொறி சீனியும் பாலும்
இயலாகும் பச்சிளநீரும் சுடும்
பத்துடன் நான்காய் துவரைக்கடலை
நெய் கரும்பு அடவிக் கிழங்கும் செந்தேனும்
மான் முக்கனி சர்க்கரையும்
வடுவற்றிடு பாகும் பயில்
வாங்கியருந்த வணங்கிடுமே.

உரை: நெல்பொரி, வெள்ளைச்சர்க்கரை, இளநீர், துவரை, கடலை, நெய், கரும்பு, காட்டிலுள்ள கிழங்குகள், தேன்பாகு, முக்கனிகள், நாட்டுச் சர்க்கரை என்ற 14 பொருள்களை உண்ண நோய் தீரும்.

113. **சுரம், உழலை தீர**

கூட்டியே கொத்தமல்லிப் பசுவிய மணிலினோடேய்
போட்டுநீர் வருத்து நெல்பொரிந்ததோர் பதமானக்கால்
ஆட்டிய, வெண்ணைபோட்டு அங்கு நீர்விட்டிறத்து
காட்டிறப் பற்பாடகந்தன்னைக் கரைத்து, நீர்குடித்திடாயே.

உரை: பச்சைக்கொத்தமல்லியை நீரில் போடவும். பொரிந்த நெல்லை வறுத்துப் பொரியாக்கியதை எடுத்துச் சேர்க்கவும். காய்ச்சவும். பதத்தில் இறக்கி. வெண்ணையைச் சேர்க்கவும். பின் பற்டகப்புல்லை நறுக்கித் துண்டுகளாக்கி, இடித்து சாறாக்கிக் குடிநீரில் கரைத்துக் குடிக்கவும்.

114. குடித்தபோது கொடிய சுரத்துடன்
பிடித்ததாகப் பெருகு உழலையும்
தடித்த, தண்ணீர் தவனமும் மாறிடும்
வடித்தநீரை, வகையினி, நீர்க்கொள்ளுமே.

உரை: இக்குடிநீரை அருந்த, சுரம் மிக்கநீர் வேட்கை, என்பன தீரும்.

.....................................................................

குறிப்பு : 112. இச்சுவடி மிகவும் பிறகாலத்தது. என்பதற்குச் சான்றாக சீனி எனவருதலைச் சுட்டலாம்.

115. கொண்டபின் வேலந் தோலைக்
குறுகவே, இடித்து நீரின்
மண்டியே கரைத்துக் காய்ச்சி
வற்றினா(ல்) ஒன்றதானால்
தண்டிய மதுர ஏலம்
தங்க, வேர்க்கொம்பு திப்பிலி
விண்டிடும், கொத்தமல்லி
மிகுந்திடும், மிளகுங் கூட்டே.

116. கூட்டியே ஓர் சிரங்கை கொண்டு
நீர், புளியந்தோலும்
இட்டிய சாற்றிலே தானிவை
அரைத்திட்டுக் காய்ச்சி
காட்டிய கலத்திலிட்டுக்
காய்ந்த பின்னானவாறே
மீட்டுநீ இறக்கி நாவில்
விரைவுடன் அடக்கிக் கொள்ளே.

117. அடக்கின சிலேத்துமங்கள், பித்தம்
அடர்ந்து நெஞ்சினில்
தடித்த நாவுடனே தண்ணீர்தாகம்
இங்கிவைகள் தீரும்
அடக்கிய தன்னை அரிசி வறுத்துப்
பின் நிலவேர் சுக்கு
சடக்கென சீலைதன்னில்
கூட்டியே காய்ச்சிக் கொள்ளே.

118. காய்ச்சியே கொடுத்தபின்னக்
கருதியேழு நாளும் சென்றால்

..........................................................................................

114. உழலை – பெருந்தாகம். தவளம் – என்றாதல் வேண்டும். தவளம் – வெண்மை நிறம்.

வாய்த்தோரிரண்டு நேர மருவும்
பட்டினியேவிட்டால்
தீய்ந்திடும் சன்னிவாதம் செழும்
சுரம் தீரும் வன்மை
மூச்சுறக் குடிக்கக் காய்ச்சி
முதல் குடிநீர் கொள்ளே.

உரை: பின்னர் வேலம் மரப்பட்டையை நன்கு இடித்துக்கொண்டு, நீரில் போட்டு 1 பங்காக வருமளவுக் காய்ச்சவும். வடிகட்டி அதிமதுரம், ஏலம், வேர்க்கொம்பு, திப்பிலி, கொத்தமல்லி, மிளகு இவைகளின் பொடி உள்ளங்கையளவு; புளியந்தோல் சாறு மேற்படிக் குடிநீரில் அரைத்துக் காய்ச்சவும். இறக்கிக் கலத்தில் வைக்கவும். காய்ந்த தூளை நாவில் அடக்க கபநோய்கள், பித்தம், நீர்வேட்கை, என்பன தீரும்.

119. **கெட்டசுரம் நீர்க்குடிநீர்**

நீர்ச்சொறி சிற்றாமுட்டி சிறுகாஞ்சோரி நன்னாரி
நோதறபேராமுட்டி, நிகழுந்திவை தண்ணில்
ஓதறு, முத்தக்காசு வேர்க்கொம்பு சீந்தில் தண்டும்
ஒரொன்று கழஞ்சதாகக் கொண்டுதான் காய்ச்சிக் கொள்ளே.

**வேறு**

120. வேர்க்கொம்பு திரிபலை தாமரை வளையங்கோட்டம்
வெட்பாலையரிசி புடல் வேர் பீர்க்கு சந்தனமும்
ஏற்குமிருவேலி நெய்தல் கிழங்கோடு பற்பாடகம்
இலாமிச்சம் பாதங்கு முந்திரிகைப் பழமுடன்
பேரிச்சம்பழம் தேவதாரமிலுப்பைப்பூ முத்தகாசு
நீர்கொள் ஒன்றிரண்டு கழஞ்சே.

121. இருநாழி தண்ணீர், எட்டொன்றாக்கி
கருதாதேன் திப்பிலித்தூள் கலந்தாரென்றே
அருகாகக் கெட்டசுரம் ஆனதெல்லாம் வாங்கி
பருகா முன்னம், பார்க்க இது பாரே.

உரை: கெட்டசுரம் தீரக் குடிநீர்; சிற்றாமுட்டி, சிறுகாஞ்சோரி, நன்னாரி, பேராமுட்டி, முத்தக்காசு, வேர்க்கொம்பு, சீந்தில் கொடியின் தண்டு; வகைக்கு ஒரு கழஞ்சு, இவற்றை நீரிலிட்டுக் காய்ச்சிக் கொள்ளவும். திரிபலை, தாமரைவளையம், கோட்டம் , வெட்பாலையரிசி, வேர்க்கொம்பு, பேய்ப்புடல், பீர்க்கு, சந்தனம், இருவேலி, நெய்தல் கிழங்கு, பற்பாடகம், இலாமிச்சவேர், (பாதங்கு) முந்திரிகைப் பழம், பேரிச்சம்பழம், தேவதாரம், வாதம்பருப்பு, இலுப்பைப்பூ, முத்தக்காசு, கடுகு ரோகணி, புங்கம்பாளை, சிறுகாஞ்சோரி, 2 கழஞ்சு. இரண்டு நாழித் தண்ணீர்விட்டு 1/8 பங்காகக் குறுக்கி வடிகட்டிக்கொள்ளவும். பின் தேன், திப்பிலிப்பொடியைச் சேர்த்துக் குடிக்க கெட்ட சுரம் நீங்கும்.

122.

**குளிர்சுரம்தீர**

பாரார், கரிப்பாலைத் தண்டுபட
படரும் குதிரைவாலி, மிளகு
சீரார், வேர்க்கொம்பதிவிடையம்
சிறுதேக்கொடு கண்டங்காலி
நீரார், கோட்டம் பெருங் குறும்பை
நிலவேம்பொடு கீழ்காய் நெல்லி
வாரா, விட்டுணுகாந்தி கொத்தமல்லி
அதிமதுரம், மரமஞ்சள்

123. மஞ்சாய்க் குழலாயோர் ஒன்று வாங்கிக்
கழஞ்சுகொண்டு கொண்டாங்கு
கஞ்சா இருநாழிப் புனலில் எட்டொன்
றாக்கி பின்னதனில்

பஞ்சாதிள நீர், துப்புத்தேன் திப்பிலி
மென்பொடியாய் பருகிடவே
நஞ்சாய் எரியும் சுரமிவைதான்
நளிரெனவே சுரம், குளிர்ந்திடுமே.

உரை: கரியபவளத்துண்டு (மூசாம்பரம்) குதிரை வாலி, மிளகு, வேர்க்கொம்பு , அதிவிடையம், சிறுதேக்கு, கண்டங்காலி, கோட்டம், பெரும் குறும்பை, நிலவேம்பு, கீழாநெல்லி, விட்ணுகாந்தி கொத்தமல்லி, அதிமதுரம், மரமஞ்சள், கஞ்சா, கழஞ்சு வீதம் எடுத்துக்கொள்ளவும். தண்ணீர் 2 நாழிவிட்டு 1/8 பங்காகக் காய்ச்சிக் குறுக்கி, வடிகட்டவும். குடிநீரில் இளநீர், தூயதேன், திப்பிலிப்பொடி இவைகளையும் சேர்த்துக் குடிக்க, வெப்பமுள்ள சுரம், குளிர்சுரம் நீங்கும்.

**சன்னி வாதசுரம்**

124. **வெதுப்புக்கு எண்ணெய்**

ஒளிருங்கல், கோவை, நொச்சியுடன்
உகந்தபேய்ப்புடல் இவை மற்றும்
வெளிரு வேலிப்பருத்தியுடன் மிக்க
வாதமடக்கியிலை
ஒளிரும், சமனாகக் குளிர்ந்தே
கரைக்கும் மருந்தெல்லாம்
தெளிவு சிவனார் வேம்புடனே
தேவதாரம் செவ்வியமே.

125. செவ்வியந்தான் நிலக்குமிழ் வேரும்
சிறுமூலம் இந்துப்பு
......................................................................................................................

123. பஞ்சாதி என்பது பஞ்சிதிளநீர் என்றாதல் வேண்டும். பஞ்சி – நார்; துப்பு – தூய்மையான

124. ஒளிரும்கல் – காந்தக்கல்; சந்திரகாந்தக்கல், சூரிய காந்தக்கல் என இருவகையுண்டு.

குறிப்பு : தலைப்பில் வெதுப்பு எண்ணெய் என்பது பாடலில் சந்தி வாத சுரம் தீர என்று வருகின்றது.

அவ்வியமில்லாத் திப்பிலிஓடி
இலவங்கம் வெட்பாலை அரிசி
குவ்விய, சீதேவியாருடனே
குலாவுவசம்பு, சுரமூலி
செவ்விய கண்டங்காலியுடன்
சிறந்த சிவதை வேர்க்கொம்பே.

126. கொம்பே வெளுத்த பிசினோடே
குலாவும் விளா, வாலுளுவை
வம்பே, செரியு மரமஞ்சள்
வளர்சிற்றாமுட்டி கருஞ்சீரகம்
நம்பேர்றொன்று கழஞ்சுகொண்டு
நறுக்கியரைத்துக் கரைத்ததிலே
நிம்பப் பாலாக்கொண் டெண்ணெய்
நிரையியில் கூட்டி எரித்திடுமே.

127. எரித்தேவடித்துத் தலைதனிலுமிட்டே
உள்ளுங் கொடுத்தவுடன்
நரித்தே, உரிதான் பணிவாத சேத்துமச்
சுரத்தினுள் புகுந்து
திரிந்தே சன்னிவாதசுரம் தீரும்
எண்ணெயிது என்பர்
மரித்தே போகவேண்டாம்
நீர் வல்லீராகிர் செய்யீரே.

உரை: காந்தக்கல், கோவை நொச்சி, பேய்ப்புடல், வேலிப் பருத்தி, வாதமடக்கி, சிவனார் வேம்பு, தேவதாரம், செவ்வியம், நிலக்குமிழ் வேர், சிறுமமூலம், இந்துப்பு, திப்பிலி, இலவங்கம், வெட்பாலை அரிசி, சீதேவி செங்கழுநீர், வசம்பு, (சுரமூலி) பனை, செவ்வியம், கண்டக்காலிவேர், சிவதையின் வேர், கிளை, பிசின், விளா, வாலுளுவை, மரமஞ்சள், சிற்றாமுட்டி, கருஞ்சீரகம் - வகைக்கு ஒருகழஞ்சு நறுக்கி அரைத்துப் பாலில் கரைத்து எண்ணெயில்

வரிசையாகச் சேர்த்துக் காய்ச்சவும். பதத்தில் எடுத்துக் கொண்டு, ஆறின பின், உள்ளுக்குக் குடிக்கத் தந்தும், தலையில் தடவவும். வாதகபம், சன்னி வாத சுரம் தீரும்.

128. **பித்தசுரம் தீரமருந்து**

**இலக்கணம்**

குழலாய், வாய் முகங்களுக்கு வாங்கு
தண்ணீர் குளிர்ந்து சிர
அஞ்சரா வண்ணம் வேண்ட இனிஇதுதான்
பித்தசுரமென்க.

**குடிநீர்**

129. அஞ்சாதிது தான் தோன்றின நாளன்றே
தண்ணீரடைவு சொல்வான்
மிஞ்சரா, வில்வவேரதுவும்
மிகக்கழுஞ்சு கூட்டாயே.
கூட்டும் சிற்றாமுட்டி, சுக்கொன்று
மூன்று கழுஞ்சதனை
இட்டுத் தண்ணீர்தனில் காய்ச்சி
இறக்கி ஆற்றிக் கொடுத்திடு
வாட்டும் வழக்கை இளநீரை
வையத்தில் உலையில் சோறாக்கி
ஊட்டும் நாள் ஏழ் இப்படியே
உகந்து எட்டாம் நாள் ஒன்று செய்யே.

130. ஒன்றும், வில்வவேர்க் கொம்புடனே
சிற்றாமுட்டியின் வேர்

.....................................................................

சுரா – கள் ; சுராமூலி – பனை ;சுராமூலி என்றாதல் கூடும்.
நிரை – வரிசை.

துன்றும் பெரிய பாதிரியின் வேர் சுரைத்
தண்டோட ஓர்நிறையாய்
கன்றும் கொத்தமல்லியது தொகைய்யா
வேல் ஆல் ஓர்பிடி இரண்டு
போனாலும் நாழிநீர் உழக்காய்ப்
பொருந்ததேன் கூட்டிப் புகட்டே.

131. புகழும் சீந்தில் பற்பாடக வசம்பு
சுக்கும் இலாமிச்ச
மிகழும், வேர்க் கொம்பிருவேலி
இயலார் சிற்றாமுட்டியுடன்
அகக்கனவேர் ஒன்றிருகழஞ்சு
தண்ணிரண்டு நாழிவிட்டே
சுக உழக்காய் குடிய்நீராய்ச்
செல்லும் பித்தசுரந்தானே.

132. தானே, வேர்க் கொம்பிருவேலி
தங்குமிலா மிச்சந் தன்னுடனே
கானே, முத்தக்காசு காஞ்சோரி
புங்கம்பாளை கோட்டம்
தேனே கழஞ்சு ஒன்றிரு நாழித்
தண்ணீர் உழக்காய் பருகில்
தானே உருகும் பித்த சுரமும்
தான் கழிந்து மாறிடுமே.

133. மாறாமதுரமிஞ்சி சிற்றாமுட்டி
வழா பேரிச்ச பழமதுவும்

..............................................................................

130. புகட்டே என்பதால் இப்பித்தசுரம் குழந்தைகளுக்கானது என்பதைக் குறிப்பால் உணர்த்தினார். எனவே இம்மருந்து - குழந்தைகளுக்கானது என்பதை அறியலாம்.

வீற, வேர்க்கொம்பிருவேலி
வேம்பனாக்குடன் திரிபலையும்
தேறாதே, தேவதார முந்திரிகை
பழுந்தாமரை வளையம்
கூறா எலுமிச்சம் பூவும்
கூட்டிக்கொள்ள இலாமிச்சம்.

134. இலாமிச்சமோர் ஒன்று
எண்கழஞ்சு மறுநாழி
பச்சைநீர்தான் வார்த்துழக்காய்
பரிந்தேகாய்ச்சித் தேனுடனே
இச்சைக் கூறாம் சர்க்கரையுடனே
குடித்தால் பித்தசுரம் ஏதிடுமே.

135. ஆனா இலுப்பைப்பூ வெட்பாலை
அரிசியுடனே மரமஞ்சள்
கானமிகுந்த நன்னாரிக்
கழுநீர்க கிழங்குவேர்க் கொம்பு
பான, மிகுந்த முந்திகைப்பழம்
தாமரையின் வளையமுடன்
ஊன மறந்தான் ஓர் கழஞ்சு
தேவதாரம் என்றோதினரே.

136. ஓதும் தண்ணீர் இருநாழி
உள்ளெட்டொன்றாய் காய்ச்சி
இதில்பாதி முலைப்பாலும்விட்டுப்
பருகீர், பித்த சுரமெல்லாம்
ஓதும்பிலங்களிவை இவை குறைந்து
முழுநீரெனவே குளிருமென்றமா
காது முனி, வேற்றருள் முனிவர்
கருதிப்புகன்று காட்டினாரே.

உரை: பித்தசுரம்தீர மருத்துவம் 7 பாடல்களில், கூறப்படுகின்றது. வில்வவேர் கழஞ்சு – சிற்றாமுட்டி, சுக்கு – மூன்று கழஞ்சு. தண்ணீரில் போட்டுக் காய்ச்சி வடித்து ஆற்றி அருந்தவும். இளநீரை உலையிட்டு, அரிசியைப் போட்டு சோற்றாக்கி, 7 நாள் உண்ணவும். 8ஆம் நாளில் வில்வவேர்க்கிளை, சிற்றாமுட்டிவேர், பாதிரிவேர், சுரைக்கொடித்தண்டு – சமஎடை எடுக்கவும். கொத்தமல்லி. ஆல இலை ஒருபிடி – ஒருநாழிநீரிலிட்டுக் காய்ச்சி, உழக்களவு வடிகட்டவும். இதில் தேன் விட்டுப்புகட்டுக.

137. **மாந்தசுரம் தீரக் குடிநீர்**

செய்யுங் கடுக்காய் கொத்தமல்லி
சிவதைப்பயிறு வேர்க்கொம்பு
கையுங்கடுகு ரோகணியும் நறுக்கிக்
காய்ச்சிக் கொடுத்து விடில்
தொய்யும் வயிறு கழியும்பின்
தோன்றும் கோட்டம் வேர்பக்கொடு
உய்யும் சிறுகாஞ்சோரி, சிறு தேக்குடனே
உகந்த சீந்தில் நிலவேம்பே.

138. நிலந்தான் புகழுமதி மதுரம்
நெடிய ஆடாதோடை வேர்
நலந்தான் சேரும் பற்பாடகம்
நல்லமுந்திரிகைப்பழம் கழஞ்சாய்
சலந்தான் அழியக்காய்ச்சியபின்
தானே உழக்குச் சர்க்கரையிட்டு
உலந்தோர் குடிக்கிற பித்சுரமோடும்
கடிதாய் உடம்பை விட்டே.

உரை: கடுக்காய், கொத்தமல்லி, சிவதை, பயற்றம் பருப்பு, வேர்க்கொம்பு, கடுகு ரோகணி, இவற்றைப் பொடித்துக் கொண்டும், வேர்க் கொம்பை நறுக்கிக் கொண்டும் காய்ச்சவும். இக்குடிநீரை

அருந்த வயிறு கழியும். பின்னர் கோட்டம் வேப்பிலையின் ஈர்க்கு, சிறுகாஞ்சோரி, சிறுதேக்கு, சீந்தில், நிலவேம்பு, அதிமதுரம், ஆடாதோடையின் வேர், பற்பாடகம், முந்திரிப்பழம், ஒருகழஞ்சு, தக்க அளவில் தண்ணீர்விட்டுக் காய்ச்சி 1/8 பங்காகக் குறுக்கவும். உழக்களவு சர்க்கரை சேர்த்து அருந்த விவைில் பித்த சுரம் நீங்கும்.

139. **தாபசுரம் தீர**

கட்டிப் பன்னீர், கத்தூரி
கதிக்கும் சாந்து கற்பூரம்
மொட்டி தப்பி முகர்ந்திருக்கப்
மொறுக்குந்தவர் முழலை பித்த
எட்டும் கழுநீர் கத்தூரிமுடனே
சரிந்த பன்னீரும்
பட்டிப்பதியும் குங்குமமும்
பச்சைக் கற்பூரமுந்தேடே.

140. தேடியரைத்து, மணமெல்லாம் சிறந்த
கலந்தனில் வார்த்து
ஓடிமுன், கலந்தனைவைத்து முயற்சி
தெளிநீராய் முகர்ந்து விட்டால்
கூடிநின்ற பித்தமுடன்.....................
கொடியுமுலைப் பரிதாகம்
வாடி இறுக்கு குமட்டியுடல்
வருந்திது தாக சுரம் போமே.

..........................................................................................

136. தலைப்பில் மாந்தசுரம் என்றுள்ளது. பாடலில் பித்த சுரம் என்று வருகின்றது. கை – ஆற்றல்; தொய்தல் – கெடுதல்

137. கடிது – விரைவு.

139. பட்டி – சீலை

140. மகடூஉ முன்னிலை.

உரை: கல்கண்டு, பன்னீர், கத்தூரி, கலவை, சந்தனம், இவற்றைத் துணியில் முடிந்து முகரவும். பித்தம், உழலை என்பன தீரும். செங்கழுநீர்ப்பூ, கத்தூரி, குங்குமப்பூ, பச்சைக் கற்பூரம் இவற்றை பன்னீரில் அரைத்து வடிகட்டி கலத்திலிடவும். பித்தம், உழலை, வாந்தி, தாகசுரம் என்பன தீரும்.

141. போமென்கையால் முது காடி
புகழுக் கழுவிக் கொப்பளித்துத்
தேமே, இளநீர் தன்னைச் சீவி
தெளியவார்த்தது, தண்ணீர்
மேவிய, வாகடரெல்லாம் புகழும்
இத்தியாதி தனக்கா
மேவிய, காரென்னும் குழலீர்
காத்தே, காத்தார் கொடுத்திடுமே.

உரை: பழையகாடியை கொப்பளித்துக் கழுவி பின்னர், இளநீரைக்கொடுக்கவும்.

142. இடுநீ, சம்பாரப்பச்சரி
இலங்குநீரைக் கழுநீரை
வடுவே, நீ வடித்ததிலே
வளர் சந்தேலம் சீரகத்தில்
இடு, பார்புகழ்சாத்திர பேதியிதுவும்
கோரோசனை, கரைத்துக்
கொடு, சீனியிலது, முலைதனைக்
குலைக்கு, அபான அத்திரமே.

........................................................................................

141. அபான அத்திரம் – காற்றுக்கான அம்பு. குலை – கொத்து.
குறிப்பு: தலைப்பில் தாபசுரம் என்பது பாடலில் தாகசுரம் எனவருகின்றது.
கட்டி – கல்கண்டு. கதித்தல் – மிகுதல். தப்பல் – குற்றம்.
142. சாத்திரம் – கலை.

143. அத்திமரத்தின் வேரை வெட்டி
அதிலே கலசம் வைத்தூறி
மெத்தவிழுந்த தண்ணீரில்
மிகவும், சீனியே என்னும்
சுத்த, வாழைக்கனிச் சாற்றில்
துலங்க, கலந்து பருகுவீராய்
சத்திமயக்கும், குழலாய் நீ
சாத்திரம் செய்து பாரே.

144. பாராய் இதனை, மாந்தாதிப்
பகரும் இளநீர் மிக்க கொடுத்து
நீராரச் சத்தி பண்ணுவித்து
நிறையச் சாந்தும், பன்னீரும்
சீரார், உடம்பு தன்னில் பூசி
சிறக்கப் போற்றி, வைத்தகால்
பேராகுழலை பரிதாபம்
பொருந்தும் சரமும் போய்விடுமே.

145. அப்பொன், வியபாரிக் காரந்தான்
பொருந்த பலவும் செய்தால்தான்
முற்றத்தவப்போதப் பனங்கள்
தானிருந்தால் எனவே குளிரும்போதே
அணுகிய வாதசன்னி இனமுற்றே இடர்
வண்ண, இது குணமறிந்து செய்யே.

உரை: சம்பாவகை பச்சரியை இட்டுக் கழுநீரை வடிக்கவும். எலம், சீரகம், சாத்திரபேதி கோரோசனை, இவைகளைக் கழுநீரில் வெள்ளைச் சர்க்கரை, தாய்ப்பால் சேர்த்துக் கொடுக்கவும், இது கொத்தான காற்றுக்கு அம்பு போன்றதாம்.

அத்திமரத்தின் அடிவேரை வெட்டவும். ஒரு பானையை அதன் அடியில் வைக்கவும். பானையில் வேரிலிருந்து நீர் வடியும். வடிந்த நீரில் சீனி, வாழைப்பழச் சாறும் கலக்கவும். இதைக் குடிக்க. வாந்தி, மயக்கம் என்பன தீரும். இம்மருந்து செய்யும் கலையை அறியவும்.

உழலை, சுரநோய் தீர மருந்து, இளநீரை அதிகம் குடிக்கச் செய்து வாந்தி செய்யவும். பின் சந்தனத்தைப் பன்னீருடன் கலந்து உடம்பு முழுவதும் கலந்து பூசவும். இதுபோலப் பலமுறை பொருத்தமாகச் செய்யவும். குளிரும்போது, போதை தரும் பனங்கள்ளைக் குடிக்கவும். வாத சன்னி வகைகள் துன்பந்தீர்க்க இதன் இயல்பு அறிந்து செய்யவும்.

146. **பித்த சுரம், அதிசாரம் தீரக் குடிநீர்**

வெச் சென்றிருக்கும் தலிப்பெய்தும் மிகவும்
வெண்தலை விட்டேனும்
மச்சந்தரு கண்ணது உனக்கு ஆகும்
குடிநீரடைவு சொல்வன்
மெச்சும் கோட்டம் அதிவிடையம்
வீரமாந் தோல் தன்னுடனே
பச்செனக் கற்பூரம், தோல்
பற்பாடகம் அத்திப் பட்டையும்
பட்டங் காணோர் ஒன்று
பதறிக் கழஞ்சாய் நிறத்ததிலே.

147. விட்டாங்க இரு நாழிப்புனல் தன்னை
மிகவும் வற்றி உழக்கானல்
தோட்டங் கருதில் அதிசாரம் தொலையு
எனவேத் தொல் புவியில்

.........................................................................

146. அடைவு - அடைபுமுறை ; பட்டம் - பருவநிலை

கட்டங் குரவ, மா முனிவர்

கருதிப் புகன்றனர் காசினிக்கே.

உரை: குடிநீரின் முறையைக் கூறுகிறேன். கோட்டம் அதிவிடையம், மாம்பழத்தோல், பச்சைக் கற்பூரம் மரப்பட்டை, பற்பாடகம், அத்திப்பட்டை - ஒரு கழஞ்சு. 2 நாழி நீர். காய்ச்சி உழக்களவு எடுத்து அருந்த, அதிசாரக கழிச்சல் நீங்கும் என்று பழைமையுர உலகிலுள்ள குருமுனிவர் உலகத்தில் உள்ள மக்களுக்குக் கூறினார்.

### நீரடைப்பு தீர

148. அறிந்தே, இரண்டாங்குடிநீரின்

அடைவுகேளும், திரிபலையும்

செறிந்த, விலாமிச்சம் செய்வோர்க

கொம்போ ஓரொன்று

பரிந்த, கழஞ்சிருநாழிப்

பெருநீர் புகட்டியுழக்காக்கி

உறுஞ்சி, விட்டுங்கார்த் திப்பிலி

தேனுடனே, குடிநீருடன் கலந்தே.

149. கலங்காதே, செவ்வியங்கடுக்காய்

கடுகு ரோகணி, சீந்தில் தண்டோடிய

வங்கா, புதிய இருநாழிப் புனலில் காய்ச்சி

நாழி செய்து

நலங்காதே, இப்படி ஏழுநாளுங் காய்ச்சிக்

குடித்தபின் குலைசேர்

மலையின் முலையில்முற்

குடி நீரடைவு கூறுவோமே.

..................................................................

அடைவு - அடைபு, முறை. குருவேர் - குரு. பட்டம் - பருவநிலை

149. வங்கா - வங்கம்; அலை. அலைகடல் உப்பாதல். உப்புநீரைப்பயன்படுத்த குறிப்பால் உணர்த்தல். 147. குரவர் - குரு. 148. குறிப்பு - இரண்டாம் குடிநீர் என்றாதல் கூடும்.

150. சிலபோதுணர்ச்சியு வட்டிருக்கும்
சிறுகாலே, வாய் தித்திக்கும்
பலகாலம் வாய் கச்சிருக்கும்
பகருமுன்னா தாகிக்கும்
தலைமீதிதற்குப் பரிகாரம்
தண்ணீரடைவு தனைப்புகலில்
அலகரார், விழியாய் முனிவோர்க்
கொம்பதனை அறுகழஞ்சு தேடுகவே.

151. தேடும், பொறியும் சிறு பயிறும்
தேவதாரமும் முக்கழஞ்சு
போடும், பொடி தனிலிலவங்கம்
பெருமஞ்சள் தேவதாரமுடன்
நாடு, ஒரொன்றிரு கழஞ்சு
நல்வோர்க்கெல்லாம் பைங்கழஞ்சுடனே
கூடும்படிக் காய்ச்சி அரைத்துக் கொள்ள
துணி போம் சுரமே.

உரை: நீரடைப்புத் தீர மருந்துவம். திரிபலை, விலாமிச்சவேர், வேர்க்கொம்பு, ஒருகழஞ்சு வகைக்கு எடுத்துக்கொள்ளவும். இருநாழி நீர் விடவும். இதைக் காய்ச்சி, உழக்களவு தேன், காரமுள்ள திப்பிலிப் பொடியுடன் கலந்து குடிக்கவும்.

செவ்வியம், கடுக்காய், கடுகுரோகிணி, சீந்தில்தண்டு; சமஅளவு, உப்புநீர் - இரு நாழியளவு. காய்ச்சிப் பாதியளவாக்கி தாய்ப்பால் சேர்த்து அருந்தவும். இவ்வாறு 7 நாள் தொடர்ந்து அருந்திவர கொத்தாக உள்ள நீர்ப்புழையின் நோய்கள் தீரும்.

சுரநோய்தீர, குடிநீரைக் கூறுமுன்னர், நோயின் குறி குணங்களைக் கூறுகின்றார். சிறிதுநேரம் வாயில் இனிப்புச்சுவை, பல நேரம் கசப்புச்சுவை, நீர்வேட்கை என்பன. வேர்க்கொம்பு - 6

..........................................................................................

150. வெட்டி - பயனற்ற “வெட்டிருக்கும்” என்றாதல் கூடும்.

குறிப்பு : இரண்டாம் குடிநீரின் என்றாதல் கூடும்.

கழஞ்சு, நெற்பொரி, சிறுபயிறு, தேவதாரம், தேவதாரம்-3 கழஞ்சு பொடி செய்யவும். இலவங்கம், பெரியமரமஞ்சள், தேவதாரம் இலவங்கம் - ஒரு கழஞ்சு; இவற்றை நீருடன் சேர்த்தரைத்துக் காய்ச்சிக்கொண்டு குடிக்க சுரநோய் நீங்கும்.

152. **வாதபித்த சுரம் நீங்க**

துணிந்து, தோன்றும், வாதபித்த சுரத்தின்
குணங்களும், புளையும்
பணிந்தே கூந்தலை விடுவதும்
பற்றுவதுமாயிருக்கும்
மங்கையர் பாலிருநாழி பசுவின்பால்
வளரும், இருநீர், இருநாழி ஒருநாழி
வெங்கைத்தோடும் பிடுங்கும்
வேர் சிற்றாமுட்டி தேவியார் முத்தக்காசோடு
இருவேலி இலாமிச்சங்கை
பெரு அரத்தை சதகுப்பை நாகப்பூ
சந்தனமகில் கோட்டம் திங்கள்
அணிச் சடைமுடியாரருள் சேர்
மருந்து சித்திக்க வென்றே பச்சிலை
மாஞ்சில் கொள்ள.

153. கொள்ளமகில் செவ்வல்லிக்
கொடியேலமும் ரோகணி வேர்க்

..............................................................................................

152. சித்தி - அற்புதவன்மை. திங்கள் அணிச் சடைமுடியார் என்பதால் இவர் சைவ சமயத்தவர் என்பதும், புராண வழக்குகளை நன்கு அறிந்தவர் எனவும். அறியலாம். இதற்கு புலித்தோலைக் குறிக்காமல் வேங்கை மரத்திற்கு ஆகி வந்தது. முன்னோடிச் சான்றாக சங்க இலக்கியங்களில் இந்நயம் சுட்டப்படுகின்றது. துணிதல் - வெட்டுதல், உளைதல் - குடைச்சல்.

கொம்பு குலவும் கீழாநெல்லிப்
புடல் கோட்டம் சிறுதேக்கு
சீந்தில் நல் சாந்துடனே வெப்பலகு
நாகப்பூ புங்கம் பாளைத்தலமேவிய
காஞ்சோரிதேவதாரம் குமிள் நாரி முலைப்பால்
பெருங்குறும்பை கடுகுரோகணியோடதிவிடையே.

154. அதிகம் கொள்ளாதொருகழஞ்சுதாகக்
கொண்டது தன்னை
அதிதம் இருநாழிப்புனலில் காய்ச்சி
உழக்கேயானாக்கால்,
விதி, தங்கிடும் காத்தேன்விட்டேயதில்
கலந்து கொண்டு
மதி, கொண்டதனை இருகரத்தால் வாங்கி
பருகுமுன் முகந்தே.

155. வந்தவோர்க் கொம்புடனே சிறு
காஞ்சோரி வேருடனே
சிவந்தேயிருக்கும் கொன்றைத்தோல்
சிறுமூலகமுத்தக்காசு
நலந்த பற்பாடகம் நன்னாரி
நல்ல இருவேலியின் வேரும்
அவந்திக்கும், குதிரைவாலிபுடல்
ஆனதேவதாரமுமே.

..........................................................................

153. அவம் - சுத்தம்; நாரி என்பது நன்னாரியையும், பெண்ணையும் குறிக்கும். நாரி என்ற சொல் இருபொருளைத் தரும்படி நூலாசிரியர் அமைத்துள்ளார்.

குறிப்பு: கூந்தல் என்பதால் பெண்களைக் குறிப்பாலுணர்த்தியது வெங்கைத் தோடு என்பதை வேங்கைத்தோடு என்ற கொள்ள வேண்டும் தோடு என்பதால்.

156. தாரார் குழலாய், வரள்முள்ளிவேர்
தயங்கு இலாமிச்சையோர் ஒன்று
நேராகத்தான் கழங்சுரையாய
நிறுத்தும் கொண்டாங்கிருநாழி
சீராய், நீரிலிட்டு உழக்காக்கிக்
காய்ச்சி திப்பிலிதேன்
சாரா இருள்போய், விடிந்துண்ண
கடுகச் சுரம் போம், கனிமொழியே.

உரை: வாதபித்த சுரத்தின் இயல்புகளாவன. வெட்டுவது போன்ற குடைச்சலுடன் இருக்கும். பெண்கள், தங்களுடைய கூந்தலை கைகளால் பிடிப்பதும், பிடுங்குவதுமான செயல்களைக் கொண்டிருப்பார்கள். மனநிலைமாறபட்டிருக்கும். இதற்கான மருத்துவம் தாய்ப்பால் இருநாழி, பசும்பால், பசுவின் நீர் இருநாழி - வேங்கை மரப்பட்டை - ஒரு நாழி சிற்றாமுட்டிவேர், சீதேவிச் செழுங்கழுநீர்க் கிழங்கு, முத்தக்காசு, இருவேலி, இலாமிச்சம், சங்கம்வேர், பேரரத்தை, சதகுப்பை, சிறுநாகப்பூ, சந்தனம், அகில், கோட்டம், பச்சிலை, சடாமாஞ்சில், இவைகள்யாவும் சந்திரனைச் சடை முடியில் வைத்துச் சூடிக் கொண்ட அடியவர்கள் அருள் கூர்ந்து அற்புத வன்மையுடன் வழங்கிய மருத்துவ முறைகளாகும்.

கொள், அகில் செவ்வல்லிக் கொடி, ஏலம், ரோசனம், வேர்க் கொம்பு, கீழா நெல்லி, பேய்ப்புடல், கோட்டம், சிறுதேக்கு, சீந்தில், நல்ல சந்தனம், வேப்பசர்க்கு, சிறுநாகப்பூ, புங்கம்பாளை, காஞ்சோரி தேவதாரம், குமிள், தாய்ப்பால், பெரும்குறும்பை, கடுகு ரோகணி, அதிவிடையம் ஒருகஞ்சு; தண்ணீர் இரண்டு நாழியளவு விட்டுக்காய்ச்சவும். உழக்களவு ஆனவுடன் எடுத்து கால் பங்கு தேன் - சோலையிருந்தது சேர்த்து முகர்ந்தபின் பருகவும். வாதபித்த சுரம்தீரும்.

வேர்க்கொம்பு, சிறகாஞ்சோரிவேர், கொன்றையின் பட்டை, சிறுமூலம், முத்தக்காசு, பற்பாடகம், நன்னாரி வேர், இருவேலிவேர்,

தூய குதிரைவாலி, பேய்ப்புடல், தேவதாரம், வளள், நீர்முள்ளிவேர், விலாச்சம் வேர், கழஞ்சளவு. இருநாழி தண்ணீரில் சேர்த்து உழக்களவ வரும்படிக் காய்ச்ச வேண்டும். திப்பிலிப்பொடி, தேன் சேர்த்துக் குடிக்க, சுரம் நீங்கும்.

157. **வாதபித்தசுரம் தீர.**

மொழி, சிதேவிச் சிற்றாமுட்டி
முயன்ற பேராமுட்டியுடன்
அழியாய், இருவேலித்தண்டுமாக
ஓர்நிறை கொண்டித்து
ஒழியாநீர்தான் தூணிவிட்டு
ஊறிக்காய்ச்சி, நாலொன்றாய்
பழியாவண்ணம், காயந்த பின்பு
பரிந்தே கரைக்கும் மருந்துகொள்ளே.

158. மருஞ்சீதேவி, வில்வவேர்
மருவும் சீந்தில் கிழங்குடனே
கருந்தா, இலாமிச்ச மிருவேலி
கடுகரோகணி இலவங்க
மிருஞ்சீர், கோட்டமதி மதுரம்
ஏலம் செவ்வில்லிக் கொடியு
முருந்தாரம் கையார் பெருங்குரும்பை
முத்தக்காசு, கற்சிகையே.

159. சிகைசேர்மயிலே, நன்னாரி
சேரும் வேர்க் கொம்போர் ஒன்று
மிகையா மூன்று கழஞ்சு கொண்டு
விரும்பி அரைத்துப் பின்னதிலே

..................................................................

அவம் - சுத்தம். 157. அழி - மிகுதி, உரைக்கும் என்றாதல் வேண்டும்

வகையே எண்ணெய் நாழிவிட்டு
வடித்துத் தலையில் வார்த்துத்
தசையேபூச, வாதபித்தசுரம்
போமென்று சொல்லுவாரே.

உரை: (சீதேவி) செழுங்கழுநீர்க் கிழங்கு வேர், சிற்றாமுட்டியின்வேர், பேராமுட்டிவேர், இருவேலி; சமஅளவு. தூணியளவு நீர். ஊறவைத்து காய்ச்சி 1/4 பங்காகக் குறுக்கவும். இதை உட்கொள்ளவும். சீதேவி செங்கழுநீர்க் கிழங்கு, வில்வவேர் சீந்தில் கிழங்கு, இலாமிச்சவேர், இருவேலி, கடுகுரோகணி, இலவங்கம், கோட்டம், அதி மதுரம், செவ்வல்லிக்கொடி, கரிசாலை, பெருங்குரும்பை, முத்தக்காசு, நன்னாரி, வேர்க்கொம்பு - வகைக்கு ஒரு கழஞ்சு அல்லது 3 கழஞ்சு அளவும் எடுத்துக் கொள்ளலாம். அரைத்துக்கொண்டு, நாழி எண்ணெயுடன் சேர்த்துக் காய்ச்சிப் பதத்தில் இறக்கவும். பின்னர், தலை சதையில் தடவிப்பூச வாதபித்த சுரம் நீங்கும்.

160. **(பித்த) சுரம் தீரக் குடிநீர்**

படர்ந்து சுரக்கும் கொத்தமல்லி
பைய நறுக்கிச் சீந்தில் தண்டில்
தடஞ்சேர், முலையாய் அமரத்தட்டியதைத்
தண்ணீர் தனிலிட்டுக் காய்ச்சே
காய்ச்சி இறக்கி இப்போது
கையாறப் பின்னிறக்கி
வாய்த்த மருந்தை இப்படியே
வகையாய்க் காய்ச்சி எள்அளவு
கூச்சமறவே, கொண்ட பின்புக்
கொடியதாகம், சுரங்களிவைதானும்

.........................................................................

தாரம் - தேவதாரம். கையான் என்றதால் வேண்டும். கல் - காவிக்கல். சிகை - மயில்கொண்டை. கற்சிகை, காவிக்கல், மயில் தோகை எனப்பொருள் கொள்ளலாம்.

போச்சு மலை போலமுலையும்
பிடிபோலே இடையுமினமானே.

உரை: கொத்தமல்லி சீந்தில் தண்டு இவைகளைத் துண்டுகளாக்கி சீந்தில்தண்டு தட்டிக்கொண்டு, தண்ணீர் சேர்க்கவும். பின் காய்ச்சி 1/8 பங்காக்கிய பின் எடுத்து ஆறவைத்து வடிகட்டவும். குடிக்க, கொடுமையான நீர்வேட்கை, சுரவகைகள் நீங்கும்.

162. **பித்த சிலேத்தும சுரம்தீர**

உள்ளங் கொள், சீந்தில் திரிபலையுடனே
வெட்பாலையரிசி மற்றக்
குளஞ்சேர், செந் கழுநீர்க் கிழங்குடனே
ஓரொன்று நிரைக் கூட்டித்
துவங்க, இடித்து, நீரிலிட்டுச்
சுவர, எரித்தெட்டொன்றாக்கி
இனங் கொள், கவிமுகில் முலையாய்
எட்டாநாளிங்கிது, கொள்ளே.

163. இதுதான் கொண்டபின், இதற்கு
இரண்டாம் குடிநீர்க் கூட்டித்
துவங்க, இடித்து, நீரிலிட்டுச்
சுவர, எரித்தெட்டொன்றாக்கி
இனங்கொள், கவிமுகில் முலையாய்
எட்டாநாளிங்கிது, கொள்ளே.

..........................................................................................

162. குளம் - வெல்லம். குளம்சேர் என்பதால் ஒருசேர் வெல்லம் என்றும் கொள்ளலாம். குளத்தில் பூத்துள்ள செங்கழுநீர்ப்பூ என்றும் கொள்ளலாம். பின்னதே பொருத்தமானதாகும்.
163. நளிளம் - தாமரை. தேனீக்கள் சூழும் தாமரைப்பூ. இங்கு தாமரையின் பூவைக் குறிக்காது அதன் தன்மையைக் குறித்தது. ஆகுபெயர். 164. கடிது - விரைவாக.

164. கடிதாம், தேவதாரமுத்தக்காசோடி
இலாமிச்சமிரு கழஞ்சு
வடிநீர் இருநாழிவிட்டு வற்ற
எரித்தேன் எட்டொன்றாக்கி
படி காசெடைதேன் மேல்விசிறிப்
பருகிலிதற்குப் பின்னுமமொரு
குடிநீர் அடைவுகோள், சுக்கு
கொத்தமல்லியும், கோட்டமுமே.

165. கோட்டமான, வெப்பலகுக்
கொடிதாம் சீந்தில், மரமஞ்சள்
வாட்டமில்லாக் கரிப்பாலை
வளர் தண்டனேயதிமதரம்
காட்டும், சிறு காஞ்சோரியுடன்
கணக்கிலோர் ஒன்றிரு கழஞ்சு
மீட்டுநீர்தான் நாழிவிட்டுக்
காய்ச்சென்றெட்டொன்றனவே.

166. ஒன்றாத் தேனிரு கழஞ்சு
இட்டே, குடி, அங்கினமும் கேள்
குன்றா, முத்தக்காசு கோட்டம்
கொன்றைப்பழத்தோடு இலாமிச்ச
கண்ட, மடவிக்கச் சொலஞ்
காட்டு, மரமஞ்ச அதனுடனே
நன்றாயிரு நாழி நீரிலிட்டு
நாலொன்றாய் தேனுடன் பருகே.

167. பருகின, வெட்பாலையரிசி
பரிதாம்வேர், கொம்பிருவேலி
பெருகிய, சிறுகாஞ்சோரியுடன்
பேராமுட்டி, சிற்றாமுட்டி

மருவியோர், ஒன்றிரு கழஞ்சு
வகையாய் கூட்டிப் புனலிலிட்டு
இருவரை அனயை முலையாளே
எட்டொன்றாக்கி இவையருந்தே.

168. அருந்தும் சீந்தில் வேப்பலகு
அரிதார முத்தக் காசுப் புடல்
திருந்து, சிறு காஞ்சோரி மதுரம்
தேவதாரம், நன்னாரி
வரும்படியே, திப்பிலி கழஞ்சு
வாங்கி, இருநாழிப்புனலிலிட்டுப்
பொருந்தும்படி, எட்டொன்றாக்கிப்
பொருந்தக் காய்ச்சிப் புகுந்திருந்தே
புகுந்துநீ, எட்டொன்றாக்கிப் பொடியாப்
பொடியாம், கண்டசர்க்கரையை
மிகுந்திடாமல், சற்றே மேல்
வீசிக்குடிப்பாயாகில்,
உகந்த தீரா பித்தசிலேத்தும சுரங்க
மாறி நடுக்கமெல்லாம் அகன்று
போம் என்றுரைத்தனரே.

உரை: 17 பாடல்களில் (204 முதல் 211 பாடலகள் வரை) பித்தகப சுரத்திற்கான குடிநீரைக் கூறுகின்றார். சீந்தில், திரிபலை, வெட்பாலையரிசி செங்கழுநீர்க் கிழங்கு – ஒரேயளவு. போதிய அளவு தண்ணீர், சரக்குகளை இடித்துக்கொண்டு நீரிலிட்டுக் காய்ச்சி 1/8 பங்காக எடுத்துக்கொள்ளவும். வடிகட்டி அருந்தவும். இதற்கு அடுத்த குடிநீர் செய்முறையைக் கேளுங்கள்.

முதிர்ந்த வேர்ப்பீர்க்கு, பேய்ப்புடல், தாமரை வளையம், வெட்பாலை அரிசி, சுக்கு, நெல்லி, கடுக்காய், கடுகுரோகணி,

..............................................................................................

168. படி – முறை. அலகு – இலைவடிவம். அரி – அரிசி; தாரம் – நீர்.

தேவதாரம், முத்தக்காசு, விலாமிச்சவேர் - 2 கழஞ்சு இரு நாழி நீர்விட்டுக் காய்ச்சி 1/8 பங்கில் எடுத்துக் கொள்ளவும். முறைப்படி காசளவு தேன் சேர்த்து, ஆற்றிக் குடிக்கவும். மற்றுமொரு குடிநீர் வகையைக் கேளுங்கள். சுக்கு, கொத்தமல்லி, கோட்டம், வேப்பஇலை சீந்தில் கொடி, மரமஞ்சள், கற்றாழைத் தண்டு, அதிமதுரம், சிறு காஞ்சோரி ஒவ்வொன்றும் இரண்டு கழஞ்சு, இருநாழி தண்ணீர் 8 பங்கு விட்டுக் 1/8 பங்கு வருமளவுக் காய்ச்சவும். வடிகட்டித்தேன் இரு கழஞ்சு சேர்த்துக் குடிக்கவும்.

முத்தக்காசு, கோட்டம், கொன்றை எலுமிச்சம் பழத்தோல், இலாமிச்ச வேர், மஞ்சள், இருநாழிநீர் வார்த்து 1/4 பங்கு வரும்வரைக் காய்ச்சி எடுத்துக் கொள்ளவும். தேன் சேர்த்துப் பருகவும்.

வெட்பாலை அரிசி, வேர்க் கொம்பு, இருவேலி, சிறு காஞ்சோரி வேர், பேராமுட்டி வேர், சிற்றாமுட்டி வேர் - ஒவ்வொன்றம் வகைக்கு இரு கழஞ்சு சேர்த்துக் கொள்ளவும். பின் 8 பங்கு தண்ணீர்விட்டுஒரு பங்கு வரும் வரைக் காய்ச்சி எடுத்து ஆறவிட்டு அருந்தவும்.

சீந்தில், வேப்ப இலை, அரிசிநீர் முத்தக்காசு, பேய்ப்புடல், சிறு காஞ்சோரி வேர், அதிமதுரம், தேவதாரம், நன்னாரி, திப்பிலி - வகைக்கு ஒரு கழஞ்சு - இருநாழி நீர் 8 இல் 1 பங்காகக் காய்ச்சி எடுத்துக் கொள்ளவும். கண்டச் சர்க்கரையைப் பொடியைச் சேர்த்துக் குடிக்கவும். நடுக்கமுடன் உள்ள பித்த கப சுரங்கள் அகன்று விடும்.

170. **சிலேத்தும் ஈளை இருமல்த்திர**

உண்டாங் கண்ணீரடை இதனுக்கு
உரைக்கில் சுரந்தோன்றின நாளே
கண்டங்கரலி, சுக்கு வில்லங்
கடிதாய்தட்டி, கலையந்தனில்
என்றங்கோர், நிறையாய் கூட்டிக்
குடிநீர் இருநாழி

தண்டா உலையிலிட்டு உரியாய்த்தானே
காய்ச்சிக் கொடுத்திடுமே.

171. கொடுத்தே கஞ்சியடைவுதனைக்
கூறுவன் கேளாலை, வில்லமுடன்
வடுத்தே, குமிழ், ஓர்நாழி
வனத்திலிட்டுத்தான் காய்ச்சி
எடுத்தார், இருநாழியுமாக
இயல்சேர், குழாலாய் சொல்லக்கேள்
கடுத்தே, குருஅனலா எரித்துக்
கடுக்கக் காய்ச்சிக் கொடுத்திடுமே.

172. கொடு, நீ, சோறு இவ்வுலையைக்
கொண்டிட்டாமினகு நின்
னோடு நானேழு இப்படியே
உணர்வு கொடுத்தனு எட்டாம்நாள்
வடுவே. கல்லாமூர்க்குடிநீர்
வகைதான் இரண்டு பட்டினியே
விடுவோர்க் கொம்பு, திப்பிலியும்
வெண்சந்தன முந்திரியுமாமே.

173. திரியுந்தோர் ஒன்று நாள்கழுஞ்சசெந்
தங்கி இருநாழிப் புனலிலிட்டு
இருந்தே காய்ச்சி எட்டொன்றாக்கி
இறகும், பெருங்காயமுந்தேனும்

..............................................................................................

170.அடை - நெருக்க. விள்ளங்கடிதாய் என்றாதல் வேண்டும்.
விள் - பேசுதல்.
172. கல்லா-துருவி; வடு - குற்றம் குற்றம்; இறகு என்பது மயிலிறகைக் குறிப்பாலுணர்த்தும்; கடுத்தல் - வெம்மையாதல்; குரு - இரசம். உலை - நீருலை. இயல் - மாறபட்ட.

பரிந்த அரத்தை, திப்பிலியும்
பைய, மேல் வீசிப்பருகி
அருந்தென, மொழியார் பின்னிரண்டாம்
அடையவே காய்ச்சியருந்துவீரே.

174. அரியதாஞ்சீந்தில், பற்பாடகம் சிறுமூலம் சுக்கு
பரிந்தாங்குமிழுடன் பரிந்தோர் ஒன்று கழஞ்சிவையாய்
சொரிந்த நீரும் நாழியிட்டுச் சுவறி எட்டொன்றாக்கி
அரிதான, திப்பிலிதேன் கலந்து, அருந்தீர்,
கலத்திலெடுத்தே.

175. காவார், வேர்க் கொம்பது, கடுக்காய்
கடுகு ரோகணி, செவ்வியமும்
மா, மரமஞ்சள் தேவதாரமுடன்
மருவோர் தான்றிரு கழஞ்சாய்
பாமா, இருநாழி நீரிலிட்டுப்
பரிந்தே எட்டொன்றாக்கியப்பின்
உரமாகிய, தேனதனைப் பரிந்து
உடனே கூட்டி யருந்துவீரே.

176. அரிதாம், பானை, தினம்தினமும்
அரசனை தனையாய் (ஆ)தரவாய்
புரியாதவன், கைய்யறியாதே
போந்துப் பிறவிப்பிணிக் கழுந்தும்
பெரிதாய், போக அறியாதே
பேசும், பிராணலானது போல்
எரியாய் இருந்த சிலேத்துமமும்
ஈளை இருமல் மாறிப்போமே.

..................................................................................................

173. இறகு என்பது மயிலிறகைக் குறிப்பாலுணர்த்தும். வனத்தீ - வனம் + தீ = வனம் - அழகு; இயல் - மாறபட்ட் கடுத்தல் - வெம்மையாதல் ; குரு - இரசம். உலை - நீருலை.

உரை: கபத்தினால் ஏற்பட்ட இரைப்பு, இருமல் என்பன தீர மருத்துவம். நெருக்கமான கண்ணீர் உண்டாகும், சுரம் தோன்றிய நாள் முதல்; கண்டங்காலி, சுக்கு, இவற்றை விரைவாகத்தட்டி எடுக்கவும். இருநாழித் தண்ணீர் சேர்த்துக் காய்ச்சி, உரியளவு குறுக்கி எடுக்கவும். வடிகட்டி அருந்தத் தரவும் இதற்கான உணவு முறையான கஞ்சி செய்வது பற்றிக் கேட்கவும். ஆல், வில்வம் குமிழ். நாழியளவு எடுத்துக் கொள்ளவும். அழாகக் காய்ச்சி எடுத்துக்கொள்ளவும். பின்னர் 2 நாழியளவுக்குக் காய்ச்சி அதன் ரசத்தைத் தரவும். நீ, சோற்றை இவ்வுலையிலுள்ள நீரால் ஆக்கி, மிளகுடன் ஏழுநாள் தொடர்ந்து உண்ணவும். 8ஆம் நாள் இரு வகைக் குடிநீர் அருந்தி, பத்தியத்தை கைவிட வேண்டும்.

வேர்க்கொம்பு, திப்பிலி, வெண்மை நிறச் சந்தனம், முந்திரி வகைக்க 4 கழஞ்சு, இரண்டு நாழித்தண்ணீர்; 1/8 பாங்காக் காய்ச்சி வடித்து மயில்த்தோகையைக் கறுக்கி பொடி செய்த அரத்தை, திப்பிலி சேர்த்து இவற்றை நீரிலிட்டுக் காய்ச்சிக் கொள்ளவும். பின் மயில்தோகையைக் கறுக்கி எடுத்த தூள், தேன் சேர்த்து குடிக்கவும். சீந்தில், பற்பாடகம், சிறுமூலம், சுக்கு, குமிழ், தண்டு பரங்கி வகைக்கு ஒரு கழஞ்சு நாழியளவு தண்ணீர். 1/8 பங்களவு வரக் காய்ச்சி வடிகட்டவும். திப்பிலியின் பொடி, தேன் கலந்து அருந்தவும்.

வேர்க்கொம்பு, கடுக்காய், கடுகு, ரோகணி, செவ்வியம், மா, மரமஞ்சள், தேவதாரம், தான்றிக்காய் - கழஞ்சளவு வகைக்கு எடுத்துக்கெள்ளவும். இருநாழிநீர் சேர்த்து 1/8 பங்காக்கி குறுக்கி தேன் சேர்த்துக் குடிக்க கபம் சளி இருமல் தீரும்.

177. மாறு பெருஞ்சீந்தில் மரமஞ்சள் சிறுமூல
எரிதனி, முந்திரியின் கனி செவ்வியமாறும்
சிறுகாஞ்சோரி பற்பாடக நாற்சாறும்
பற்கடை முள் கத்தரியின் வேரே.

........................................................................

177. எறிதல் - உறைத்தல்.

178. வேரிவையோர், ஒன்றிரு கழஞ்சரைகொண்டே
நீரிரு நாழி தனிலிட்டு வெட்டிவேர் இனியயங்
கோர் இனிய உற்றவைகள் வற்றிச்
சீரிய திப்பிலி தேனடனருந்தே.

179. அறிந்திடு, நன்னாரி யாடத் தூதுவளை இருந்த
சிறுகாஞ்சோரி இசங்கிலையில்
செரிந்து, செறியா ஆடாதோடை ....
திரிபலையும், பொந்திவளர் சுக்குடன் இம்பூரல்
புங்கம்வேரே.

180. பங்கமற, ஒன்றிரு கழஞ்சிவையன் ஒன்றே
பொங்கி, வரு இருநாழிப் புனலிடையிட்டே
கொங்குலவு, எட்டிலொருகூறு குறுகின்றால்
திங்க ளெனுமுப்பினோடு திப்பிலியு முன்னே.

உரை: பெரிய சீந்தில், மரமஞ்சள், சிறுமூலம் உறைத்தலை உடைய முந்திரிப்பழம், செவ்வியம், சிறுகாஞ்சோரிவேர், பற்பாடகம், கண்டங்கத்தரிவேர் - வகைக்கு இரு கழஞ்சு, தண்ணீர் 2 நாழி, வெட்டிவேர் - ஒருபங்கு. இவற்றைக் குடிநீராக்கி, திப்பிலிப் பொடி தேன் சேர்த்து அருந்தவும்.

நன்னாரி, தூதுவளை, சிறுகாஞ்சோரிவேர், இசங்கு வேர் - 1/4பங்கு. ஆடாதோடையிலை, திரிபலை, சுக்கு, இம்பூரல், புங்கன்வேர் - இரண்டு கழஞ்சு. தண்ணீர் - 2 நாழி. இதை 1/8 பங்காகக் குறுக்கி, உப்பு, திப்பிலியுடன் அருந்தவும்.

181. **சேத்தும சுரம் தீர எண்ணெய்.**

உன்னும் சேத்தும் சுரத்தின்
உழங்கையாக எண்ணெய் சொல்வேன்
பண்ணும் பசும்பொன் மெழுகு
பதின்பலந்தான்
நண்ணும் தாணிநீரிலிட்டெங்
என்னும்படிக் காய்ச்சிக்குறுணி

என்றால், நிலையின் நிறப்பிழிந்து
தண்ணும்தயிர், நீர் எண்ணெயிவை
நானாழியுந்தான் கலந்தே.

182. கலந்தே கரைத்தங் கதினுடனே
கரைக்கு மருந்து, சதகுப்பை
நலந்தானிருக்கும் அதிமதுரம்
சந்தனங் கோட்ட மரமஞ்சள்
குலஞ்சேர் அரத்தை ஏலமுடன்
கூறா இலாமிச்சமு
துலஞ்டசேர் கடுகு ரோகணி
செண்பகப்பூ தேவதாரமே.

183. தார் சேர், நீர்வள்ளிக் கிழங்கு
முத்தக்காசினு டனே
நீர்சேர், இருவேலியின்வேரும்
நிகரில்லா இலவங்கம் பெருகுறும்பை
கார் சேர் குழலாய் கடிதரைத்துக்
கரைத்துத் தெரித்துக் கண்ணுண்டாய்
சீர்சேர், வடித்தனைச்
சிரத்தே தேய்த்து மாற்றுகவே.

உரை: கபசுரத்திற்கு எண்ணெய்; பச்சை நிறமெழுகு - 10 பலம்; தாணிநீர் விட்டுக் கொண்டு, காய்ச்சி குறுணி அளவில் எடுக்கவும். தயிர், நீர், எண்ணெய் - 4 நாழி, குறுணிக்குடி நீரில் கலந்து கரைத்துக் கொள்ளவும். சதகுப்பை, அதிமதுரம், சந்தனம், கோட்டம், மரமஞ்சள், அரத்தை, ஏலம், விலாமிச்சம், கடுகு, ரோகணி, செண்பகப்பூ, தேவதாரம், நீர்வள்ளிக்கிழங்கு, முத்தக்காசு, இருவேலி வேர், இலவங்கம், பெருங்குறும்பை; இவைகளை அரைத்துக்கொண்டு, கரைத்து வடிகட்டவும். பின் தலையில் தேய்த்துக் குளிக்கவும்.

..................................................................................................

183. தெரித்து - பங்கிட்டு; அடைபு - சேர்த்தல், அடைபு என்றாதல் கூடும்.

184. **குளுந்தசுரம் தீரக்குடிநீர்**

குடிநீரண்டா அடைவு தனைக்
கூறக் கேளு, இருவேலி
படிசேர், நன்றாய், நன்னாரி
பகரும், பேரா முட்டியுடன்
கொடிதாம், சிறு காஞ்சோரி
கூட்டியோ(ர்) ஒன்றிரு கழஞ்சாய்
இருநீரிரு நாழியிட்டு
எட்டொன்றாக்கி அருந்துகவே.

உரை: குடிநீரில் சேரும் சரக்குகளை கூறுகின்றேன். இருவேலி, நன்னாரி, பேராமுட்டி, சிறு காஞ்சோரி இரண்டு கழஞ்சு; தண்ணீர் இரண்டு நாழியளவு 1/8 வரும்படிக் காய்ச்சி வடிகட்டிக் குடிக்க குளுந்த சுரம் தீரும்.

185. **சுரந்தீரச் சீதேவியார் எண்ணெய்**

அருந்து முந்திரிகைப் பழம் வேப்பலகு
மாசந்தனமும்
புரையார், பூசித்துடைத்திடவே
போதும் வியாதி புகன்றிடவே.

186. **விசம சுரம் தீரக் குடிநீர்**

இருந்த சுக்கு இருவேலி
இரு மரமஞ்சள்

........................................................................................

184. குறிப்பு : இருவேலி படிசேர் என்பதை இருவேலியின் அசர், அளவு என்றும் கொள்ளலாம்.

185. இப்பாடல் குறையாகவே உள்ளது.

பெருங்குரும்பை, வருத்தும்
நன்னாரி வேர்
பெறவே, வகையோர் ஒன்றொரு
கழஞ்சு சொரிந்திசைஞ்
திருமென்ற சொன்னா
வாகஞ் சொல்லூமென்றே.

187. சொல்லுங் கோட்டமதிமதுரம்
துய்ய முந்திரிகைப் பழத்தோலும்
வெல்லுங் கட்டிகை அதனுடனே
மேவும் கடுகுரோகணியும்
வல்லபடி, ஒன்றிரு கழஞ்சு
வார்த்த நீருமிருநாழி
அல்லறவே எட்டொன்றாக்கி
அருந்தத்தீரும் அருஞ்சுரமே.

உரை: அருஞ்சுரமே தீரக்குடிநீர்; சுக்கு, இருவேலி, மரமஞ்சள், பெருங்குரும்பை, நன்னாரிவேர், வகைக்கு இரண்டு கழஞ்சு இத்துடன், கோட்டம், அதிமதுரம், முந்திரிப்பழம், வெல்லக்கட்டி, கடுகு ரோகணி; இருகழஞ்சு, இருநாழி நீர்விட்டு 1/8 வருமளவுக் காய்ச்சி, வடிகட்டி, ஆறியவுடன் அருந்தவும்.

188. **வேறு**

அருந்தாமரை வளையம், சக்(கு)
காடாதோடை நன்னாரி
பரிந்த, இலுப்பைப்பூ, சிவன்
படர் வேர்ப்பீர்க்குச் செங்கழுநீர்
மருந்தாக குரோசாணி இருகழஞ்சாய்
அன்ன, நீர் இருநாழியிட்டுத்
திருந்த எட்டொன்றாக் கியதில்
தேன், சர்க்கரையது கூட்டே.

........................................................................................

186.தலைப்பில் விசம சுர மொன்றிருக்க, பாடலில் அருஞ்சுர மென்றுள்ளது.

உரை: தாமரை வளையம், சுக்கு, ஆடாதோடை, நன்னாரி, இலுப்பைபூ, சிவன்வேம்பூ, வேர், பீர்க்கு; செங்கழுநீர், குரோசாணி ஓமம் - இரண்டு கழஞ்சு. இருநாழி நீர்; சேர்த்துக் காய்ச்சி 1,8 பங்காக வடிகட்டித் தேன், சர்க்கரையுடன் சேர்த்து அருந்த, அருஞ்சுரம் தீரும்.

189. **முளுத்த சுரம் தீர எண்ணெய்**

காராய், முளுத்த சுரந்தீர
களித்தோர் எண்ணெயடைவு சொல்வன்
நீரார் சீதேவி சிற்றாமுட்டி
நீடுஞ் சீந்தில் தண்டினுடன்
பாரார் ஒன்று பன்னிரண்டு
பலந்தான் இடித்தங்கிரு தூணி
நீர்தான் எட்டொன்றாக்கி
பாரார் ஒன்று பன்னிரண்டு
பலந்தான் இடித்தங்இரு தூணி
நீர்தான் எட்டொன்றாக்கி
நினைவாய் பிழிந்து கொள்வாயே.

190. பிழிந்து, செஞ்சந்தன மதுரம்
பின்னு இலாமிச்ச இருவேலி
மொந்த, கோட்டச் செண்பகப்பூ
முற்றும், சந்தனம் நன்னாரி
ஒழிந்த, நாகப்பூ, அரத்தையுடனே
சத்த வேதிக் கிழங்கு...............
பொழிந்த, தாமரைவளையம்
புகலும் தே தாரமே.

..............................................................................................

190. சத்தவேதிக்கிழங்கு - சதாவேரிக் கிழங்காதல் கூடும்.

191. தாார, சேரேலமிலவங்கம்
தக்ககோல, மடவுடனே சூர்
சேர் செவ்வல்லிக கொடி
சொலமதுதுாடரு, மிருவேலி அதனுடனே
கூர் சேர், முத்தக்காசு சதகுப்பை
அரேணுகமஞ்சட்டி ஆர்
சேர் சடையாய் கழஞ் சொன்றே
அரையாயரைத்துக் கரைத்திடுமே.

192. கரை, நெய்யுரி, எண்ணெய்யுரி, உரியய்யா
கலந்திரு நாழியைப் பின்தான்
விரைய எடுத்துப் பதத்திறக்கி வேண்டும்
பச்சைக் கற்பூரம் கழஞ்சு
முறைய, இதற்குள் வடித்துடம்பில்
தலையில், புரையார் பூசித்
புரையார்பூசித் துடைத்திடவே
போகும் வியாதி புகன்றிடவே.

உரை: சீதேவிச் செங்கழுநீர், சிற்றாமுட்டி, சீந்தில் தண்டு, வகைக்கு 12 பலம். இதைப் பொடி செய்து தூணியளவு தண்ணீரில் சேர்த்துக் கலக்கிக் காய்ச்சி 1/8 பங்கில் எடுத்து, வடிகட்டியபின்பு இலாமிச்ச வேர், இருவேலி, கோட்டம், செண்பகப்பூ, சந்தனம், நன்னாரி, சிறுநாகப்பூ, அரத்தை, சதாவேரிக் கிழங்கு, தாமரை வளையம், தேவதாரம், ஏலம், கிராம்பு, தக்கோலம், செவ்வல்லிக்கொடி, இருவேலி, முத்தக்காசு, சதகுப்பை, அரேணுகம், மஞ்சட்டி, சடைச்சி - வகைக்கு ஒரு கழஞ்சு, பொடி செய்து, முன் சொன்ன குடிநீரில் கரைத்துக்கொள்ளவும். நெய், எண்ணெய் வகைக்கு உரியளவு; இரு நாழிகையளவு எல்லாவற்றையும் சேர்த்து, ஊறவைத்தக்கொள்ளவும். பின் எடுத்துக் காய்ச்சிப் பதத்தில் எடுத்து, வடிகட்டி பச்சை கற்பூரம் கழஞ்சு சேர்த்துக் கொள்ளவும், உடலிலும், தலையிலும் பூசவும். இவ்வாறு செய்ய நோயானது நீங்கும்.

193. **விசம சுரம் தீர**

அமரும், விட்டு, விடாமலும்
அதிகவனது ஆகித்தான்
அமரும் இதன்முன் மயக்கம்
தானேத் தெளியுந் தனக்கு
அமரும் பொருந்தும் வேப்பந்தோல்
கடுக்காய் சீந்தில் புடல்வேர்க் கொம்பும்
இம்மருந்துடன் இலவம்பூ இஞ்சி
இவையோர் ஒன்றிரு கழஞ்சே

194. இருநாழித் தண்ணீர் தனிலிட்டு உழக்காய்
காய்ச்சி இயல்பாகப்
பருகு, இன்னீரே, இடுஞ் சுரந்தான்
தருவாக, இன்னமொரு குடிநீர் கேளீர்
தயங்காமல், வேர்க் கொம்பு, வெட்பாலை அரிசி
மருவாகு, இலாமிச்சங் கொத்தமல்லி
மனமகிழும், சீந்தில், பற்பாடக ஆடாதோடை வேரோடே.

உரை: வேப்பந்தோல், கடுக்காய், சீந்தில், பேய்ப்புடல், வேர்க்கொம்பு, இலவம்பூ, இஞ்சி – இரண்டு கழஞ்சு தண்ணீர் இருநாழி; உழக்களவு வரும் வரைநன்கு காய்ச்சவும். வடிகட்டி அருந்த, சுரநோய் தீரும். இன்னொரு குடிநீர் செய்யும் முறையைக் கேட்கவும். வேர்க்கொம்பு, வெட்பாலை அரிசி, இலாமிச்ச வேர், கொத்தமல்லி, சீந்தில், பற்பாடகம், ஆடாதோடை வேர்.

195. வேரொன்று கழஞ்சுதான் கொண்டு
விரையதாக, துவைத்ததனில்
நீர், ஓரிரண்டு நாழி தனில்
தீயிட்டெரித்து, உழக்காக்கி

பாரோதிய, சர்க்கரையிட்டுப்
பருகத் தீருமென்ன ஒன்று
காரோதிய, குழல்மடமாதே
கடுக்கக்கேளாய் காதலுற்றே.

196. உற்ற வெட்பாலை, இனரிசியுடன்
உகந்த பற்பாடக அதிமதுரம்
சற்றே வளரும் நிலவேம்பு தானும்
சிறு காஞ்சோரியின் வேர்
துற்றே, இருக்கும் சச்சப் புடல்
சொல்லும் தர்ப்பப்புல், றெல்
கற்றோர் புகலும் கடு தான்றி
கண்டக்காலி கோட்ட முமே.

197. கோட்டஞ் சேர்புடல், கொன்றைப் பழம்
கடுகு ரோகணியும்
மீட்டமுட ஒன்றிரு கழஞ்சாய்
இருநாழி தண்ணீர் தனிலிட்டு
நாட்டமுறவே, உழக்காக்கி
நயந்தே, குடிப்பீராகில்
வாட்டமறிய, சுரங்களெல்லாம்
மாறிப்போ என்றுரைத்தனமே.

உரை: இவற்றை கழஞ்சளவு எடுத்துக் கொண்டு நன்கு இடித்து, நாழி நீரில் கலந்துக் காய்ச்சவும், உழக்களவு ஆனவுடன் எடுத்து வடிகட்டி, சர்க்கரை கலந்து, பருகவும். நோய் விலகும்.

வெட்பாலை அரிசி, பற்பாடகம் அதிமதுரம், நிலவேம்பு, சிறுகாஞ்சோரிவேர், பேய்ப்புடல், அறுகன்புல், கடுக்காய், தான்றிக்காய், கண்டங்காலி, கோட்டம், கொன்றை, எலுமிச்சம் பழம், கடுகு, ரோகணி வகைக்கு இரண்டு கழஞ்சு, தண்ணீர் இரண்டு நாழி; இவற்றைக் கலந்து காய்ச்சி உழக்களவு வரும்போது எடுத்து, வடிகட்டிக் குடிக்கவும், வாட்டத்தை உண்டாக்கும் அனைத்து வகையான சுரங்கள் தீரும்.

198. **சுரம்தீரக் குடிநீர்**

உரைக்கும் தேவதாரம்
உயர்சுக்கு கோட்டம் பற்பாடகம்
விரைக்கு, முத்தக்காசினுடன்
வேண்டுங் கடுக்காய் குமிழ்வேரும்
திரைக்குள், புகட்டும் நிலவேம்பும்
தாங்கம் சிறு மூலகந் தேக்கு
நரைக்கும், சிறிய திப்பிலியோர்
ஒன்றரைக் கழஞ்சுதான் கொள்ளே.

உரை: தேவதாரம், சுக்கு, கோட்டம், பற்பாடகம், முத்தக்காசு, கடுக்காய், கமிழ்வேர், நிலவேம்பு, சிறுமூலம், சிறுதேக்கு, திப்பிலி, 1 1/2 கழஞ்சு எடை 2 நாழித் தண்ணீர் 1/8 பங்கு வரும்வரை காய்ச்சிக் குடிக்கவும். சுரநோய் நீங்கும்.

199. கொள்ளுந்தன், புனல் கொண்டிரு நாழிக்
குள்ளேயிட்டு உழக்காக்கி
விள்ளியிடாமல், நீதானும் விறகுடனே
விழுங்கிலையாகில்
கள்ளுலாவும் குழல்மாதே, கருமம் சொன்னோம்
கருதிக்கேள்
எள்ளிடாமல், சுரங்களெல்லாம்
இனிதானும் விட்டேகிடுமே.

200. **நெய்**

ஏகுமிதற்கு நெய் பண்ணு இயல்பைக்
கேள், இளமஞ்சளமாகும்
நிலவேர் அறுகழஞ்சு அறுகழஞ்சு
அரியப் பிசி ஒன்றுதான்
வாகு பெறவே, கழஞ்சரைத்து
வகையில் பாலும் நெய்தானும்

யாக சேர் ஒவ்வொருநாழி
பரிந்து, வார்த்துக் கரைந்திடுமே.

201. கரைத்துப் பதந்தன்னிலே வடித்துக்
கழஞ்சு நெய்தான் அருந்துவீராய்
விரைத்த உடல், பருமன் ஆக, முன்னே
மிகவும் குளிருஉடம் பெல்லாம்
உரைத்தேவர், வாகட நூலதனை
உண்மையாக உரைசெய்தோம்
உரைக்குள் முனிவன் சொன்னதனைத்
தானே, சொன்னோ, தாரணிக்கே.

உரை: சுரநோய் தீர்க்க, நெய்யானது கூறப்படுகிறது. இளமஞ்சள் நிறநெய், நிலவேர், வகைக்கு 6 கழஞ்சு. அரிசிச்சோறு ஒருகழஞ்சு அரைத்துக் கொண்டு, பால், நெய் வகைக்கு ஒருநாழி சேர்த்து கரைத்துக் கொள்ளவும். பின்னர் காய்ச்சி வடித்துக்கொண்டு, கூடுஞ்சளவு குடிக்கவும். குளிர்சுரத்தால் விரைத்து, குளிர்ந்துள்ள உடல் நல்லபடியாகத் தேறும். இதை, உண்மையாக முனிவர், கூறியதை, நான் உலகத்திலுள்ளவர்களுக்குச் சொன்னேன்.

202. **கண்டக சன்னி தீரக் குடிநீர்**

கடுகுரோகணி, தேவதாரம் வெங்காயமுள்ளி
காரசுக்கு நொச்சியிலை
இடும் பேராமுட்டி, கண்டங்கத்தரியின் வேர்
இசைந்த பூசணித் தண்டுடனே
பொடியாய் இருநாழி நீரிலிட்டுப்
பொருந்து உழக்காய் திப்பிலிதூவி
அடவாய் இஞ்சிச் சாறு உழக்காய்
கொட, அருந்தச் சுரங்கள் அகன்றிடுமே.

உரை: கடுகரோகணி, தேவதாரம், வெங்காயம், பூண்டு, சுக்கு, நொச்சி, பேராமுட்டி, கண்டங்கத்தரிவேர், பூசணித்தண்டு - சமஅளவு தண்ணீர் 2 நாழி; சேர்த்துக் காய்ச்சி உழக்களலில் எடுத்து வடிகட்டவும். திப்பிலி பொடி, இஞ்சிச்சாறு உழக்களவு சேர்த்துக் குடிநீருடன் அருந்த, சுரங்கள் நீங்கும்.

**பூர்த்தி**



## மூலிகைகளின் பட்டியல்

| | மூலிகையின் பெயர் | பாடல் எண். |
|---|---|---|
| 1. | பெரியவாகை | 2 (48) |
| 2. | பெருங்குமிழ் | 2 |
| 3. | பாதிரி | 2 |
| 4. | முன்னை | 2 |
| 5. | சதாவேரி | 2 |
| 6. | நன்னாரி | 2 |
| 7. | நெரிஞ்சில் | 2 |
| 8. | நற்புடல் | 2 |
| 9. | சீந்தில் | 2 |
| 10. | பேராமுட்டி | 2 |
| 11. | சித்தமல்லி | 2 (49) |
| 12. | பேராமல்லி | 2 |
| 13. | சிற்றாமுட்டி | 2 |
| 14. | ஆடாதோடை | 2 |
| 15. | கண்டங்கத்தரி | 2 |
| 16. | முத்தக்காசு | 2 |
| 17. | இலாமிச்சை | 2 |
| 18. | அவுரி | 2 |
| 19. | செங்கழுநீர்க் கிழங்கு | 2 |
| 20. | சிறுகுறிஞ்சான் | 2 |
| 21. | சிறுகாஞ்சோரி | 2 |
| 22. | முட்கா வேளை | 2 |
| 23. | சாரணை | 2 (50) |
| 24. | தேவதாரம் | 3 (51) |
| 25. | அரத்தை | |
| 26. | வசம்பு | |
| 27. | சுக்கு | |

| | | |
|---|---|---|
| 28. | கோட்டம் | |
| 29. | நற்திப்பிலி | |
| 30. | மிளகு | 4 (53) |
| 31. | ஏலம் | ,, |
| 32. | அதிமதுரம் | ,, |
| 33. | இருவேலி | 4 (53) |
| 34. | இலாமிச்சம் | ,, |
| 35. | கலைக்கொம்பு (மான்) | ,, |
| 36. | இலுக்கைப்பூ | ,, |
| 37. | நன்னாரி | ,, |
| 38. | பேய்ப்புடல் | ,, |
| 39. | முத்தக்காசு | ,, |
| 40. | ஆடாதோடை இலை | ,, |
| 41. | பற்பாடகம் | ,, |
| 42. | இம்பூரல் | 5 (55) |
| 43. | ஆடாதோடை | ,, |
| 44. | சிறுகாஞ்சோரி | ,, |
| 45. | மத்தக்காசு | ,, |
| 46. | கற்றாளை | ,, |
| 47. | கண்டங்கத்தரி | ,, |
| 48. | சிறவழுதலை | ,, |
| 49. | சுக்கு | ,, |
| 50. | திப்பிலிப்பொடி | ,, |
| 51. | தேன் | 6 (57) |
| 52. | நன்னாரி | ,, |
| 53. | முத்தக்காசு | ,, |
| 54. | பேய்ப்புடல் | ,,. |
| 55. | பேராமுட்டி | ,, |
| 56. | கூவிளவேர் | ,, |
| 57. | குளவிக்கூடு (கௌஜபான்) | ,, |
| 58. | செவ்வல்லிக்கொடி | ,, |

| | | |
|---|---|---|
| 59. | செங்கழுநீர் | ,, |
| 60. | திப்பில் மூலம் | ,, |
| 61. | இலந்தையிலை | 7 (59) |
| 62. | நன்னாரி | ,, |
| 63. | சீந்தில் தண்டு | ,, |
| 64. | இருவேலி | ,, |
| 65. | இலாமிச்சம் வேர் | ,, |

...



## தேரையர் குணவாகடம்

1. கோல விழியாய், மெத்தவேளை சுட்ட
சாம்பலுடன் செத்துத் திசையாமல்
பாலையிட்டு, மிஞ்சும் பனைவெல்லம்
கருப்புக்கட்டியுடன்
ஆலையிட்டுத் தின்ன இளைக்கும்
அதிசாரமே.

உரை: அதிசாரம் எனப்படும் கழிச்சல் நோய் நீங்க, மருத்துவம், பருமன் உள்ள வேளை வேரை எரித்துச் சாம்பலாக்கவும். பால் சேர்க்கவும். ஆலையில் ஆட்டி எடுத்த புதுபனை வெல்லம், பதனீரிலிருந்து பெறப்பட்ட கருப்புக்கட்டி இவைகளை முன் சொன்னவைகளுக்கு அதிகம் சேர்த்துக் குழைத்துண்ண அதிசாரம் என்ற கழிச்சல் நோய் நீங்கும்.

2. வட்டத் திருப்பிவாய்த்த சுண்டியிடு
கூட்டியும் இளஞ்சொறிக் கூட்டி
கட்டுப்படாத கழிச்சல் வெதுப்பெல்லாம்
திட்டுத்திடுக்கென திருகைய், திண்ணமே.

உரை: கழிச்சல், வெதுப்பு என்ற நோய்கள், உறுதியுடன் உடன் நீங்கும். இதற்கான மருந்து; வட்டதிருப்பி இளம் காஞ்சோரி இவைகளைச் சேர்த்து அடுப்பிலேற்றி, நீர் விட்டுக்காய்ச்சவும். வடிகட்டி, அருந்த, கட்டுப்படாத கழிச்சல் நோய் தீரும்.

1. இப்பாடல் சரிவர அமையவில்லை. சேத்து என்பதை சேத்து இசை என்றும் ஆம் அப்பாலை என்றாதல் வேண்டும்.

பாடவேறுபாடு:

***வட்டத்திருப்பி பெருமரத்தோல் மாதளையோடு வில்வக்காய்***
***மட்டமுத்தக்கா, சுக்கு, வரு இலவங்க அதிவிடையம்***
***திட்டமுடனே இருதாழிதிருத்தக் காய்ச்சி நீர் உழக்கு***
***இட்டகசாயம் கொள்வீராய் இதில் அதிசாரம் அறியப்படுமே.***

உரை: வலிமையுள்ள ஆமணக்கு, தருப்பைப்புல், தாமரை, மூங்கிலின் கறுப்புத் தோகை, பொன்னாங்காணி என்றவற்றை எடுத்துக் கொள்ளவும். எருமை வெண்ணெயைச் சூரிய வெப்பத்தில் வைத்து உருக்கவும். உருகிய நெய்யுடன், ஆமை நெய் கூட்டவும். முதலில் கூறப் பட்டவைகளை சேர்த்துப் பொடி செய்து அரைத்து, பூச்ச மருந்தாக்கவும். நட்ட வேலாயுத்தை ஒத்த கண்களை உடைய பெண் பொலிவுடன் யாருடன் கலப்பார்கள்? வேலாயுதம் இங்கு கண்களுக்கு உவமையாகிது.

3. தம்பனம் : **ஆண்மை அதிகரிக்க**

அரசம் புல்லூரியுடன்
ஆடையொட்டி அமுக்ரா, வரை,
சேர் ஆனை, மதங்கூட்டி
மதித்தித்து தேனால் அரைத்திட்டுப்
பாசம் பூசிம் பூசிப்புனருக்கி நெல்
பதினாயிரவாம், மடநல்லார்
நிரைசேர் மணியாற்றார்கள்
நினைக்க வேண்டாம் நிச்சயமே.

..............................................................................................................

தா+மணக்கு; வலிமையான ஆமணக்கு.
நா-பொலிவு, விரவல்-கலத்தல், ஆர் -யார் என்ற வினா, திரிந்து, ஆர் என்றானது.
குறிப்பு: தட்டை - மூங்கில். அத்தம்-அதிவிடையம். சூது - தாமரை, உபாதானம் - என்றதல் வேண்டும். - தருப்பைப்புல்.
குறிப்பு: சுண்டி என்பதை சுக்கு என்றும் பொருள் கொள்ளலாம். சுவடியின் பாடல் எண்.2, மகால் வெளியீடான, அகத்தியர் 2000 பாகம் 1 &2 இல் பக்கம் 343 இல் உள்ளது.

உரை: அரச மரத்தில் உள்ள புல்லுருவி, ஆடையொட்டி, அமுக்ரா, ஆவாரை, அத்தி, கத்தூரி என்பனவற்றைச் சேர்க்கவும். பின்னர சீரகபொடியையும் கலந்து, குறியில் பூசவும். மடமை இயல்பையும் அணிமணிகளை உடைய குடும்பத்துப் பெண்கள் 14000 வரிசையாக வந்தாலும், அவர்களை (இல்லற வாழ்வில்) நிறைவு படுத்த இயலாது என்று உறுதியாக எண்ணவேண்டாம். எவரையும் நிறைவு படுத்த இயலும், அந்த அளவுக்கு மிகவும் ஆற்றல் உள்ளது இப்பூச்சு மருந்தாகும்.

4. பூனைக்காலி, நிலப்பனை, சர்க்கரை
ஆனைப் பாலில் அரைத்து முழுங்கிட
மானைப்போல விழி, வஞ்சி நல்லாளுக்கு
உள்ளப்பா, யல் உலக்கையதாமே.

உரை: மருண்ட மானின் கண்களை உடைய நற்குடிப்பெண்ணைப் படுக்கையில், கருவுலக்கை போன்ற பிறப்புறுப்பைக் கொண்டு நிறைவடையச் செய்தல் வேண்டும். இவ்விதம் செயல் படத்தேவையான மருந்து. பூனைக்காலிவித்து, நிலப்பனை கிழங்கு, சர்க்கரை, அத்திப்பழம் என்பனவற்றைப் பாலில் அரைத்துப் பருகுதல் வேண்டும். பிறப்புறுப்பு, பெருத்து, கலவிக்காலம் அதிகரிக்கும், ஆண்மை பெருக்கும் செய்கையை உடையது.

5. (வெ)தந்தம் இழப்பிக்கும், தீவினைகள் உண்டாக்கும்
வந்த, மிகுந்ததாது, வரளவிக்கும்
செந்தத் திருவும், போமெனக் கதறும் பொல்
லாது கும்மட்டிக்காய், ஆமாறு சொன்னேன், அறி.

.................................................................................

பாசம் - அன்பு; உக்குதல் - மெலிதல்; நிரை - வரிசை, பாசம் - சீரகம்; அல் - இடைச்சொல், இருள்; பாயல் - மக்கள் படுக்கை.

தேரையர் வாகடம்: பக்கம் 121, பாடல் 338 இல் உள்ளது. பாடவேறுபாடு: மங்கையர் தம்மை ஊணப்பாயு உலக்கை ஆகி விடும். செந்திரு - திருமகள். ஆமாறு, வழி, உபாயம்

உரை: பற்களை வலுவிழக்கச் செய்யும், தீயவைகள் ஏற்படும். ஆண்மையைக் குன்றச் செய்யும். செல்வம் நீங்க, தீமைகளை ஏற்படுத்தும். கும்மட்டியின் இயல்புகளை அறியுமாறு தந்திரமாகக் கூறினேன். கும்மட்டிக் காயில் தீய பண்புகள் கூறப்பட்டுள்ளன.

6. **விசத்துக்கு நசியம் (மூக்குத்தூள்)**

எலுமிச்சங் காயினுள்ளே
இனிய நல் பச்சைப் பாம்பைச்
செருகி, தன் சாறினினோடு
சுக்குடன், மிளகோடு உள்ளி
நீறு ஊமத்தங்காய் அரைத்துண்டை
நிணமெய்யில், மூக்கில் விடுவிக்க
விட்டுப் போகும்விடமெல்லாம் விரைந்தே.

உரை: எலுமிச்சங் கனியைக்கீறிக் கொள்ளவும். இதில் திருநீற்றுப்பச்சை, நாவல் என்பனவற்றைச் சொருகவும். பின்னர் பிழியவும். இச் சாற்றுடன், சுக்கு, மிளகு, பூண்டு இவற்றின் பொடி, ஊமத்தைக் காயின் சாம்பல், என்பன கலந்து, வடிகட்டி மூக்கில் விடவும். உடலிலும் வெளிபுறம் பூச, நஞ்சுகள் உடன் விலகும்.

7. **நாற்றம் நீங்க**

இரண்டு தனிவேரினோடு, மஞ்சளோடு
கொடிவேலி சாரட்டைக் குறட்டை
இரண்டைத்தலைசூடு வள்ளி, நீடுபெருங்காயம்
சீரிய, கீரையோடு, திப்பிலி வெள்ளுள்ளி

........................................................................

குறிப்பு: நாவல் மரக்குச்சி, திருநீற்றுப்பச்சிலை இலைக் குச்சியை செருதல் எளிதாகும்.

உருண்டு, தகா சொரிவரியப் பானை உரித்தோர் மூக்கு

குராலினோடு, நெல்லி இலுப்பை சுக்கு

கருண்ட மிளகு காடி, மோரி(ல்) நாள் முத்தகாசு

குளந்தன், முதிர்ந்தநெல்லி கடுதான்றியோக

தொண்டு தேனில் குழைத்து வல்லீர் எனும்

மற்றயானை பலமுண்டாம், வல்லூர்லா

வடிவுடையார்

கற்ற நாறு(ம்) உடம்பெல்லாம் கழுநீர்

கமலம் மாறிவிடும்.

உரை: சண்பகவேர், முள் முருக்கு, மஞ்சள், கொடி வேலி, சாரணை, மூக்கரட்டை, இண்டு, தலைச் சூடிப்பட்டை, வன்னி, பெருங்காயம், கீரை, திப்பிலி, பூண்டு, பலா, எலுமிச்சங்கனி, தென்னம்பாளை, கொத்தமல்லி, மூங்கில், அமுக்கிரா, நெல்லி, இலுப்பை, சுக்கு, மலை மிளகு, இவற்றைக்காடி, மோர் இவற்றில் ஒரு நாள் குடிக்கவும், முத்தக்காசு, வெல்லம், முற்றிய நெல்லிக்காய், கடுக்காய், தான்றிக்காய், பொடி செய்துச் சேர்த்து தேனில் குழைத்து உண்ண, மதங்கொண்ட யானையின் வலிவு உண்டாகும். பருந்தைப் போன்று உருவத்தை பெறுவார்கள். பஞ்ச பட்சி நூலில் வல்லூரு பறவை, உயர்ந்த வலிமைக்கு எடுத்துக்காட்டாகக் கூறப்பட்டுள்ளது. உடலில் ஏற்படும் நாற்றம் மாறி, செங்கழுநீர்ப்பூ, தாமரையின் மணம் வீசும்.

உரை : இவைகளைப் பொடி செய்து கொண்டு மூக்கில் விட, இறந்தவனும் உயிர் கொண்டு எழுவான். உயிரினங்களைக்கொண்டு இப்பாடல் புனையப் பட்டுள்ள நயம் இன்புறத் தக்கதாகும். மறை பொருளை அறியாமல், மருந்து செய்தல் இயலாத ஒன்றாகும்.

.........................................................................................

7. இண்டு என்றாதல் வேண்டும். பாம்பு – நாகம், நாவல், புன்னை. காய் என்பதற்குக் கனி என்றே பொருள். இதைச் சாறு என்பதலால் அறியலாம்.

குறிப்பு : இருண்டி என்றாதல் வேண்டும். பாடல் சரிவர இல்லை. உரு – எலுமிச்சம்பழம். தகர் – பலா. உறி – கொத்துமல்லி. தோல் மூங்கில் குறந்தன் – என்பது குளந்தான் என்றாதல் வேண்டும். கருணிட மிளகு என்றாதல் வேண்டும்.

8. [redacted] **தீர நசியம்.** (மூக்குத்தூள்)

இந்திரகோபம், பச்சைப் பாம்பு
எளிலார், செந்தேள் பூநாகம்
அந்தமிலா, உழல், கோ(ர்) அட்டை
அறுபுள்ளி........................
கொந்தார், குழலார் பொடி செய்து
கொண்டு, மூக்கில் விடுவீரே
வெந்த பிணமும் எழுந்திருக்கும்
விடநூல் தன்னில் மிக்கோரே.

**மறைபொருள் விளக்கம்.**

இந்திரகோபம் – ஈசல்
பச்சை – திருநீற்றுப் பச்சை
பூநாகம் – சிறுநாகப்பூ
தேள் - தேள் கொடுக்கு இலை.
கோ – இலந்தை
பாம்பு – இரும்பை (இலுப்பை)
எலி – கள்ளி; எலிவார் – கள்ளியின் சாறு
உலாகம் – கூவைக்கிழங்கு
அந்தம் – கத்தூரி
இலா – இலாமிச்சை
உழல் – உழலைமரம்
அட்டை – செருப்பின் அடி; சிறு செருப்படி
அரு (வு) – அத்தி
புள்ளி – புல்லி

........................................................................................

எலி – கள்ளி. எலியார் – என்றாதல் வேண்டும். 8. இப்பாடல் சரிவர அமையவில்லை. 9. அத்த முலா கோ(ர்) அட்டை என்றாதல் வேண்டும். உலா – உலாகம் – கூவை ; அத்தி – வெருகு (காட்டுப்பூனை) கொந்தார் – கொந்தம் – சுருண்ட கூந்தலை உடைய பெண். அறு – அரி; 15. துளிர் – என்றாதல் வேண்டும். குறிப்பு: இருண்டி என்றாதல் வேண்டும். பாடல் சரிவர இல்லை. உரு – எலுமிச்சம்பழம். தகர் – பலா. உறி – கொத்தமல்லி. தோல் – மூங்கில்; கருணிட மிளகு என்றாதல் வேண்டும். குறந்தன் என்பது குந்தான் என்றாதல் வேண்டும். யோகம் – சேர்க்கை.

உரை: மின்மினிப் பூச்சி, பச்சைப் பெரிய செந்தேள், காட்டுப் பூனை, கோட்டான், மான், அட்டை, ஆறு புள்ளியுள்ள வண்டு, இவைகளைப் பொடி செய்யவும். இப்பொடியை வெளி மருந்தாக மூக்கில் அடைக்கவும். நஞ்சின் காரணமாக நினைவிழந்தவர்களுக்குப் பயன் படுத்த, எழுந்து உயிர் பெறுவார்கள். இதை நஞ்சு மருத்துவர்கள் கூறுவார்கள்.

9. **சிவனார் வேம்பு**

வட்ட முலையாள் வசமாவாள்
மாவின் துளிபோல் நிறமாகும்
பட்ட புண்ணும், கடி விடமும்
பாதப்பிளப்பு இவைதீரும்
குன்மம் தீரும்.
திட்டங்கேளீர், சிறுகாலே
சிவன் வேம்பு, தின்பீரே.

உரை: பெண்கள், விரும்புவார்கள். மாமரத்தின் சிவந்த துளிர்போன்ற வண்ணம் ஏற்படும். காயம்பட்ட புண்கள், கால்வெடிப்பு, 18 வகையான தோல் நோய்கள் உயிரினங்களின் கடி நஞ்சு என்பன, சிவன் வேம்பைக் கொண்டு செய்யப்பட்ட மருந்துகளை உண்ண, விலகும்.

10. வெண்குட்டம், கருங்குட்டமிரு
குட்டமிகை யாவும்
கண கெட்டிருந்தார்க்கு
கண்ணும் வெளியா
மண்கொண்ட கோட்டத்து மார் கொண்ட
மென்மொழியீர், இலை பறித்து

..........................................................................................

9. துளிர் என்றாதல் வேண்டும்

திள்பீரேல் பருக்கட்டை த்

தலைக் குழல் கட்டலாமே.

உரை: மகடூஉ முன்னிலையாக இப்பாடல் உள்ளது. வெங்காயம், தாமரைப் பூண்டு இலை ; இவைகளை மருந்தாகச் செய்தும், உணவாகவும் உண்ண, வெள்ளை நிறத்தோல், கருப்பு நிறத்தோல், பார்வை இழப்பு, என்பன நீங்கும், மூளைவளர்ச்சி நீண்ட கூந்தல் என்ற பயன்கள் கிட்டும். மழை காலத்தில் மழை பெய்ய, நறுமணமுள்ள செடிகள், பயனடைவது ஒத்து.

பாடவேறுபாடு;

வெண்குட்டம் கருங்குட்டம்

விரிகுட்ட இவையாவும்

கண்கெட்டே இருந்தார்க்கு

கண்ணும் தெருவிட

மண்கொட்ட கோட்டத்தில்

மாரிகாலத்தில் மழைபெய்யப்

பலப்பலப்பூடு அதனைப்

பண்கொட்டுமென் மொழியாய் இலை

பறித்துத் தலைச் சற்றைக்

குழல் கட்டலாமே.

உரை:மகடூஉ முன்னிலையாக இப்பாடல் உள்ளது. மென்மையாகப் பேசும் அரசி, வெங்காயம், தாமரைப் பூண்டின் இலையைப் பறித்து, மருந்து செய்தும், உணவாகவும் தக்கபடி உண்ண வெள்ளை நிறத்தோல், கறுமை நிறத்தோல், பார்வை இழப்பு, அறிவில்லாமை நீங்கி நீண்ட கூந்தல் என்ற பயன்கள் உண்டாகும். மழை காலத்தில் மழை பெய்ய, நறுமணமுள்ள செடி ஒழுங்காகப் பயனடையும். இங்கு நறுமணச் செடி - அரசிக்கு, ஒப்புமையாகக் கூறப்பட்டுள்ளது.

..........................................................................................

தேரையர் வாகடம் - இரா. தியாகராசன், பக். 107, பாடல் 300, பழனி தண்டாயுதபாணி திருக்கோயில் வெளியீடு - 1975) கோட்டம் - மணமுள்ள செடி வசம் - ஒழுங்குபடும்.

10. **நஞ்சுகளின் முறிவு**

எட்டிக்கு நாவல், எழில் சுக்கு, தான்றி
வட்டமிடும், தாமரையாம் மற்று
திட்டமுடன், ஆவாரையாம் கள்ளி
அரளிக்கனி, கடுக்காய், மேவிய
நெய், தேனுக்கு, வெந்தகரி
பாவலர்கள் எள்ளோடு சர்க்கரையும்
சொன்னார்கள் எருக்கிலை அங்கொள்ளோடு
வைக்கும் கழுநீர், பிசிறி வெள்ளைச்
சங்கம், கழுதைவண்டுக்கு நஞ்சு
வஞ்சம்கொள்ளும், நீற்றுக்கு
மஞ்சள் அசங்காமல் பெற்ற
ஆரலுக்குப்புளி, எண்ணெய் சாற்றி நல்
எருக்கு, காடிக்குத் தேற்றமுடன் மாற்று
இலாமிச்சை வரையாகவே குடிக்கில் கூற்ற
விடம் தீர்ந்துக் குணமாகும் மற்றும்
சிறு குறிஞ்சா மா

**தாவர நஞ்சுகளுக்கு மாற்று:**

உரை: எட்டியின் நஞ்சுக்கு தாமரை முறிவாகும். சுக்கு, தான்றிக் காயின் நஞ்சுக்கு தாமரை விதை மாற்றாகும். அரளி, ஆவாரை, பழம், கடுக்காய், நெய், தேன் என்பனவற்றுக்கு சுட்ட மிளகுப்பொடி, எள், சர்க்கரையும் மாற்றாகும். எருக்கின் இலை, கொள், இவைகளுக்கு முறிவு, கழுநீர், வெள்ளைச் சங்கம் பழம். கழுதைவண்டு கொட்டிய நஞ்சுக்கு சுண்ணாம்பு ஏற்படுத்திய புண்ணுக்கும், புளி, எண்ணெய் என்பனவாகும். எருக்கம்பால், அன்னக்கொடி இவைகளுக்கு தேற்றான் கொட்டை, இலாமிச்சை

.....................................................................................

9. கோட்டம் – வாசகைச் செடி மழை பெய்யப் பலனும் வசம், பூபன் கொண்ட மென்மொழியீர், என்றாதல் வேண்டும். வசம் – ஒழுங்குபடும், கீழ்ப்படியும்.

என்பன இவற்றை உண்ண, நஞ்சு முறியும் எல்லா வகையான தாவர நஞ்சுகளுக்கும் சிறு குறிஞ்சான் மாற்றாகும்.

11. திண் பேய்ப்பீர்க் குண்ணில் உறுதியில்லா
முற்றக்காசென்பன, உறுதியாம்
குன்றிக்கு ஆலம் வேர் - கொடும் பச்சை
நாபிக்கு வென்றி, வெங்காரம் - நிர
பொன்னும், சிவதைக்கு வெள்வேல்செழும்
பாடாணத்திற்கு அவனி
தனில் நிர்விடமேயாகும் பலவிடமும்
நீலிக்குப் பண்பாகத் தீரும்
பல மருந்துக்கெல்லாம் பகரில்
இலகு, மின், வெந்நீர், காடி இரண்டு
தனில் வேண்டுமுளவே, கொன்னீர் உகற்று.

உரை: பேய்ப்பீர்க்கங்காய் உண்டதற்கு மாற்று முத்தகாசு, குன்றிமணிக்கு ஆலம் வேர். (குடிநீர்) பச்சை நாபிக்கு வெங்காரம். சிவதைக்கு வெள்ளை வேர்ப்பட்டை (குடிநீர்) பாடாணங்களுக்கு, நிர்விடம், பலவகையான தாவர நஞ்சுகளுக்கு மாற்று அவுரி, என்பனவாகும். வெந்நீர் இளஞ்சூட்டில் உள்ளதாகவும், காடியிலும் அருந்த வேண்டும்.

12. தம்பனம் (ஆண்மை பெருக மருந்து)

பாதரசம் கழஞ்சுதனை, எழுத்தாணிப்பூடுதனில்
பச்சிலைச்சாறு தனிலரைத்துப்
பச்சோலைக்குள்ளே, வைத்துப் பச்சிலை
எடுத்தமைத்துப் பாதரசம் வைத்துப்

..............................................................

குறிப்பு: நீறு - சுண்ணாம்பு. ஆரல் - தீ.

10. மற்று என்பத மாற்ற என்றாதல் வேண்டும்.

11. முற்றக்காசு - முத்தக்காசு

பருஞ்சீலை மண் கொணர்ந்துப்

புடம்வைத்துச் சாதிலிங்கம்நல்ல

அரைப்பணவெடைப்பூ, மாற்றிலைச்

சாறுக்குள் சுரரவதை வேகவைத்துப்

பின்பு சாதிலிங்கமும் வெந்த

சாற்றிரு, கலசற வடிகட்டி

உறையாய் அபின் கழஞ்சாம், தவளப்பி

ரதப் பொடியும் பேதமற

ஆமணக்கு எண்ணெய் தனில்

அரைத்துப் பெருங்கடலைபோல் உருட்டி

உண்டை பிடி தவறாமல் உட்கொண்டு

போதனைக்கு கன்றிதனை, குறைந்தபங்கு

கொண்டு, பூவரை, யொட்டமொட்டிப் புணர்

வோர் ஒரு சாமம், புகைமுடன் பலம்

மிகுந்து, தம்பனமாய் நிற்கு புதுமை

இது கண்டோம், பொய்யில்லையாரே.

உரை: பாதரசம் – கழஞ்சு எடுத்துக் கொள்ளவும், இதை, எழுத்தாணிப் பூண்டு, திருநீற்றுப் பச்சிலையின் சாற்றில் அரைக்கவும். குறுத்தோலையில் சுற்றி சீலை மண்ணால் கவசம் செய்யவும். புடமிடவும். சாதிலிங்கம் – 1/2 பணஎடை ஊமத்தன் பூச்சாற்றில் வேகவைக்கவும். வேகவைத்த சாதிலிங்கத்தை, சாற்றிலிருந்து எடுக்கவும். கழஞ்சு அபின், வெள்ளை மிளகு, மா, இவற்றை விளக்கெண்ணையில் சேர்த்தரைக்கவும். பெரிய நிலக்கடலை அளவு உருண்டை செய்து உருட்டிக் கொள்ளவும். தவறாமல் உண்ண, ஒரு சாமம் விந்து வெளியாகாமல் இருக்கும் வலிமை கொண்டது. இது தம்பனம் என்ற மருந்து வகையில் – அட்ட கர்மங்களில் அடங்கும்.

13. **விடம் தீர்க்க மருந்து.**

இங்கு, வாகை, இள முருங்கை வேர்த்

தாண்டில் கூவிளை, நன்னாரி வேருடன்

யாங்க, சேருமா, வல்லமாதரே

..................................................

தீங்கு, பாம்பின் படத்தை அறுக்குமே.

அறிவில் தேர்ச்சியுள்ள பெண்களே.

உரை: பீத ரோகிணி, வாகை, நன்னாரி வேர் - வாகை மர வேர்த்தண்டு, வில்வம், நன்னாரி வேர்- சேர்த்துண்ண, பாம்பின் நஞ்சு இம்மருந்தால் தீரும்.

14. ஏலத்துடனே, பச்செள்ளு இரு
வேலியுடன் சந்தனமும் பாலில்
முலைப்பாலும், பசுவின் பாலும்
பரிசியுடன், கால், தாழைச் சாறுடனேப்
கடுகத்து, யார், கடி வாயில்
கொல் பாம்பின் பல்பட்டக்
கோபக் கனலும் குளிர்ந்திடுமே.

உரை: ஏலக்காய் எலரிசி, உலராத எள், இருவேலி சமஅளவு கடுகு, ரோகணி, சந்தனம் கால்படி அளவுக்கு தாழைச்சாறு, பசும்பால், தாய்ப்பால் விட்டுச் சேர்த்தரைக்கொள்ளவும். கொல்லும் தன்மையுள்ள, நஞ்சு இம்மருந்தை கடி வாயில் வைக்க விலகும் விரைவில்.

..................................................

12. சுவரம் - காய்ச்சல். சுவற-

புளகம் - கண்ணாடி, மயிர்சிலித்தல்.

பச்சோலை - குறுத்தோலை. காயாதஓலை. வெந்தை - பிட்டு:, ஆவியில் வேகவைத்தது. மற்றம் - மத்தன் என்பதன் வேறுபாடு. தவளம் - வெள்ளை மிளகு. இரதம் - மா.

13. படம் - பாம்பின் விரிந்த தலையிடம்; மா - அழகு; அறிவு.

குறிப்பு: கலம் - ஒருமுகத்தளவை அரைத்து - அடைத்து என வருதல் வேண்டும். கடி - சிறப்பு; இயல் - குணம் - கடு இயல் என்றாதல் வேண்டும்.

15. **சந்திக்குக் கலிக்கம் (மை)**

காயம், காரம், அரிதாரம்
கடிய, இரசம் இந்துப்பு
பேயின் பீரக்கஞ் சாறுடனே
பேணியரைத்து, உண்டைசெய்து
காயங்கலந்த தண்ணீரில்
கலத்திலரைத்துக் கண்ணிவிட
பேயும்போம், சந்திதீரும்
பிழையாதாரும், பிழைப்பாரே.

உரை: பெருங்காயம், (வெங்) காரம், தாளகம், இரசம், இந்துப்பு, இவைகளைப் பேய்ப் பீர்க்குச் சாற்றில் அரைத்துக் கொண்டு உண்டை செய்யவும்.பெருங்காயம் கலந்த நீரில், உருண்டையை உரசிக் கண்ணில் கலிக்கமாக இடுதல் வேண்டும். கொடிய சந்நி நோயால் உயிர் பிழைக்க மாட்டார்கள் என்ற மருத்துவர்களால் கைவிடப் பட்டவர்களும், உயிர் பெறுவார்கள்.

16. **நசியம்**

நொச்சிக் கொழுந்து, சிறுதும்பை
நுகரும் துளசி, புனல் துளசி
பச்சைக் கொழுந்;து, ஒகமேல்
படரும் பருத்தி, நறுங்கரந்தை
நிச்சயமாக வேறொன்று நறுக்கிச்

.......................................................................................

13. கடி- சிறப்பு; இயல் - குணம்; கடு இயல் என்றாதல் வேண்டும்.கடுகம் - கடுகுரோகணி ஏபாரிசி என்றாதல் வேண்டும். கோபக்கலை - உவமை. ஏபா - ஏலரிசி.

குறிப்பு: 21 கலம் - ஒருமுகத்தளவை் அரைத்து - அடைத்து என வருதல் வேண்டும். கடி - சிறப்பு; இயல் - குணம் - கடு இயல் என்றாதல் வேண்டும்.

குறிப்பு; ஒருசீர் குறைவாக உள்ளது. இங்கு பீதரோகிணி தாண்டில் என்பது தண்டில் என்றாதல் வேண்டும்; பச்சரிசி என்று வருதல் வேண்டும். கடு - பாம்பு. கடுகம் - கடுக்கம் - விரைவு; கனல் - தீ. கொல்பாம்பு. வினைத்தொகை.

சிறுநீருடன் கூட்டி

மெச்சும், காறு ஏழுவேகம் சென்றால்

மூக்கில் விட்டு எழுப்பே.

உரை: நொச்சியின் துளிர், சிறு தும்பை, நல்துளசி, முருங்கை, காட்டு துளசி, திரு நீற்றுப்பச்சை, மருக்கொழுந்து, மூங்கில் வேலியின் மேலே படரும் வேலிப்பருத்தி கரந்தை - ஒரொடையாக இவற்றின் வேர்களை நறுக்கி எடுக்கவும். இவற்றை சிறு நீருடன் சேர்த்து அரைத்துச் சாற்றை மூக்கில் நசியமாக துளித்துளியாக விடவேண்டும். நச்சரவு தீண்டி, ஏழு வேகம் சென்று, மயங்கியவர்களும், தெளிவுடன், எழுந்திருப்பார்கள். ஒகல் மேல்படரும் பருத்தி என்று வேலி பருத்தியை குறிப்பால் உணர்த்திய நயம் இன்புறத்தக்கது. மேலும் ஏழு வேகம் என்ற சொல்லால் பாம்புக்கடி மறைமுகமாகச் சுட்டப்படுகிறது. பாம்புக்கடியின் வேகங்கள் 1. வாயுவேகம் 2. வருணவேகம் 3. தேயுவேகம், இதில் வாயு வேகம் எட்டு; 7 ஆம் வேகத்தில் உடல் விரைக்கும். 8 ஆம் வேகத்தில் உயிர் நீங்கும். வெவ்வேறு பாம்புகளின் நஞ்சுகளுக்கு ஏற்ப, வேகங்களின் இயல்புகள் மாறும் நினைவிழந்த நிலையில் இம் மருந்தைப் பயன்படுத்தலாம்.

17.

**பூச்சு**

காட்டில் தவளை கடித்துடம்பு

கண்டித்தே, எங்கும் சொறி எழும்பில்

வீட்டில், பூக்கும் வேலிப் பருத்தி மிகப்பூசி

நாட்டிலகத்திச் சாறடனே

நறுநெய், மிளகுப் பொடியுடனே

கூட்டிநெய், மிளகுப்பொடியுடனே

கூட்டி அருந்த, குடிப்பீராய்

கொடிய விடமும் குலைந்திடுமே.

உரை: வயலில் பணிசெய்யும்போது, தவளைகள் அரியதாகக் கடிக்கும். அவ்விதமான நஞ்சு, உடலில் சொறியை ஏற்படுத்தும். இதற்கு, வேலிப்பருத்தியின் சாற்றை உடலில் பூசவும். அகத்தி, ஆவின் நெய் மிளகுப் பொடியைக் குழைத்துண்ண, நஞ்சு நீங்கும்.

18. **சிறுசொறி, சிரங்கு, தேமல், வங்குதீர.**

கருஞ்சீரகம், கறுப்பு எள், கடுகு, இவைகளைப்
புங்கம் பாலில் அரைத்துப்
பதங்கம் பூச, வங்குமாறும்.

19. அறுபலம் எருக்கு, மஞ்சள், புளியிலை, அவுரி, பீர்க்கு
அவுரி பீக்கு முருக, இலைக்கள்ளிச்
சாற்றால் குமரி உருக்கவே, வெந்த வெண்ணைச்
சிறு சிரங்குத் தேமல்தழு தனை தீருமென்று
குருமுனி அருளிச் செய்ய
குறுங்குடி தேரர் சொன்னார்.

உரை: 6 பலம் எருக்கு, மஞ்சள், புளிய இலை அவுரி, பீர்க்கு, முருங்கை, இலைக்கள்ளி, கற்றாழை இவற்றின் சாற்றை, வெண்ணையுடன் சேர்த்து உருக்கவும். இவ்வெண்ணெய் பயன்படுத்த சிறுசிரங்கு, தேமல், தழும்பு, நீங்கும் என்று திருக் குறுங்குடி தேரர் கூறினார். அகத்தியரின் மாணவர் தேரர். இந்நூலின் ஆசிரியர் என்பதை விளக்கும் வண்ணம், இப்பாடல் உள்ளது.

இவ்வாறு, பாடல்களின் கடைசியில் புலவர்கள் கூறுவது நாந்திக் கவி எனப்படும். நூலாசிரியர், திருக்குறுங்குடி - நெல்லை மாவட்டத்தில் வாழ்ந்தவர் என்று அறியமுடிகின்றது. தேரையர் என்ற பெயரில் பல சித்தர்கள்இருந்துள்ளார்கள். இதற்கு இப்பாடல் நல்ல சான்றாகும்.

..........................................................................................

ஓகல் - ஓங்கல் என்றாதல் வேண்டும். ஓங்கல் மூங்கில்.

காடு - வயற்காடு

18. இப்பகுதி உரைநடையில் உள்ளது. பதங்கம் - பதாங்கம் என்றாதல் வேண்டும். ப + தாங்கம் = பக்குவம்.

19. முருகு - முருங்கை, எலுமிச்சம் பழம், தேரர் - என்றாதல் வேண்டும்

19. கொன்றை இலை, கடுகம்பொடி
மஞ்சளோடு இந்துப்பு
என்ற வரைத்தின(ம்)
மோருடன் பூசக்
கன்றிய தேமல் சிரங்கு
தழுதனை என்றிவைபோம்
.......................................................
இளமாநிறமாமோ.

உரை: கொன்றை இலை, கடுகுப்பொடி, மஞ்சள் இந்துப்பு இவைகளை அரைத்துக் கொள்ளவும். நாள்தோறும் இப்பொடியை, மோரில் கலந்து மேல் பூசவும். கன்றிப்போன தோல், தேமல், சிரங்கு தழும்பூ என்பன நீங்கி, அழகுண்டாகும்.

20. சொறிபில் கெடுவீர், சிரங்கென்று
சொரிந்து மாஞ்சுத்திரியாதே
ஆம்பலக்கிழங்கு, வெம்பாடல்
அவுரிச் சாற்றிலரைத்துருட்டி
வெம்பன், தைல்ந்தனைக் கூட்டி
வெய்யலில் உடன் எடுத்துச்
சாம்பல் கூட்டி இருவீராய்
தழும்பு காணக் கிடையாதே.

உரை: கிரங்க உள்ள உடலை, அழகாகச் சொரிந்து, கேடுகளைப் பெறுவார்கள். இந்நோயை எண்ணிக் கவலையுடன் இருக்க வேண்டாம். ஆம்பல் கிழங்கு, பாதிரி, இவைகளை அவுரியின் சாற்றில் அரைத்து உருண்டை செய்யவும். உருண்டையுடன் ஆவாரைத் தைலம் சேர்க்கவும். பின்னர் சூரிய ஒளியில் வைத்து உடனே எடுக்கவும். மீண்டும் ஆவாரைத் தைலத்தில், சாம்பலைக் குழைத்து இட, தழும்புகள்

நீங்கும். உருண்டையைச் சாம்பலாக்கி, ஆவாரைத் தைலத்து சேர்த்துப் பூசுவதே, எளிய முறையாம். பாடலில், ஆவாரைத் தைலத் இருமுறை பயன்படுத்தக் கூறியுள்ளது காண்க.

21. பொரும்பு வேரிலும், பிச்சம்
பழச்சாறு வார்த்தரைத்
தரும்பு முலையாம் இவை
தப்பிடில் சிரங்கு, தேமல்
படர் தாமரை, தாமிவைக்
கரிந்துபோம் இது
கை கண்ட(து) ஏகவே.

.................................................................

பாடவேறுபாடு : பாடல் 20 (27)

*சோம்பிக் கெடுவீர் சிரங்கென்று*
*சொறிந்து மாய்ந்துத் திரியாதே*
*ஆம்பல் கிழங்கும் வெம்பாடல்*
*அதுவும் கூட்டி அரைத்துருட்டி*
*வேம்புத் தைலமதில் கழைத்து*
*வெய்யிலில் பருதியட ணெடுத்து*
*சாம்பல் கூட்டி இடுவீரால்*
*தழும்பு காணக் கிடையாதே.*
*பொரும்பிவேர் எலுமிச்சம் பழச்சாறு வார்த்தரைத்து*
*அரும்பு பூண்டு முலையா இவைஉடல் தப்பிடில்*
*சிரங்க தேமல் படரதாமரை தானிவை*
*கரிந்து போம் கைகண்ட யோகமே.*
(மேலிது - பக்கம் 205, பாடல் 575.)

(பாடவேறுபாடு - தேரையர் வாகடம் - பக்கம்.205 பாடல் 574)
இரா. தியாகராசன், பழனி தண்டாயுதபாணி திருக்கோயில் வெளியீடு-1975.
குறிப்பு : வரைத்து என்பது வகைத்து என்றாதல் வேண்டும்.
20. சொம்பு - அழகு, கெடு - கேடு. ஆதிநீண்டு, திரிந்து வந்துள்ளது. மாஞ்சு - மாய்தல் - அழிதல். பாடல் - பாதிரி. வெம்பன் - ஆவாரை. தைலத்திற்க ஆகி வந்தது.
21. ஆகுபெயர். பெரும்பி - சுழலாவரை ; வேர் - இலந்தை. கரித்தல் - வெறுக்கும்.

உரை: முன்பாடல் சாம்பலைச் சுழலாவரை, இலந்தை, எலுமிச்சம்பழச் சாற்றில் அரைத்துப் பூச, வெறுக்கும் சிரங்கு, தேமல், படர்தாமரை என்பன நீங்கும். இது பயனளிக்கும் மருந்தாகும்.

22. நெல்லிக்கடு தான்றி
நீலியடித்தகரை
சொல்லிய நெய்க்குளவிந்தம்
சேராமல் மெல்லிய வாய்
காலை பகல் மாலைக்
கலந்துண்ண வல்லீராய்
நீலநிறமாம் அனுதாரம்.

உரை: நெல்லிக்காய், கடுக்காய், தான்றிக்காய் என்ற திரிபலா, அவுரி, சிறுசெருப்படி, தகரை, இவைகளை, மஞ்சள் பொடி தேனில் மூன்றுவேளையும் உண்ண, முடிந்தால், உடல் நீல வண்ணமாகும். இலஒழுக்கத்தில் பெண்களுடன் சேருதல் கூடாது என்ற விதி கூறப்படுகிறது. மருந்துண்ணும் போது கலவி விலக்கப்படுதல், பொது விதியாகும்.

23. கொன்றைத்துளிர், புளியந்துளிர்
குளவிந்தமோ இந்துப்பு
ஒன்றைக் கொளக் கடுக்காய்
ஓர்பிடி, ஆம்பல், செங்கொள்
நன்றத்தனை, நிலவாகையும்
நானா இலை, நீரால்
நன்றத்தனை, தடவ
உறுதுணைய் அதளுதனை.

........................................................................

22. அனுதாரம் - இல்லொழுக்கம். நானா - பலவிதமான. அதள் - தோல் உதனை - உ(ள்)ளிதனை என்று கொள்ளலாம். 23. குளவிந்தம் - மஞ்சள். இப்பாடல் சரிவர அமையவில்லை.

உரை: கொன்றை, புளிய மரத்தின் கொழுந்து, மஞ்சள், இந்துப்பு - இவற்றில் ஒன்றுடன் ஒரு பிடியளவு கடுக்காய் எடுக்கவும். ஆம்பல், சிவப்புகொள், நிலவாகை இவற்றை பலவித இலைகளில் சாற்றால் அரைத்து மேல் தடவவும். இது தோலு;க்கு நல்ல துணையாகும்.

24. **நாசி அடைப்புக்க மருந்து.**

நாசியடைக்கில், நற்சீரகம், திப்பிலி
கொத்தான், கொழுஞ்சி மிளகுடனிந்துப்பு
மிக்க உள்ளிச் சாற்றில் கரைத் தூற்ற இப்படி
வெந்த வெண்ணெய்விட்ட வுடன்
நக்குக, வேற்று நடந்தனரே.

உரை: மூக்கடைப்பு நோய்க்குள்ள மருந்து. தூய சீரகம், திப்பிலி, கடுகு, முடகொத்தான், கொழுஞ்சி, மிளகு, இந்துப்பு : இவைகளை அதிகமான பூண்டுச் சாற்றில் கரைக்கவும். பின்னர் ஊற்றி. அடுப்பிலேற்றி சூடாக்கவும். வெண்ணெய் கலந்து, நக்கவும்.

25. **கழலை நோய் தீர எண்ணெய்.**

கழலையாறத்த கனம்
கெட வேண்டுவீர்
இழலை யான, வெந்நீர்
தோளள்ணெய்
அழவ அங்கையில் தேய்த்து
உடன் அப்பிடவே
ழுலுமில்லை
எழுந்தது மில்லைரே.

........................................................................

24. குறிப்பு : ஒரு சீர் குறைவாக உள்ளது.

25. கனம் - பெருக்கம், பளுவான, பாரமான் ஆற(வே) அத்த - வழி; இள- இளமை. அழுவம் -- என்றாதல் வேண்டும். அழுவம் - ஆழம். எழலுமில்லை - என்றாதல் வேண்டும். எழல் - புறப்பாடு.

உரை: பளுவானக் கழலை நோயை ஆற்றும் வழி இது நீங்க, வெந்நீரில், எள்ளெண்ணெயைத் தோய்த்து, ஆழமாக உள்ளங்கையால் அப்பித் தேய்க்கவும். கழலை உடலில் புறப்படுவதும் இல்லை, தோன்றுவது இல்லையாம்.

26. **பாத பிளப்புக்கு மருந்து**

**ஆலம்பாலாகும், மஞ்சள்**
**அலைகடல முதமெலம்**
**பாலில் தன்று, நூறுமெழுகு**
**நெய், புறாவின் எச்சம்**
**காலம், பார்திருக்கவேண்டாம்**
**கழுவிக்கால் பூசுமாகில்**
**பாலங் காலத்துள்**
**எண்ண பாத மாமே.**

உரை: வருத்தம் தரும் பாதவெடிப்புத் தீர மருந்து. ஆலம்பால், மஞ்சள், அல்லிக்கொடி, மூக்கரட்டை, இஞ்சி, திரிகடுகு (சுக்கு, மிளகு, திப்பிலி) இவற்றை மிகுதியாக எடுத்துப் பொடி செய்யவும். மெழுகு, நெய், புறாவின் மலம்; இவற்றைப் பாலில் கலந்து காலில் பூசவும். பூசும் முன், காலைக் கழுவவேண்டும். இம்மருந்தைச் செய்ய நல் நேரம் பார்த்தல் வேண்டாம். ஊழி காலம் பூமியில் வருமளவுக்கு, பாதத்தில் பிளவு வராது.

........................................................................................................

26. கழுக்கால் என்பதை கழுவிய பொழுது என்றும், காலில்கழுவி என்றும் பொருள் கொள்ளலாம். எலம் - இஞ்சி; கடலி கடலியமுதம் என்றாதல் வேண்டும். அலைகடல் - வினைத்தொகை, முக்காலம் காட்டும். அல்லை - அல்லிக்கொடி. அலை வருந்துகை. கடலி - மூக்கரட்டை. அமுதம் - திரிகடுகம். அதன்ம நூறு என்றாதல் வேண்டும். அதன்மம் - மிகுதி. நூற - பொடி, நீறு. பாலம் - பூமி; காலம் - யுகம். சமயம், முகூர்த்தம்.

27. **சோறுகெடாமல் இருக்கவழி**

ஆக்கிய, சோறெல்லாம்
அழுகியே, போகுமானால்
தேக்கிய, புனலினுள்ளே
செறிந்திடு, மாம்பல, தண்டைஏற்கவே
பொடி செய்து, இளகிய
சோற்றிலப் பொடமாக
கொடி மட நல்லாளே
வடிந்திடும், சொற்றாமே.

உரை: உணவு செய்தது, கெடாமல் இருக்க கழுநீரைத்தடுத்து, அதனுள்ளே இறுக்கவும். மாமரத்தின் பூவின் தாளைப் பொடி செய்யவும். இளகிய சோற்றில் அழுத்த சாறு, தானே வடியும். இதில் கெட்டுப் போகாமல் சோற்றை, நன்றாகச் செய்யும் முறைகூறப்பட்டுள்ளது. வேறு எந்தவொரு சித்தரகளின் நூல்களிலும், இது போன்ற முறை இல்லை.

28. **மண்டை வியாதிக்கு எண்ணெய்.**

சுக்கு, மிளகு, மரமஞ்சள் துய்ய
மஞ்சள் வெங்காரம்
மிக்க, திப்பிலி, கடல்நுரை, வீறா
இலுப்பைய் பருப்பெட்டும்
ஒக்க, கொண்டு நல்லெண்ணையில்
உடன், வெந்து, கட்ட தோற்

...............................................................................

27. சோற - உணவு. ஆக்கல் - படைத்தல், செய்தல்; அகழுகல் - தூய்மையற்ற. தேக்கம் - தேங்குதல். நீரோட்டத்தடை செறிதல் - கலத்தல், இறக்குதல், மா - மாவு, மாமரம். தண்டு - தாள்; பாடம் அழுத்தம். சோற்றில் என்றதால் வேண்டும். சொல் - பாடமாக சாறதாமே எனவருதல் வேண்டும்.

28. துய்த்தல் - நுகர்தல். உடலில் பூசிக் குளிப்பதால் கத்தூரி மஞ்களைக் குறிப்பால், ஏனை மஞ்சள் வகைகளிடமிருந்து வேறு படுத்தினார். வீறு - சிறப்பான, எட்டு - விசமுட்டி

கும் மண்டைவியாதியெல்லாம் தொ
குத்தே ஒடுங்கும், கண்டாயே.

உரை: சுக்கு, மிளகு, மரமஞ்சள், கத்தூரி மஞ்சள், வெங்காரம், திப்பிலி, கடல்நுரை, இலுப்பை பெரிய விசமுட்டி இவைகளை சமஎடை பொடி செய்து, நல்லெண்ணெயில் வேகவைக்கவும். வெந்தவுடன், வடிகட்டிப் பயன்படுத்த மண்டையில் ஏற்படும் நோய்கள் அனைத்தும் நீங்கும்.

29. **மூலத்தின் குணம்**

கடுத்திடு(ம்) மெருப்புத் தோன்றும்
கனக்கவே, தினவி முண்டாய்
திடுக்கிட, உதிரம் பாயும்
தின்னிய மாங்கிசமாம்
அடுத்திடும், அபானவாயுவும்
மேவி, நீர்ப் பாயுமாகில்
தடுத்திடும், மொழியினளே,
தக்கதோர், மூலந்தானே.

உரை: மலப்புழையில் கடுப்பு, எரிச்சல், பருமை, அரிப்பு உண்டாகும். குருதி வரும். உறுதியான மாமிசத் துண்டுகள் வரும். அபான வாயு சிறுநீர் வெளிவந்தால் பொருந்தித் தடைசெய்யும். இக்குறி குணங்களை மூலம் என்றுக் கூறலாம்.

30. உண்ட சோறதவும், நின்ற
ஓங்கிய, பிணித்தே மட்டு
மண்டியே, தண்ணீர், தாகம்
வகுத்தினில், பொருமல் கொள்ளும்
கொண்டுடுகிரே, (ஏப்)பந்தானும்
குளிர்ந்திடும், வேர்வை காட்டும்
பண்டையில், மலமும் போகா,
பந்திய மூலந்தானே.

உரை: உண்ட உணவு செரியாமல், புளிப்பான ஏப்பம் அதிகமாகத் துன்புறுத்தும். நீர்வேட்கை அதிகமாகும். வயிற்றில், பொருமல் உ;ணடாகும். உட்கொண்ட உணவு, பசித்தீ குளிர்ச்சியால் ஏப்பத்தை உண்டாக்கும். வியர்வையைத் தோற்று விக்கும். மலக்கட்டு ஏற்படும். இக்குறிகளால் மூலம் என்று கவனிக்கலாம்.

31. ஆழிவாய், இரு விரல்
அங்கல மேல்தாய் உளது, வாயு
அலை(யு)ம் உ முகத்து நீளவந்து
நிமிர்ந்தது, உகுத்துமாய்
..........................................................
கோலொடு, குதமென்று கூறலாமே.

உரை: வட்டமாக, இரண்டு அங்குலம் மேலே உள்ளது. காற்றும் உலாவும். விரும்பி, நீண்டுவந்து, உயர்ந்து. அளவுகோலாக, மலப்புழை என்று சொல்ல இயலும்.

32. **கோடாசூழி மாத்திரை**

கொடா, துளி, பருதை, நாவியோடுருவி
கந்தகம், அரிதாரமும்
கொடா, துளி புர(ம்)தை நாவியோடிருவி
கந்தகம், காரமும், அரிதாரமும், காந்தமும் சுக்

..........................................................................

ஆழி - வட்டம். உகம் - விரும்பி. மகிழ்ந்து. நீளம் - நெடுமை.

30.குறிப்பு: பிட்டு - ஆவி. மண்டுதல் - அதிகமாதல்.

பிட்டு - ஆவி. பிணி - துன்பம், கட்டுதல்; வகுத்தினில் - வயிற்றில் கொண்ட அடுக்கிர் ஏப்பந்தானும் என்றாதல் வேண்டும். அடுகுதல் - பாகம் செய்தல். பத்தியம் - கவனம்.

இப்பாடல் அகத்தியர் 2000இல் பக்.324இல் உள்ளது. பாடவேறுபாடு புளித்தே வகுத்தினில். 3. கொண்டிடு மழற்றிக் கண்கள் குறுகியே தூங்கல், சொருகல்; பண்டியில் பண்டை - பழமை.

31. இப்பாடல் சரிவர அமையவில்லை.

ஆழி - வட்டம். உகம் - விரும்பி, மகிழ்ந்து. நீளம் - நெடுமை.

குடம், காணவே நேர்வாளம்பாதிகொள் அரியக்
கையாந்தகரைச் சாற்றில்
அரைத்திடு, குரு(வும்) வாசகம் தப்பாமல்
உண்டை செய்கோடா சூழி குணத்தின்
கொண்டாட்டமே.

உரை: அத்தி, தைவேளை, நாவி, இருவி, கந்தகமே, வெங்காரம், தாளம், சுக்கு, பலா, சமஎடை இதில் பாதியளவு நேர்வாளம், பெறுவதற்கு இயலாத கரிசாலை இவற்றை எல்லாம் அரைத்து, உருண்டையாக செய்து கொள்ளவும். ஆசிரியரின் ஆணையை தவறாமல் ஒழுக மகிழ்ச்சியை இயல்பாய் அடையலாம். குரு என்பது குரு மருந்து போட்டு அரைத்து எனவும், ஆசிரியர் எனவும் இரு பொருள் தரும்.

33. **சூலை, குன்மம் தீரக் குளிகை.**

நேர்வாளம் எண்கழஞ்சு
நெரிந்த வெங்காரம் நாற் கழஞ்சு
மொருவால் கடுத்தி தைப்பூ
புங்கங்காயும் அரையும்
மருவார் குமரிதனிலரைத்துக் குளிகை
மாரிசம் போல் நுகரில்
சொருக வலித்துத்த சூலை
தோன்றும் குன்மம் போய்விடுமே.

.............................................................................................

32. கொண்டாட்டம் - மகிழ்ச்சி, சீராட்டுதல். கோடா சூழி என்றாதல் வேண்டும். பரம் - அத்தி; தை - தைவேளை் குடம் - சதுரக்கள்ளி, பலாங குரு - துருசு, ஆசிரியர். இங்கு, ஆசிரியரைக் குறித்தது.

குறிப்பு : உரு - எலுமிச்சை. சொன்னல் - சோளம். அம்நாறுதல் - மணத்தல். துர(ம்) - செலுத்து; தனி கலப்பில்லாத

33. நெரி - நொறுங்க. திரை (யல்) - வெற்றிலை, பூ-அலரி. அரைக்கால் (1/8) முப்பு, மருவார், குமரி தனில் என்ற சொல்லாட்சி இருவிதமான பொருள் கொண்டது. பெண்ணைச் சேருவது என்றும், கற்றாழையின் சாற்றைக் கலந்து கொண்டும் என்றும் பொருள் தரும்.

உரை: எட்டு கழஞ்சு நேர் வாளம், வெங்காரம் 4 கழஞ்சு (நொறுக்கியது), கடுக்காய், அத்தி என்பன 1/8 பங்கு. புங்கங்காய் 1/2 பங்கு. கற்றாழைச் சாற்றில் கலந்து அரைக்கவும். பின் உருட்டிக் கொள்வும். சொருக வலி சூலை, கன்மம் என்பன தீரும்.

34. **குளிர்சுரம் தீர உருண்டை.**

நலந்தரு கவுரி நாலு
நாறும் சீரகமும் ஒன்று,
துரத்தனித் துரு(சு) சொன்று
துத்தமே இரண்டு, நின் பால்
பலந்தனிலரைத்து தங்குண்டை
பயறுபோல் பண்ணிக் கொண்டு
அலந்த வெந்நீரிலிட்டால்
அருங்குளிர், சுரங்கள் போமே.

உரை: கௌரி பாடாணம், 4 பங்கு, மணமுள்ள நறுமண சீரகம், 10 பங்கு, துருசு - 1 பங்கு. கலப்பில்லாத, தூய்மையானத் துத்தம். இரண்டு பங்கு.

வேம்பு, ஆல் இவை 1 பலம். எடுத்துக்கொள்ளவும். பொடி செய்து, பயறு அளவுக்கு உருண்டை, கொம்பு உள்ள பால், பழச்சாற்றில் அரைத்துச் செய்யவும். துன்பம் தரும், சிறுமையுள்ள குளிர் சுரம், சுரங்கள் நீங்கும்.

35. **நாலு நாள் மாற்றுக்கு உருண்டை**

எலிப்பகை யதனை, அங்கே
எருக்கம் பாலதனை விட்டுச்
சலிக்கவே, நாலு நாளும்
சார்ந்தபின் எடுத்துப் பாலில்
பலிப்புற,அரைத்தங்கு உண்டை
பயிறு, போல் பண்ணிக் கொண்டு

நலிப்புற, மோரிலிட்டால்

நாலு நாள் மாறல் போமே.

உரை: குப்பை மேனியை, எருக்கம் பாலில் விடவும். 4 நாட்கள், குப்பைமேனியில் ஊறிய பின்னர் உலர்த்திப் பொடி செய்து சலிக்கவும். பின்னர் பசும் பாலில் உண்ணும்படி அரைத்து, உண்டையாகப் பயறளவுக்குச் செய்யவும். உடலை அழியச் செய்யும் 4 நாள் மாறல் சுரம் மோரிலிட்டுக் குடிக்கத் தீரும்.

36. வாத நோய் தீரக் குளிகை

அரிதார, சூதவிடம்

அரியக் கொடுத்த, திரிபலையும்

மருவார் கந்தம், மனோசிலையும்

மணி, வெங்காரப்பாளமுடன்

கரியநொச்சி, நீரிலரைத்துக்

குளிகை மரிசாலதானங்கரில்

பெறுவார், வாத ஆதீனம்

பேசாதோடும் கண்டார்.

உரை: அரிதாரம், இரசம், நிர்விடம், திரிபலையான கடுக்காய், நெல்லிக்காய் தான்றிக்காய், கந்தகம், மனோசிலை, ஒசையை உடைய வெங்காரம் தான்றி கரிய வண்ண நொச்சி, இவைகளை நீரில் அரைத்து, குளிகை செய்யவும் அக்கால இடத்து மிளகு, ஆச்சாரமரத்தின் பொடி, சமூலம் மூலம் பெறுவார்களுக்கு வாதத்தின் ஆளுமை விலகும், இதைப்பார்க்கலாம்.

..........................................................................

35. எலிப்பகை - பூனை ; பூனை வணங்கி - குப்பைமேனி ; பலி = சாம்பல் ; உணவு ; நலிவு - அழிவு, வருத்தம்; அரும் - அருமை - சிறுமை.

நின் - தின்பம் - வேம்பு. நின்பால் என்பது நிணப்பால் என்றாதல் வேண்டும். நிணம் கொழுப்பு) பலம் - பழம். (எலுமிச்சம் பழம்).

34. அலந்தம் - மெய்யீறு. அரும் - அருமை. அலுந்தலை - துன்பம்.

36. ஆதீனம் - ஆளுகை.

37. **பல்நோய்த்தீர**

நீரைவாரி, நிரம்ப வாகை, இக்கொடுவாரி
வாரி, வழுமத் தேய்த்திடில்
வேரோடன் நாவி, விழுகின்ற பல்லெல்லாம்
நீரால் அளாவி நிலைகொண்டு நிற்குமே.

உரை: சாறு நீர் அதிகமான வாகை மரம், வாலுளுவை என்பனவற்றை கேடு இல்லாதபடி அழுத்தி நீருடன் கலந்துகொப்பளிக்கவும். நீருடன் சேர்த்துக் கலந்து பூசவும். பல்வலி அடியுடன் விழும் பற்கள் ஆடாமல், நிற்கும்.

38. **கொப்பளிக் குழநீர்**

மருக்காரை, வெள்வேல்
மருதத்தோல், சுக்கு
எருக்கு, ஆல், பிரம்பம் வேர்
இவை எல்லாம்
நறுக்கியே, நானாழி நீரை
நாலொன்றாய் கொப்பளிக்க
அப்பால் தன்.......................
பல்லெல்லாம்

........................................................................................

தானம் – இடம்; ஆங்க – அவ்விடம், அக்காலம் மரிசை – மிளகு; மரி என்பது மரிசி என்றாதல் வேண்டும். ஆள்(ம்) – தான்றி; சாலம் – ஆச்சா மரம். கொடுத்த – கொழுத்த என்றாதல் வேண்டும். கந்தம் – சந்தனம் : கந்தகம் – மணி, ஓசை. குறிப்பு: வெங்காரத்தைப் பொரிக்கும் போது ஒசை உண்டாக்கம் காரணம் பற்றியே மணி வெங்காரம் எனப்பட்டது.

37. இப்பாடல் சரிவர அமையவில்லை. அளாவல் – கலத்தல்.

நீர் –ஒளி, முறை, குணம், சாறு வாரி – மிகுதி, நீர்நிரம்பல் – – மிகதியான, அதிகமான. கொடு – கொட்டு எனபதாகலாம். கொட்டு O வாலுளவை ; வாரி – கட்டுதல் ; வபவம் -- வழு – கேடு, தப்பு ; தேய்த்தல் அழுத்தப் பூசுவதல் ; ஆவி – வலி. வழுமம் – வழு.

உரை: மருக்காரை, வெள்ளை வேலம்பட்டை மருதமரப்பட்டை, சுக்கு, எருக்கு, ஆலமரவேர், பிரப்பன்வேர்இவைகளை நறுக்கவும். 4 நாழி தண்ணீர் ஊற்றிக் காய்ச்சவும். ஆறியவுடன் எடுத்து, வாய்கொப்பளிக்கவும்.

39. **எலி மருந்தரைக்கும் போது.**

**இஞ்சியை நறுக்கிச் சாற்றால் தெளிய வை**
**சாற்றால் தெளிவைத்**
**திரு(ந்)துப் போட்டுத் திரண்டது**
**கூடரைத்துக் குளிகையும்**
**குன்றிபோலக்கொண்டிடு**
**அஞ்சவேண்டாம்**
**இடுவது பாலில்தானே**
**மீண்டு மப்பாலில் தானே.**

உரை: இஞ்சியை நறுக்கி, இடித்துச் சாறுபிழியவும், இச்சாற்றைத் தெளிய வைக்கவும். இத்துடன் நெய்விட்டுத் தொட்டால் சிணுங்கியைக் கூடச்சேர்த்துச் சாற்றில் கல்கமாக அரைக்கவும். குன்ற மணியளவு, மாத்திரைகளாகச் செய்யவும். குளிகையை பசும்பாலில் அருந்தவும்.

40. **ஆயிவெண்ணெய்**

**ஆயிவெண்ணெய், மா, விரு**
**ஞால(ம்) மதிக்கக் கூறுவன்**
**ஆயி, வெண்ணெய், அடைவது, கேளீர்**
**ஆயில் பட்டையது நூற்றுப்பலம்**
**தேயுற்ற, சிற்றாமுட்டி வேர்**
**நூற்றுப் பலம் வெட்டித்தரித்து**

........................................................................................

39. பால் - சாறு. இருது - இலந்தை் இருந்து - நெய்.
40. ஆயி - தாய்; வீறு - சிறப்பு

நீர், கலந்தத் தண்ணீர் நிரப்பக்
காய்ச்சி நாலொன்றாக்கி
நலபிற வடித்துப் பின்
நல்லெண்ணெய் விடு மதில்
பதுக்குப் பாலும் பதக்குப் பரிவுடன் சேர்த்த
பின்ரைத்துக் கரைத்தபின்
ஆகு மருந்துகள், அரத்தைச் சாள
அகில் மரமஞ்சள் பெருத்தநறும்பிசின்
பெரிய குரும்பை, தேவதார, மதிகள்
மேவுதாக, விழலரிசி, மஞ்சட்டி, வசம்பு
மருவும், கோட்ட மாஞ்சிகைச் சொல
மடவிக்கச் சொல் மிகுந்திருக்க
இவை கூறிய செவ்வியமைந்து பலம்
இலவங்கத்தோல் தந்ததாக
சன்ன சாதிக்காயும் சீரகம்
இரண்டு நதிகள் நாகப்பூ நாய்கடுகு
ரோகணி இலாமி நிழலாச்சம் புனுகு
சட்டம் அழுகு, கை நீறு அழகிய மருள்
கிழங்கு, அமுக்கராவேரும், சாரடைவேரும்
தன்னில் ஒக்கக் கூறிய மருதம்
தோல்ஒன்று, நாற்கழஞ்சு வீறுடன் கசாயம்
மேலிட்டரைத்துப் பதத்தில் பண்ணிய வெண்ணெய்
நக்கவும், பூசவும், நசியம் பண்ணவும், தரைவிட
வும், தலையில் கட்டவும்.

உரை: தாய் போன்று உடலை ஓம்பும் சிறப்புள்ள வெண்ணெய் பற்றி உயர்ந்தோர் மதிக்க இதைச்முறையைக் கூறுகின்றேன். ஆயில் பட்டை பலம், சிற்றாமுட்டிவேர் பலம், இவைகளை இடித்து, வெட்டிக்கொள்ளவும். வெட்டிவேர்த் தண்ணீரை கலந்து பாத்திரத்தில் இருக்கும்படி வைக்கவும். பயனளிக்கும்படி, 1/4 பங்காக வரும்படிக் காய்ச்சவும். பின்னர் நல்லெண்ணெய், பால் பதக்களவை,

அன்பாகச் சேர்க்கவும். முன் சொன்ன கடைச் சரக்குகளை அரைத்துக் கொள்ளவும். பொடியைப் பால், நல்லெண்ணையில் கரைத்துக் கொள்ளவும். அரத்தை குங்கிலியம், அகில், மரமஞ்சள், பருமனான ஏலம், பெரிய தென்னங் குரும்பை, தேவதாரம். அதிமதுரம், மஞ்சட்டி, இலுப்பை, விழிலரிசி, சடா மஞ்சில், வசம்பு, கோட்டம், இந்துப்பு, இலவங்கத் தோல், சிறிய சாதிக்காய், சீரகங்களான நற்சீரகம், கருஞ்சீரகம், சிறுநாகப்பூ, நாய்க்கடுகு, கடுகு ரோகணி, விலாமிச்சம், புனுகு, அழகுள்ள கூகைநீறு, மருள் கிழங்கு, அமுக்ராவேர், சாரணைவேர்; வகைக்க 1 பங்கு. மருதமரப்பட்டை - 4 பங்கு. இவற்றை மேற்சொன்ன கசாயத்தில் அரைத்துக் கலந்து கொள்ளவும்; காய்ச்சிப் பதத்தில் வடிகட்டவும். இவ்வெண்ணெயை, உண்ணவும். மேலும் இதை நசியம், தடவுதல் தலையில் கட்டுதல் என்ற 32 வகை புற மருத்துவமுறைகளுக்கும் பயன்படும்.

41. வாரார்முலையாய், வாத தாங்கன்ன
வாதங்கால், வாதத்துடன்
மன்னிய அற்புத வாதத்துடனே
மூக்கு நீர்ப்பாய்ச்சலு
முயன்பல வாதமும் போக்கிடு(ம்)

.......................................................................

பாடவேறுபாடு:

*ஆவிரண்டு பூவிரண்டு முப்பழங்கள் பலாமரத்தின்*
*நாலிரண்டு மஞ்சள் இஞ்சி அத்தி நாவலாரை*
*சேலிரண்டு கண்ணாள் செலத்தவே திரைகடலில்*
*நாலொன்று மிரண்டும் வற்றி மற்ற நீரும் வற்றிடுமே.*

தேரையர் வாகடம் - இரா. தியாராசன், பக். 239, பாடல், 655.

மேன்கப்புகழ்றை நிரையே.

உரை: கச்சையை அணிந்துள்ள பெண்களே வாதநோய் அக்காலத்து பாதங்களில் பொருந்தும். மேலும் ஒன்றான அற்புத வாதத்தில் மூக்கில் நீர் வடிதல் இருக்கும். 80 வகையான வாதநோய்கள் என்பன அழகுடன் வரிசையாக நீக்கும்.

46. இண்டு - தாமரை, தொட்டால் சிணுங்கி, பால் - சாற. இருது - இலந்தை; இருந்து - நெய்
40. ஆயி - தாய்; வீறு - சிறப்பு; ஞாலம் - பூமி, உயர்ந்தோர்; நூற்று - நசுக்குதல், இடித்தல் தரித்தல் - இருத்தல். கலம் - என்பது எண்ணளவை யாகவும், பாத்திரம் என்பதாகவும் பொருள் கொள்ளலாம். வெட்டி என்பது, வெட்டு தலையும், வெட்டிவேரையும் குறிக்கும். நிறப்புதல் - பயனளிக்கும்படி.

42. ஆலிரண்டு, பூவிரண்டு, முப்பளங்கள் பார்
ஆலமரத்தின், நாலிரண்டும், மஞ்சளிஞ்சி, ஆத்தி
நாவலாவாரை செவியிரண்டு, கன்னிளாள்
செலுத்தவே, திரைக்கடல் நாலிரண்டு ஒன்று
வற்றி, மற்ற நீரும் வற்றுமே.

உரை: ஆலமரக் குச்சி இரண்டு பங்கு, சிறநாக்பூ இரண்டு, கடுக்காய், நெல்லிக்காய், தான்றிக்காய், கடுக்காய், நெல்லிக்காய் தான்றிக்காய், பருத்த ஆலம் பட்டை 8 பங்கு, மஞ்சள், இஞ்சி, அத்தி, நாவல், ஆவாரை விலாமிச்சவேர் இரண்டு பங்கு, வெற்றிலை - 4 பங்கு, பால் - 3 பங்கு. உண்ண நீரிழிவு நோய் நீங்கும். இலக்கிய நயத்துடன் திரைகடல் செலுத்த என்ற தொடர் அமைந்துள்ளது. இதுபோல, இரண்டு என்ற சொல்லும் பல முறை வந்துள்ளது, இன்புறத் தக்கது.

43. **வசியம் செய்ய**

கோரோசனமும் , குங்குமமும்
குருந்து வீசும் கற்பூரம்
சீராவின், நெய்தன்னோடே
தேனில், குழைத்துத் திலகமிட
வாராய், கொங்கைமட நல்லாய்
மண்ணில், மாதர் உள்ளூரும்
சேர், பாதம் பணிந்திடுவார்
செய்யோன் ஆணை, திண்ணமிதே.

.................................................................................................

42. பார் - பருமை ; ஆல் - ஆலமரம். நிரை - வரிசை.
வார் - கச்சு; ஆங்கு - அக்காலத்து ; மன்னுதல் - பொருத்துதல். வாத நோய் வகைகள் 80 என்று யூகி - வைத்திய சிந்தாமணியில் கூறுகின்றனார். அற்புத வளிநோய் பற்றி இங்கு குறிப்பிடப் பட்டுள்ளது. செவி - விலாமிச்சவேர், திரை - வெற்றிலை. கடல் - தேன், பால், தயிர், நெய், கருப்பஞ்சாறு, உப்பு திரைகடல் வற்றி, மற்ற நீரும் வற்றுமே எனக் கொள்ளுதல் வேண்டும்.
43. குருந்து - காட்டு எலுமிச்சை, காட்டு நாரத்தை மாதர் உள்ளூர் - வழக்கமான ஊர். பிறந்த ஊர் எனலாம்.
செலுத்தல் - தூண்டுதல்;

உரை: கோரோசனை, குங்கமப்பூ, காட்டு எலுமிச்சை பச்சைக் கற்பூரம், பசுநெய், தேன், இவற்றைக் கலந்து நெற்றியில் பொட்டு வைக்கவும். கச்சையை அணிந்த நற்குடிப் பெண்ணே, உலகில் பெண்கள், ஊரில் வாழும் மக்களின் காலில் விழுந்து, பணிவார்கள் இது முருகன் மேல் உறுதியாதகப் பிரமாணம்.

44. நீலஞ் சோதி இரண்டிடைக் கந்தகம்
ஏலங்காலி ரதமும், அவ்விடைக்கோல
நீலச்சாற்றில் அரைத்துண்ணக்
காலன் வார்த்தை கனவிலுமில்லையே.

உரை: துருசு, கற்பூரம், கந்தகம், ஏலம், அதிவிடையம், 1/4 பங்கு இரசம், தக்கோலம்; இவைகளை அவுரிச்சாற்றில் அரைத்துக் கொள்ளவும். இதை உண்ண கூற்றுவன் பற்றிய சொல், கனவில் கூட வராது.

45. **கண்காசம் தீர, இளநீர்க் குழம்பு**

பொன்னாங்காணி, சிறுகீரைப்புதுவோ்
சந்தன விலாமிச்சு, கன்னா நெல்லிக்கடு
தான்றிதாவு இலுப்பைப்பூவோ அதிமதுரம்
மன்னார், சின்னாள், மரமஞ்சள் மசியக்
கொண்டுதகத்திட்டு, எண்ணார் நீர்
எண் நாழி இதனோடு இங்கிதமாக
முன்னாள் மூன்று, நாளுநாறி முதிரக் காய்ச்சி
காய்ச்சி நாலொன்றாய்
பன்னாள் வடித்தகசாயத்தில் பாதியாக

..............................................................................................

சாளம் - பெருங்காயம், குங்கலியம். நறுபிசின் - ஏலக்காய்; அதிகம் - குருக்கத்தி (மாதவி) மதிகம் - அதிமதுரம். தாகம் - இலுப்பை. மேவுதல் - பொருந்தல். நிதி - கௌரிபாடாணம். கூறு - பங்கு.

44. நீலம் - துருசு; சோதி - கற்பூரம். காலி - பூனைக்காலி. விடை - அதிவிடையம்; கோலம் - தக்கோலம்.

வைத்துவைத்துத்
தன்னா, துத்தாஇந்துப்புத் துருசு
வெள்ளிலோத்திரம், பீத ரோகிணியும்
தென்னா, தேற்றாங் கொட்டை இவை
சேர், ஓர் ஒன்றிரு கழஞ்சு
நன்னா, பச்சை கற்பூரம், நன்றே கால்
இவை ஒக்கக் கொண்டிவை
துன்னா, தட்டிப்பொடி செய்து
தூவிக்காய்ச்சிக் குழம்பானால்
சொன்னார், சொன்னார் கண்ணிலிட
என்று இளநீர்க் குழம்பிதுவே.

உரை: பொன்னாங்காணி, சிறுகீரை, புதிய இலந்தை வேர், சந்தனம், விலாமிச்ச சேர், கரிசாலை, திரிபலை, பாக்கு, இலுப்பைப்பூ, அதிமதுரம், மரமஞ்சள், அன்றலர்ந்த பங்கம் பாளையின் பூ; இவைகளை நன்கு குழையும்படி செய்து, தகட்டில் வைக்கவும். எட்டு நாழி நீரைக் கணக்காக எடுத்து, கற்கத்தை மூன்று நாள் ஊறும் விதம் பக்குவமாக்கவும். ஊறிய நீரை 1/4 பங்கு வரும் வரை நன்குக் காய்ச்சவும். பல நாள் செய்த கசாயத்தை இரண்டு பங்காகச் செய்யவும். வியப்பைத்தரும் நாகம், இந்துப்பு, துருசு, வெள்ளி லோத்திரம் (லோத்ரா) பீதரோகிணி, தேங்காய் கூந்தல்பனை, தேற்றாங் கொட்டை, வகைக்கு ஒரு கழஞ்சு வீதம் சேரக்கவும். நல்ல தராய், பச்சைக் கற்பூரம் இவைகள் 1/4 பங்கு நல்லது. ஒன்றாக

.................................................................................................

45.துன்னா
நா - (தாலம்) நிலப்பனை, கூந்தல்பனை் தராய்
எண்ணாறு நீர் எண்நாழி என்றாதல் வேண்டும். ஆ - வியப்பு, தென் - அழகு, தெங்கு; நா - தராய் தாறு இலுப்பை என்றாதல் வேண்டும். தாறு - (பாக்கு) ஈச்சு. மன்ற - தோற்றம் ; ஆறு - விதம்; நாள் - அன்றலர்ந்தபூ. சினா - பங்கம்பாளை, வட்ட திருப்பி, சின்னாள் என்பது சினா நாள் என்றாதல் வேண்டும். எண் - கணக்கிடப்படும்.

சேரும்படி, தட்டிப் பொடி செய்து, கசாயத்தில் தூவவும். பின்னர், கசாயத்தை, காய்ச்சவும். குழம்பு பதத்தில் எடுக்கவும். இது, இளநீர்க் குழம்பு ஆகும். கண்ணில் விடவும்.

46. ஆவின் பச்சைப்பால் தன்னில்,
அழுதை குத்தி, நெய்வாங்கி
மேவுதுத்தம், துருசுட்டே,
(மே)விழுங்கு எலுமிச்சம் பழச்சாற்றில்
தூவுங் கலத்தில், பிறந்தேற்ற
தன்னில் குழம்பு தானதாக்கி
கூவும் குயிலார், இழி கண்ணில்
கொண்டே எழுதக் குணமாமே.

உரை: பசுவின்பாலை எடுத்துக் காய்ச்சி, தயிராக்கவும். தயிரிலிருந்து நெய் உண்டாக்கவும். நெய், துத்தம், துருசு, இவற்றை பழச் சாற்றில் அழுத்தி குழம்பு போல் செய்யவும். வலிமையான பாத்திரத்தில், அடுக்கி அடுப்பில் ஏற்றவும். பின் காயச்சி, குழம்பாக்கவும். இக்குழம்பை, கண்ணில் எழுத, இழி கண் நோய் தீரும்.

47. **கண்காச மாத்திரை**

சங்கு, திப்பிலி, மிளகு சுக்கோடு
தாரமோடு அதிமதுரமும்
புங்கவித்தொடுபீத ரோகணி
பொடியது1, துத்த, மனோசிலை
அங்கரைப்பது, நந்தி பத்திரிசாறு
தேனுடளாவியே
கங்குல் பற்றிய, விழிஎழுதிடில்
காச படலமும் நாசமே.

உரை: சங்கு, திப்பிலி, மிளகு, சுக்கு, தாரம், அதிமதுரம், புங்கவிதை, பிதரோகிணி, இவைகளைப் பொடி செய்ய வேண்டும். துத்தம், மனோசிலை இவைகள் யாவற்றையும், நந்தி இலைச் சாறு விட்டரைதக்கவும். தேனுடன் கலந்து, மாத்திரையாக உருட்டவும், இம்மாத்திரையை விழிகளில் பூச, கண்காசம், படலம் நீங்கும்.

48. பச்சிலை, கச்சோலம், சாதிக்காய்
இச்சீலை, ஈச்சம் பழம், பழச்சாறு
வெள்ளிய வெள்ளிலோத்திரம்,
ஒத்தலையோர் ஒன்று, கழங்சுண்ணி
அரைத்துண்டை செய்து சீலை
என்னும் நுதல் மடவாய்
ஏற்கும் கற்பூராதி இதுகற்சிலை
என்று முலைப்பால் கண்ணுக்கு
எழுதாதீர், அறியாதே.

உரை: திருநீற்றுப் பச்சிலை, கிச்சிலிக் கிழங்கு, சாதிக்காய், மனோசிலை, ஈச்சம்பழம், எலுமிச்சம் பழச்சாறு, வெண்மையான வெள்ளிலோத்திரப் பட்டை, வகைக்கு 1 கழஞ்சு, இடித்துப் பொடி செய்து அரைத்து உருண்டைகளாகச் செய்யவும். வில்லைப் போன்ற புருவங்கள் உள்ள பதுமையைப் போன்ற பெண்ணே, தாய்ப்பாலால் மாத்திரையை இழைத்து அறிந்து, கண்ணில் எதைப் போடுவீர்கள்? இது கற்பூராதி உருண்டையாகும்.

.................................................................................

48. கச்சோலம் - சீமைகிச்சிலிக் கிழங்கு, இச்சி - இத்தி, கத்தூரி மஞ்சள், சீலை - மனோசிலை ; சிலை - வில். சிலை, சீலை என்று நீண்டது.

குறிப்பு: புருவங்கள், கண்கள் ஆகியவைகளுக்கு அழகுக்கு, பெண்கள் மையைத்தீட்டுவார்கள். ஆனால் கற்பூராதி மாத்திரையின் பயன்பாட்டை அறியார்கள். இதையே, அறியாதே, எழுதாதீர் என்றார்.

49. சந்தன மனோசிலை பளிங்கதா(ன்)

சங்கு, தலையோடு, கருஞ்சீரகம்

கருஞ்சீரகம், கடகு, திரிபலை

காரக் கற்பூரம், மஞ்சள்

மரமஞ்சள், ஆழாக்கு சனமோடு

இந்துப்பு, அரிதாரம்

கந்தமலி, புங்கு, மது வெள்ளி

லோத்திரமுன் ஏலம்

தந்தமிகு, பித்ரோகிணி தண்ணீரால்

சிந்தை நல் மங்கை அரைத்த

கமழ்ந்த தேனிலெ ழுதக் கண்ணில்

ஊன் அதுபோமே.

உரை: சந்தனம், மனோசிலை, கற்பூரம், சங்கு பேரண்டம், கருஞ்சீரகம், திரிகடுகு. திரிபலை, வெங்காரம், பச்சைக்கற்பூரம், கத்தூரிமஞ்சள், மரமஞ்சள், ஒரு ஆழாக்கு, சிறிய அளவு மோடி என்ற திப்பிலி மூலம், இந்துப்பு, தாகம், கந்தகம், புங்கு, வெள்ளிலோத்திர மரப்பட்டை, ஏலம், பற்பாடகம், பீதரோகிணி, இவைகளைத் தண்ணீர் விட்டு அரைக்கவும். அறிவுள்ள நல்ல பெண்ணே அரைத்து மணமுள்ள, மாத்திரையை தேனில் உரசி, கண்களில் விட, கண்களில் வளர்ந்த சதை வளர்ச்சி என்பன நீங்கும்.

50. **வெள்ளையுருண்டை**

துத்தம், நல்லதி மதுரம்

துலங்கும், திப்பிலி மிளகுடனே

........................................................................................................................

49. பளிங்கு - கற்பூரம், சன - சன்ன மோடி; தந்தம் - பற்பாடகப்புல். தலையோடு - பேரண்டம்.

குறிப்பு காரச்சுவையுள்ள கற்பூரம், வெங்காரம் என்ற இரு பொருளை, காரம் என்ற சொல், உணர்த்தும்.

ஏத்தும், வெள்ளிலோத்தரமும்
இனிய கடுக்காய், மரமஞ்சள்
சித்தக் கினிய, நெல்லி, தான்றி
செவ்வே(ல்) தன்னிலொக்க எடை
நிதத்தரைத்து நீர் வார்த்து
நேராஉண்டை தனைப் பிடித்து
சுத்தம் செய்து கண்ணிலிடத்
தோன்றா கண்ணும் தோன்றிடுமே.

உரை: துத்தம்,தூய அதிமதுரம், நன்மைதரும். திப்பிலி, மிளகு, ஏற்றம் தரும் வெள்ளி லோத்திரப்பட்டை (லோத்ரா), கடுக்காய், அறிவுக்கு இன்பம் தரும் நெல்லிக்காய், தான்றிக் காய், சிவப்பு வேல மரம், இவைகளை சமமாக எடுக்கவும். நீர்விட்டு, நாள் தோறும்அறைத்து, உருட்டி, உருண்டை செய்யவும். கண்களைக் கழுவித் தூய்மையாக்கி. பின் உருண்டையை இழைத்து கண்களில் விடவும். பார்வை இல்லாத கண்களில், பார்க்கும் திறன் கிடைக்கும். வெள்ளி லோத்திர மரம் ஐங்குறுநூற்றில் கூறப்படுகின்றது. வட இந்திய மரவகை இதில் மட்டுமே வருகின்றது.

51. சுத்த திப்பிலி, கற்கண்டு, சர்க்கரை
துருசு கடுக்காய் சாரணைவேர்
ஏது, மரைப்பொடி அன்றிட்ட
முட்டை, நேரில் மூன்று நாள் ஊறி

..........................................................................................

பாடபேதம் : 1. பொடியாது. 2. சங்குலோற்றிடு விழி தனக்கிடு சங்காதி மாத்திரை. பாகம் 3.

51. அகத்தியா 2000 - பாடல் 31 - பக்கம் 345. மகால் வெளியீடு சித்தவைத்தியத் திரட்டிலும் இப்பாடல் உள்ளது. (க.நா. குப்புசாமி முதலியார்)

52. உருக்குதல்; விழுது - வெண்ணெய்.

53. மேவிழுது என்றாதல் வேண்டும். தாவு - வலிமை. பிறக்கேற்றி - அடுக்காக சித்தவைத்தியத் திரட்டு பாடவேறுபாடு. 1. சுக்கொடு மிளகு திப்பிலி 2. புதிய 3. கண்ணணிலிட்டடு.

நித்தக் கற்பூரம், நிகழும்
ஈச்சம் பழச் சாறினில்
சுத்தமாக அரைத்திடவே
தோன்றாக் கண்ணும் தோன்றிடுமே.

உரை: தூய்மையாக்கப்பட்ட திப்பிலி, சீனாக் கல்கண்டு நாட்டுச் சர்க்கரை, துருசு, கடுக்காய், சாரணை வேர், சங்கன்செடி, தாமரை இவைகளை சம எடையாக எடுத்துப்பொடி செய்தல் வேண்டும். இவைகளை, அன்று இட்ட கோழி முட்டையில் 3 நாள் ஊற வைத்து அரைத்துக் கொள்ளவும். இத்துடன், நாள்தோறும் பயன்படுத்தும் கற்பூரம் சேர்க்கவும். பின்னர் எல்லாவற்றையும் பேரீச்சப் பழச்சாற்றில் கலந்து, அரைக்கவும். இதை கண்ணில் இட, கண்களில் பார்வை உண்டாகும்.

## 52. வேதனை உருண்டை

அலைக்கும் தலையோடுதான் கழஞ்சு
அ(ன்)னே, பீதரோகிணியும்
வலைக்கும், துத்தம், சங்கிவை தான்
மன்றும், வே கலச்சார்வுடனே
அரைக்கமோர் இரு கழஞ்சு இனிநான்
சொல்வேன் வேடப்பூவாதி
தி(ல்)லக் குமரித் தடத்தாமரைவேர்
வெவ்வேறே ஒரான்று நாற் கழஞ்சு
புலைக்கும் புளியிலைச் சாறுடனே
யோத வரைத்துப் பொலிந்த உண்டை
மலைக்கு அய்யன், எங்கள் பிரான்
மன்னும், திருவாதவூர் பெருமான்
தொலைத்திங்கள், அருளிச் செய்தபடி
தோன்றும், வேதியிலை, உருண்டையின்
பொ(ய்)யிலைக்கு மாறியாடும், பெருமானென
கொடியும் எனக்கருளே.

உரை: அசையும் தலையில் உள்ள ஒரு கழஞ்சளவு, தாய் போன்ற பீதரோகிணி, துத்தம் சங்கு, இவைகளை மூட்டப்பட்ட ஒரு பாத்திரதில் இரு கழஞ்சளவு இட வேண்டும். மேலும் கூறுவேன் அவுரி, தில்லை, வில்வம், கற்றாழை, மூங்கில், தாமரையின் வேர், தனித்தனியாக நான்கு கழஞ்சு இழிவுள்ள புளியிலைச் சாற்றினால் பொருந்த அரைத்து, அழகுடன், உருண்டைசெய்யவும். கைலை மலையில் உள்ள சிவன், எங்களுடைய தலைவன். ( சித்த மருத்துவத்தைத் தோற்றுவித்தவர் என்ற புராண வழக்கு இங்கு கூறப்படுகின்றது. சிவபெருமான அருளியது என்று குறிப்பிட்டதின் மூலம், சித்த மருத்துவத்தின சிறப்பு, குறிப்பால் உணர்த்தப்பட்டது.)

மாணிக்க வாசகர் தோன்றி முழு நிலவை ஒத்து, இம்மருந்து செய்யும்படி, அருள் செய்தார். இவ்வாறு செய்யப்பட்ட உருண்டையின் பெருமைகளை அறிந்தவன் இல்லையாம். இது பொய்யானது அல்ல. இதற்கு, மதுரையில் கால் மாற்றி நடனமாடிய நடராசன் ஒழுங்குடன் அருள் செய்வார்.

.............................................................................................

51. எத்து – வஞ்சகமான, ஏது– சங்கஞ்செடி

குறிப்பு : முன்பாடலிலும் வருதல் காண்க.

தொலை – ஒப்பு, சேய்யை திங்கள் – மாதம், நிலவு; திருவாதவூரர் – திருவாசகம் பாடிய மாணிக்கவாசகர் தோன்றிய இடம். வாதவூர் – காற்றை இழுத்து வெளியிடும் உடல்.

குறிப்பு: தடத்தாமரை என்ற சொல், நீர்நிலையில் வளரும் தாமரையையும், மூங்கிலையும் குறிக்கும். இந்நயம் நுகரத் தக்கது.

தடம் – மூங்கில். புனல் – ஊன், இழிவு. போத – பொருந்தும் படி : வாதம் – காற்று;

52. அலைதல் – அசைதல்; அன்னே – தாயை ஒத்த வலை – வல்லமை என்றாதல் வேண்டும்; வல்லை – வலிமை மன்று – மணம். சார்வு – சார்பு – இடம். தரைக்கும் ஓர் என்றாதல் வேண்டும். வேது – தண்ணீர். வாதி – கந்தகயிலைபாடாணம். காதணி ஓம்பி – நெட்டி. வேடப் பூவாதிலை – தில்லை. வாதம் – வில்வம்; தடம் – ஓர்மரம் (பெருமை, நீர்நிலை) . வேதி – சாதிக்காய்.

கொடிய – ஒழுங்கு; வேதி – அறிந்தவன். ஓடி – அசபை என்பது நடராசப் பெருமானின் தாண்டவமாகும். அசபை – மூச்சுக்காற்று.

53. நறவு – குங்குமப்பூ

53. கண்ணிலிமைத் துடிப்பு

கண் மயிர் குத்தும்..............

நண்ணு, அரிதாரமுடன்

நற, (வ)சம்பு

பண்ணியரைக்கும் துளசி

அதன் சாற்றிலு(ண்)

உண்டை உரைத்திடும்கொள்

கண்ணி(ல்) உகந்து.

உரை: அரிதாரம், குங்கமப்பூ, வசம்பு என்ற சரக்குகளைத் துளசிச் சாற்றினால் அரைக்கவும். உருண்டையாகச் செய்து விருப்பப்படி உரைத்து உட்கொள்ளவும். இதற்கான அனுபானம் துளசிச்சாறு. இவ்வாறு உண்ண, கண்களில் உள்ள, மயிர் குத்து, துடிப்பு என்பன தீரும்.

54. **குந்தம் தீர**

தாவும் நிலையில், புழுவை வாங்கித்

தயந்து, சீலை வாடிகொண்டு

ஏவும் பொடி செய் இந்துப்பை

இட்டுக் காய்ச்சி இதமான

மேவம் துத்தம், துருசுடனே விளங்கும்

தேனடன் விட்டரைத்துக்

கூவும் குயிலார், கண்ணிலிடக்

குந்தம் தீரும், குறையில்லையே.

உரை: கேடுள்ள முதன்மையாக உள்ள மிகுந்த குந்த நோய் தீரும். இதற்கான மருந்து செய்முறையாவது, மருத்துவன் சொன்னபடிச் செயல் படும் இந்துப்புப்பொடி, துத்தம், துருசு இவைகளை தேனுடன் கலந்து, அரைக்கவும். துலங்கும் தூய்மையான துணியால் வடிகட்டவும். குயிலின் குரல் கொண்ட பெண்ணே, இம்மருந்தைக் கண்களில் விட, குந்த நோய் நீங்கும். பார்வை இல்லை என்ற குறை இல்லாமல், பார்வை ஏற்படும்.

55. **கண்புகைச்சல் தீர**

ரொக்க மூலி வேரை வாங்கி
கோவின் பாலால் குறுக அவித்து
தார் பிசைந்துக் கழுவிப் போட்டு
தன்னும், எண்ணெய் தனிலரைத்து
நூற்பச்சைக் கற்பூரமும்
நயந்து கலத்தின் புறம் தேய்த்துச்
சீராங் கண்ணிலிடத் தீரும்
சிறந்த புகைச்சலும் சீராமே.

உரை: குங்கும்பூ, சித்திரமூலம் இவற்றின்வேர்களை சமநிறையாக பசும்பாலில் சிறிது நேரம் அவிக்கவும். நீர்விட்டு கழுவி வெந்த வேரை பிசையவும். பிசைந்த பகுதியை எண்ணெயில் மெல்ல மெல்லத் தள்ளி பின்னர், அரைக்கவும். அரைத்துள்ளதை சிமிழில் அடைக்கவும். கலம் என்று பாடலில் இருந்தாலும், இங்கு மைச்சிமிழையே குறிக்கும். மைச்சிமிழின் வெளியில், நறுமணம் வீசும், பச்சைச் கற்பூரத்தை, நன்மை ஏற்பட, வெளியில் தடவவும். கண் செம்மையாகும். கண்ணில் ஏற்படும் புகைச்சல் தீரும். சிறந்த புகைச்சல் என்ற சொல், இழிவுச் சிறப்பாக வந்துள்ளது.

56. அடு, தும்ப(ட்)டி, கொள், கடுக்காய் நெல்லி
அதைக்கும், தான்றி, பால்போக்கி
எடுக்கும்படி, இவை ஒரொன்று
என்னும்படிப் பதின் கழஞ்சடனே
அடுக்கும்படி, நீர்பத்து நாழிலிட்டு
அமரக்காய்ச்சி, எட்டொன்றாய்
கொடுக்கும் திப்பிலி, சுக்கோடின்னம்
தோன்றும் நெல்லிக்கடு தோன்றி

57. அடுத்துக்கொள்ளும் அதிமதுரம்
தாவும் கழுநீர்த் தாமரை வளையம்

உடுத்தச் சந்ததம் பால் நாழி
மன்னும் பசுவின் பால் உழக்கு
விடுத்துக் காய்ச்சி, நிறுத்தீர்
மீளாதென்ன, வேண்டாமே.

58. அட்டி, மதுரம், கண்டச் சர்க்கரை
ஆற்றும் கொற்றான், கண்டகாரி
சந்தன அப்பைக் கிழங்கு
மருந்தும், கழுநீர் தாமரை வளையம்
கொட்டிக் கிழங்கு, இவை ஒவ்வொன்று
கூட்டிக் கொள்ளும் முக்கழஞ்சு

59. தட்டி அரைத்துப் பால், வார்த்து
தாவும், பசுவின் நெய் உழக்கு
விட்டம் தெரித்துப் பதத்தில் வடி
வியாதி எழுந்து மெலியும் கண்ணில்
ஒட்டி, நிறுத்துக் கொண்டு பாரீர்
உள்ளயடி, நாம், சொன்னோமே.

உரை: சுட்டதும் மட்டி, கொள், கடுக்காய், நெல்லிக்காய், தான்றிக்காய் இவற்றின் குற்றமுள்ள பகுதிகளை நீக்கவும். கடுக்காய், நெல்லிக்காய், தான்றிக் காய்களில் உள்ள கொட்டையை நீக்க வேண்டும். வகைக்கு 10 கழஞ்சு வீதம் எடுத்து 10 நாழித்தண்ணீர்

.................................................................................................

54.தயந்கு – துலங்கு, தயாங்கு என்றாதல் வேண்டும். தலை – முதன்மை தாவு – கேடு. வடி – கூர்மை.

55. தார் – நீர்.; ரொக்க மூலி – இரத்தமூலி – இரத்தமூலி என்றாதல் வேண்டும். இரத்தம் – குங்குமப்பூ. மூலி – சித்திர மூலம்.

56. பால் – சாறு, பகுதி; போக்கு – குற்றம். அமர – இருக்க் கொடுக்கும் – தேள்கொடுக்கு. இன்னம் – இத்தன்மையது. தோன்றி – செங்காந்தள். 57. உடு – உசிலை. அதும் – அத்தி. சந்தம் – அகில். சந்தனம், தாழை. மருந்து – இஞ்சி. விட்டம் – உடல்.

58. மருந்து – இஞ்சி 59. விட்டம் – உடல்.

விட்டு அடுப்பேற்றிக் காய்ச்சி 1/8 பங்கு சுண்ணடியவுடன், எடுக்கவும். தேள் கொடுக்கு, திப்பிலி, சுக்கு, செங்காந்தள், வாகை, கடுகு, மருதோன்றி, அதிமதுரம், செங்கழுநீர் தாமரை வளையம், சந்தனம், அத்தி - பால் நாழியாளவு உழக்கு பசுநெய் விட்டுக் காய்ச்சவும். தாழை செஞ்சந்தனம், கண்ட சர்க்கரை, முடக்கொற்றான், கண்டகாரி, அப்பைக் கிழங்கு, இஞ்சி, செங்கழுநீர், தாமரை வளையம், கொட்டிக்கிழங்கு - மூன்று கழஞ்சு, இவைகளைப் பொடிசெய்து பால் விட்டு, உழக்கு நெய்யில் சூடுபண்ணி, பக்குவத்தில் வடிகட்டவும். இதனை கண்ணில் ஒத்தி எடுக்கவும். அதிகமான நோய், குறையும். இதை உள்ளவாறு நான் கூறினேன்.

60. **இழிகண் நீங்க**

துன்னா விழியும், இழிச்ச கண்ணும் தீர
    சொல்(ல)ம் எருக்கில் பஞ்சிட்டுச் சுட்டு
இன்னா, சுடுசுட்ட, சாம்பல் இறகும்
    சுரவெண்ணெய், இத்துடனே
மன்னா, கற்பூரம், துத்தம் தோய்த்த
    மருவும், குழம்பைச் சிமிழில் அடைத்துத்
தின்னால், தினவும், இழிச்ச கண்ணும்
    தீர, நல்ல மருந்திதுவே.

உரை: நன்னிலையில் உள்ள மனிதர்களுக்கும் பொருந்தாத, இழிச்ச கண், அரிப்பு என்பதைத்தீர மருந்து சொல்லுகின்றேன். எருக்கன் செடியில் பஞ்சைச் சுற்றிக் கொளுத்தவும். எரிந்துள்ள, சாம்பல், தலையில் அணியும் மயில் தோகையின் வெப்பமான சாம்பல் காய்ச்சி வெண்ணையுடன், கற்பூரம், துத்தம் என்பன சேர்த்து, அழுத்திக் கலக்கவும். இதை உண்ண, இழிகண், அரிப்பு போன்ற கண்நோய்கள் தீரும்.

........................................................................................................

60. துன்னா - பொருந்தாத சாம்பல்; நாவல், நெரிஞ்சில்; சுடு - வெம்மை. இன்னா - இன்பம் தராத. சுட்டல் - காட்டுதல், சுடுதல், மதித்தல் - இறகு - மயில் பீலி. சூட்டு என்றாதல் வேண்டும். சுரம் (ம்) - வழி. காய்ச்சின

61. **எண்ணெய்**

கொற்றச் சொல்வேன், சிவத்துடங்கு
துடங்கு எண்ணெயிது கேளாய்
நாற்றுப்பலம் குறுந்தொட்டி
நுகரும் தண்ணீரி பலமொருநாழி
ஏற்றிக்காய்ச்சி, எட்டொன்றாய்
இசைந்தங் கரைக்கு மருந்தினிகேள்.
தேற்று, முப்பலம் தேவதாரம் செவ்வேல்
எண்பலம் குறுந் தொட்டி
உற்றும் எரிப்புப் புறந் தோலும் ஒன்று
உடனரைத்துக் கொள்ளும்.

62. வீற்றிருக்கும் எண்ணெய் அறுநாழி
விட்டுக் கொள்ளும் பாலொருதூணி
ஆற்றி, வெந்து பதத்தில் வடித்து
அடுக்கும் சீ(ழ்) வற்றி அப்படிக்காட்டி
மாற்றும் விசாதிபடலம், திமிரம்
மன்னும் பார்ப்ப, ரோகமுடன்
சற்றம் வாதப்பூவும், கண்ணில்
தன்னும் பக்க வாயுடன்.

63. வெற்று விரண சுக்கிரனும்
மேவும் கபால குட்ட முடன்

.............................................................................................

61. துடங்கு - ஆரம்பித்தல்.
பாடவேறுபாடு : தேரையர் வாகடம் - பக்கம் 187, பாடல் 524.
62. தன்னுதல் - மெல்லத்தள்ளுதல். நயம் - நன்மை. சிறத்தல் - மதிப்பு மிகுந்த. அதைப்பு - பெருமை. அடுதல் - சமைத்தல்.

போற்றுக் கோணுமுகவாதம்
பொருந்தும் கண், சூலை, தலைகனப்பு
காற்றுப் போலப்போய் விடுமே
கழுத்து மேல் கழிலுள்ளதுவே.

உரை: துவக்கத்தில் வெற்றியைப் பற்றி கூறுகின்றேன். நன்மையைத் தரும் எண்ணெயை செய்வது குறித்து, ஆரம்பிக்கின்றேன் கேட்கவும். 100 பலம் சிற்றாமுட்டிவேர், தண்ணீர் நாழியளவு விட்டுக் காய்ச்சவும். 1/8 பங்களவுக்கு சுண்டியபின், எடுத்து இறக்கவும். இதில் சேரும் கடைச்சரக்குகள்; தேற்றாங் கொட்டை, திரிபலை, தேவதாரம். சிவப்பு வேல மரப்பட்டை என்பன. 8 பலம் மிக்க கார்ப்புச் சுவையை உடைய மரப்பட்டையைப் பக்கமாக, அரைத்துக் கொள்ளவும். 6 நாழியளவு எண்ணெய், பால், தூணயளவு விடவும். கற்கத்துடன் கலந்து, அடுப்பிலேற்றி வெந்தவுடன், பக்குவத்தில் வடிகட்டவும். இம் மருந்தைப் பயன்படுத்த, வரிசையாகச் சீழ் வடியும். விசாதி படலம், திமிரம், பார்ப்பரோகம் என்பனவற்றை மாற்றும். சிறிதளவு உள் கண்வாதம், கண்ணில்பூ, கண்ணில் பொருந்தியுள்ள பக்க வாயு, வலிமையுள்ள விரண சுக்கிரனும், மேலான மண்டையில் ஏற்படும் கரப்பான, போற்றும்படியான முகக் கோணலை உண்டாக்கும் வாத நோயும், உடலில் பல இடங்களில் பொருந்தும் சூலை, தலைப்பாரம், என்பன காற்று போல எளிதாக நீங்கும். குரல்வளைக்கு மேற்புறம், மிகுதியாக உள்ள நோய் விலகும்.

.............................................................................................

குறிப்பு : பாடவேறுபாடு தேரையர் வாகடம் பக்கம் 188, பாடல் 525.

63. கொற்றம் – வெற்றி, வீரம். சிவம் – நன்மை. துடங்கு – ஆரம்பிதல். உற்றும் – உறு – மிக்க உரும் – அச்சம், இடி, எறிப்பு – ஒளி, கடுமையான வெய்யில். எரிப்பு – கார்ப்புச்சுவை. புறம் – பக்கம். தோல் – மரப்பட்டை, வற்றம் – வடியும். தன்னுதல் – பொருந்துதல்; வற்று – வலிமை உள்ள் கழுத்து – மிடறு, குரல் வளை; கழி – மிகுதி.

64. **கண்நோவு, செவிநோவு தீர எண்ணெய்.**

கையாந்தகரையோடு கற்றாழை
நெல்லிப் பண்ணாறு
மென்மொழியாய் தனித்தனியே
இவைநாழிப்பால் நாழி
என்நாலும் பரிவுடனே கூட்டி
மண்ணாறு நன்னாரி இருவேலி
அதிமதுரம் வளப்படவே நாலாக
சந்தனம் கூட்டி......

65. எண்ணாத இவைதான் ஓர்
ஒன்று இருபலம்
கொண்டெள் எண்ணெய் நாழி
உரிக்கும் வந்திதனை வார்க்கு
நண்ணாது உனக்கிந்த நோய் எனதென்று
நானுரைத்தேனே.

உரை : கரிசாலை, கற்றாழை, நெல்லிக்காய் வகைக்கு எண்ணப்படும் நாழி அளவு, பால் 4 நாழியளவு; அன்புடன் கலந்து நிலத்தின் அழகான நன்னாரி, இருவேலி, அதிமதுரம், செழுமையான 4 பங்கு, சந்தனம் பங்கு, எள் 2 பலம், எண்ணெய் உரி அளவு வார்த்துப் பயன்படுத்த, நோய் அணுகாது என்று நான் எல்லா வகையாலும் கூறினேன்.

..........................................................................................

பாடவேறுபாடு : தேரையர் வாகடம் - பக்கம்:184 பாடல் 515.

64. மெய்மொழியாய் என்றாதல் வேண்டும். நாழி - நாடாபடி; எண் - எண்ணப்படும். பரிவு - அன்பு. மண்ணாறு - மண் - நிலம். ஆர் - அழகு. ஆறு பக்கம், ஒழுக்கம். மண்ணார் - என்றாதல் வேண்டும். நண்ணுதல் - நெருங்குதல்.

## 66. தாம்பிராதி மாத்திரை

மாஞ்சி, குங்குமஞ்சள், மொங்கு
சங்குடனவரை, இந்துப்பு
சங்கடனவரை, இந்துப்பு
ஆஞ்சித்தாமரை, அல்லி, மனோசிலை
ஆகுமேல, லவங்கப் பச்சிலை
வஞ்சி மஞ்சள், மிளகோடு கொள்
வேறு திப்பிலி, வெள்ளிப் பளிங்குடன்
நாஞ்சி, நல்லவசம்பு, வெள்ளிலோத்தரம்
நண்ணும், பீரோகிணி, ஓரிதழ்
நெருஞ்சி, நல்ல சிறு சிறுகீரை
நீடுவான, பசும்பல் இதனோடு
வாகுவான, மரமஞ்சள்கச்சோலைம் மன்னும் தேற்றான்
விரைகாரத்தோடு
ஒந்து பற்கழஞ்சு, சேரோன்று ஒன்று
உயர்தனை, பீர்க்கினோட
நெய், கச்சவேம்பு, கையாந்தகரைச்சாறு
எடை விட்டரைத்து உண்டை
செய்து கண்ணுக்க சொன்னார் புகழ்தோர்
சொல்லும்படி, தாம்பிராதி என்பது தானிதே,

உரை: சடாமாஞ்சில், கத்தூரி மஞ்சள் பெரிய சங்கு, இந்துப்பு, தாமரை அல்லி, மனோசிலை, ஏலம், இலவங்கம், திருநீற்றுப்பச்சை, கத்தூரி மஞ்சள், திப்பிலி, பாலை, கற்பூரம், கலப்பைக் கிழங்கு, வசம்பு, வெள்ளிலோத்திரப் பட்டை, பீதரோகிணி, ஓரிதழ் தாமரை, கச்சோலம், தேற்றான் விதை, சீனாக்காரம் - வகைக்கு கழஞ்சு, சொல்லப்படும் பூண்டின் பல் 1 சேர், இவைகளைக் கம்பஞ்சாறு, பீர்க்குச்சாறு, நெய், கசப்புவேம்பு, கரிசாலை சாற்றில் அரைத்து, உருண்டை செய்யவும். இதை தாம்பிராதி உருண்டை என்று புகழ் பெற்ற மருத்துவர்கள் கண் நோய்களுக்குகாகச் சொன்னார்கள்.

67. **கண்நோவு, பித்தகாசம் தீரப்பற்று**

சோற்றுப்(பு) பத்தும், திருநீறும்
தோகையார் முலைப்பாலும்
வெற்றுப் பத்தைத்துடைத்துப்
போட்டு, மேவிக் கபாலத்தின்
புறத்தே, தேய்த்துக் காற்றுப்படாமல்
ககத்திலிருக் கண்ணைச் சூடி
வளைத்தக்கால்
தோற்றுப்போமே கண்நோய் எனச் சொன்னார்
இதைச் சொன்னாரே.

உரை: உப்பு - 10 பங்கு. திருநீற்றப் பச்சையையும் தாய்ப்பால் கொண்டு அரைக்கவும். வேறு எதையும் கலக்காத வெற்றுப் பற்றை மண்டைக்கு வெளியில் கண்ணைச் சுற்றி, வட்ட மாகப்பூசவும், உற்பத்தியான, கண்வலி, காற்றில் ஒலியை எழுப்பாமல் செல்லும் அம்பு போல விலகும்.

68. **கண்ணில் சுக்கான், பூ, படலம் தீர, புற வளையம்**

கண்ணைக் கெடுவாய் கண்ணோய்
வெண்ணெய் காத்தில், மூடிக்கிடவாதே
எண்ணெய் துள்ளித்தயிர் பனிநீர்ஈ
ஓடுஎறும்பு நாயுருவி...............
மண்ணைக் குழுவிய துத்திவேர்
கண்ணெச்சூழ வளைந்துகொண்டு
கருத்தளவே திரியலாமே.

உரை: கண்ணின் பார்வைத்திறனைப் போக்கும் இயல்புற்றது கண நோய்; கண்நோய் பார்வையை மறைத்து இருக்கும்நிலை, வெண்மையான நெய்யை ஊற்ற விலகும். எண்ணெய், துளசி, தயிர் பனிநீர், இஞ்சி, அத்தி, நாயுருவி, வாலுளுவை, தூய்மை

செய்ததுத்திவேர், காட்டு மல்லிகை, இவைகளை எடுத்துப் பாத்திரத்தை, தேய்த்துக்கொள்ளவும். கடைச் சரக்குகளுடன் நெய்யைக் கலந்து, கண்களில் வளைய மாக வெளிப் பூசவும், கவனமாக.

உரை : தாமரை, புங்கு, பேய் கடுகு, கடுக்காய், அபின், மேலான உப்பு, மிக்க திரிக்கடுகு, திரிபலை, வெங்காரம், இந்துப்பு, நாகம், மிளகு, துத்தம், சங்கு, சீந்தில், தேன், தந்தம், ஆடாதோடை, செம்பு, துருசு, மாதுளை, வாழச்செய்யும் கற்பூரம், பீங்கான், பீதரோகிணி, குட்டிப்பலா, நீராஞ்சனக்கல், கடல் நுரை, பெரிய அரிதாரம், மனோ விழலரிசி, வெள்ளிலோத்திரம், கங்க மாஞ்சனக் கல், கோரோசனை, பலகறை, சிவப்புக் கழுதையின் பல், யானைதந்தம், சாம்பல், மான்கொம்பு, மான்நகம், அகர், நிர்விசம், கள்ளி, தலையோடு, படிகம், கற்பூரம், திருநீற்றுப்பச்சை, வில்வம், கோழிமுட்டையின் வெள்ளைக்கரு, நன்னாரி, ஆச்சாமரம், சத்திச்சாரணை, பச்சரிசி, கத்தரி, சிறுகீரை, பொன்னாங்கண்ணி, மூங்கில், பெருமருந்து, சிறு புள்ளடி, அரசு, தேன், தும்பை, நெல்லிப்பழச்சாறு, நந்திவட்டப்பூச்சாறு, இவைகளை கனமாக அழுத்தித் தேய்த்துச் சாறு எடுக்கவும், பின் அடுப்பேற்றிக் காயச்சிப் பதத்தில் எடுத்து உண்டை செய்யவும். வெளியே திரிசெய்து ,

69. நந்தியாவெட்டைப் பூச்சாறும்
நல்ல பனை, மட்டைச் சாறும்
நயந்த மாதா, முலைப்பாலும்
நல்ல முருங்கைப் பூச்சாறும்

.....................................................................................

உயர் தினை என்றாதல் வேண்டும். கச்சல் – கசப்பு. பல் – கொம்பு, பூண்டின் உள்ளீடு; தேங்காய்த்துண்டு.

மஞ்சள் குங்குமம் என்பதால், குங்கும மஞ்சள் என்று குறிப்பிட்டார். ஆஞ்சில் – இசங்கு – ஆஞ்சில் ஆதல் வேண்டும். ஆஞ்சில் – ஏலம்; மொங்கு – பெரிய உறை – காரமுள்ள் வெள்ளி – பாலை நாஞ்சில் – நாஞ்சில் – கலப்பைக்கிழங்கு; ஒந்து – ஒத்த – தாக்கு. ஓது – சொல்.

சந்தித்து, நாலி ஒன்றே, ஒன்று

தனித்தனிச் சாறுழக்கு

வெந்திய ரச, மதி, மதுரம்

மேவும் பஞ்சாளம், பனங்குருத்து

முந்தி, யான் சொன்னவை நாலும்

முடிக்கக் கழஞ்சரை, ஓர் ஒன்று

வெந்தியான் சொன்வதின் கேளாய்

ஒலி இறை(இ)ச்சியு இப்படிக் கொள்

தந்தியிட்டு, முடிய விட்டுத்

தனியே, போல் சாறுழக்கு மருவி

வெந்து, ஒடித்ததனை

செந்திரளாய், கண் சிவப்பும்

கண்ணில் வேர்கோதாய்

நெய் எனவே.

உரை: நந்தியாவட்டையின் பூச்சாற, நீலம், சாதிக்காய்ச் சாறு, மா, வலிமையுடன் நன்மையைச் செய்யும் தாய்ப்பால், முருங்கைப்பூச் சாறும் சேர்க்கவும். கார்த்திகை பூ ஒன்று, இவைகளின் சாறு உழக்கு. வெந்தயச் சாறு, தேன், அதிமதுரம், பனைமரக் குருத்து, சீரகம் முதல் நான்கு சரக்குகளும் 1/2 கழஞ்சு; பனங் குருத்து, சீரகம் என்ப ன 1 கழஞ்சு; சொல்லுவதைக் கேளுங்கள். கொடி வேலி. மா, கத்தூரி

..........................................................................................

68. தோற்றம் - உற்பத்தி; படுதல் - ஒலித்தல். காத்தல் - அளித்தல், விலக்குதல் . காத்தல் - அளித்தல் மூடுதல்; கிடத்தல் - படுத்து இருத்தல். துளி - துளசி. எறும்பி - யானை (அத்தி); இடுதல் - குத்துதல், வைத்தல்.

69. பனை - நீலம். மட்டம் - சாதிக்காய், அரத்திக்காய், மாதா - தாய், மாது - கரிசாலை, மா- மாமரம், தா - வலிமை. நயம் - நன்மை, நா - பொலிவு; நால் - சுருக்கு, நாலின் - மூங்கில், நாலி - கார்த்திகை பூ; மதி - தேன்; பஞ்சானம் - சீரகம். பஞ்சானம் என்றாதல் வேண்டும். வெந்தை என்றதல் வேண்டும். வெந்தை - புட்டு. ஒலி - கொடிவேலி, வாகை. இறை - மாமரம், சிறகு. இச்சி இத்தி, கத்தூரி மஞ்சள், சத்தி; தந்து, கயிறு போல் - பதர்; தனி - ஒப்பற்ற, தூய்மை, தனியாக 'மருவி - குழுவு, கலத்தல். கோது - குற்றம். திரள் - மிகுதி.

மஞ்சள் 1/2 கழஞ்சு இவைகளை, துணியில் முடிச்சாக்க் கயிற்றில் கட்டவும். அடுப்பேற்றி எரித்து, வெந்து போனதும் இறக்கவும். வடிகட்டி சக்கையைத் தனியாகப் பிரிக்கவும். சாற்றை உழக்களவு எடுக்கவும். நெய் எனப்படும் இம்மருந்தை, கண்ணில் விடவும். மிகதியான கண் சிவப்பு மாறும்.

70. தமத்தாகிய பூப்படலம், காசமிவை பலவாம்
ஆமைத்தோடு, முதலைப் பல்லுமது நேர் பன்றிக் கொம்பு
நாமத்தாகிய வெள்ளியும், நல்ல சேவகன் நெஞ்செலும்பும்
தெத்தாகிய, கற்பூரமதி கடுமிச்சம் பழச் சாற்றில்
தேய்வ அரைத்திச் செலுத்தீர், காடித் தெளிவுடனே.

71. பங்கத்தொடு, புங்கு, பேய்கடுக்காய்
இன்பமுன், இவ்வற்றி
நெஞ்சுறு, பருப்புமுறக்கடு திரிபலையும்
முத்த இந்துப்பு, வெண்காரம், நாகம்
வேமரிச, துத்தமுதும், சங்குகொடி, ஈ
தந்தாதித்தட செம்பு, துருசு
செப்பதாது உய்யக் கற்பூரம், பீங்கானோடு
பீதரோகிணி, பிராஞ்சனம், கடல்நுரை
இருப்பரி, தாரம், மனோசிலை விழலரிசி
வெள்ளி லோத்திரம், குங்குமாஞ்சனம், கோரோசனை
கவடி, செங்கழுதைப்பல், ஆனை
வெண் மருப்புஎனத் தீநூறு மானின் கொம்பு மானின்
நகமுமு(ம்) உள்ளும் விடக்களி
நா, வெந்த தலையோடு படிகக்
கல், பளிங்கு சாதனம் கூதளம்
தன்னோடு கோழி வெண்முட்டை
ஆனால் குதிரையவை புண்டரிகம்

........................................................................

70.தமம் – இருள்.

71. கும்பு – திரள், கூட்டம், அடிப்பற்று; பலம் – பயன், உறுதி.

சிற்றி, வழுதலை சிறுகீரைப்பொன்
(ஆ)னாங்காணி புல்லூர் மணங்கும்
சிறு புள்ளடியே இளநீர் குமரி
எலுமிச்சம் பழச்சாறும், பொந்தில்
இளமட்டையும் நெல்லிப்பழத்தின்
நெல்லிக்காய் சாறும் நந்தி
வட்டப்பூச்சாறும் தளம் பெற
உரைத்துச் சமை, அந்த உண்டையை
தோய் இருந்து பலம் கலப்
புறத்தின் கும்பு செய்துக் கண்ணிலிடக்
கண்ணிலுள்ள நோயதனையு ஏகுமென்னே.

உரை: இருளை உண்டாக்கும் நோய்கள் கண்ணில் வரும்பூ நாகபடலம், காசம், என்பன போன்ற, பலவாம். இதற்கான மருந்து செய்முறைற் ஆமை ஒடு முதலையின் பல், அதன் இயல்புக்கு ஒத்தப் பன்றியின் பல், வெள்ளி, சிவந்த சேவலின் நெஞ் சென்பு, தேற்றான் கொட்டை, காவட்டம் புல், தேன், ஊமத்தை, பச்சைக் கற்பூரம், அதிமதுரம், கடுகு, இவற்றை காடி, எலுமிச்சம் பழச் சாற்றில் அரைத்து, ஒன்றாகக் கலக்க வேண்டும். இதை, கண்ணில் இட, க்ணணோய்கள் நீங்கும். கண்களில் உரைத்துத் தோய்ந்தவுடன், விடக் கண்நோய்கள் தீரும்.

72. **இழி கண்தீர**

இந்துப்பினிடை, கொத்தசாதினோடு
மித(ம்) நேரிடையிட்ட, ஆ வெண்ணெய்
இடு, பஞ்சித்த, செம்பின் பிறந்தப்பி வைத்து
பச்சைக்கிளி கொக்கு, மென்மைப்படுத்தால்
கொந்தி, கொதிட்டி இளிக்கின்ற கண்ணில்
அந்தி முன்வந்து செலைபழிக்கும்
ஆலத்தைவென்ற இந்திரநீலத்தை ஒப்பாம்.

73. பேய்க்கரும்பின், குடலொடு உப்பு
பெருக உலர்த்திப் பொடி செய்து
நாய்க் கரும்பின், சீலை தன்னில்
கபாலந்தன்னில் மைபற்றி
தேய்க்கும் தேடான் அரக்கு விட்டில்
தீரும் இழிகண், தீருமதே.

உரை: இந்துப்பு, முடக்கொத்தான், சாதிக்காய் சம அளவு எடுத்து பசு வெண்ணெயுடன் கலந்து குழம்பை, செம்புக் கலத்தில் வைக்கவும். திருநீற்றுப்பச்சை, புளிகரைத்த நீர், மா, அழகான தொங்கும் வேர்கள்

..............................................................................

தளம் – கனம்; கம்புசெய்து என்றாதல் வேண்டும். கம்பு – திரி; ம+ட்+ஐ = மட்டு – தேன் – மட்டு என்றாதல் வேண்டும். ஐ – தும்பை, கடுகு; பொதியில் என்றாதல் வேண்டும். பொது அரசு. மட்டை – மடி.

72. கொத்து – கைப்பிடி; கொத்துதல்; பிள்ளுதல் – துண்டுபடுதல்; திக்கு – திசை, பிகலிடம்; சேலை – அசோகு மகளிர் ஆடை. பழி – பகைக் இகழ்தல் ; இந்திர நீலம் – மணி, சோலை பழிக்கு ஆலத்தை என்றாதல் வேண்டும். ஆலம் – கறுப்பு, நஞ்சு, வெந்ற – வெற்றி பெற்ற.

ஊர் – (இடம்) பெருமருந்து; மணம் – வாசம் – குந்திரிகம். சிற்றி – பசரி, பச்சரிசி; புல் – மூங்கில், பனை ஊர். ஆ – ஆச்சாமரம், குதிரை – ஊர்க்குருவி; புண்டரிகம் – சத்திச் சாரணை. நாரி – நன்னாரி – நாரி என்றாதல் கூடும். பங்கம் – தாமரை, நெஞ்சு – உள்ளம் – அபின்; உறு – மிக்க. பர உப்பு – மேலான, பரஉப்பு என்றாதல் வேண்டும்; கொடி – எலுமிச்சை, சீந்தில், சித்திர மூலம், ஈ – தேன். ஆதி – ஆடாதோடை தடம் – மேன்மை. தாது – சாணம், மாதுளை, பிராய் – குட்டிப்பலா, அஞ்சம் – நீலாஞ்சம்; இரு – பெரிய, தீ – அறிவு, நீறு – சுண்ணாம்பு-. தீநீர் என்றாதல் உள் – அகர்விடம் – நிரவிசம்; சாம்பல் . களி – கள்ளி என்றாதல் வேண்டும். சாதனம், கருவி, பத்திரம் – இலை – பச்சை.

புறம் – பக்கம்; முதுகு; கருத்து – கவனம். திரிதல் – சுற்றுதல், அரைத்தல். ஈயை – இஞ்சி; மருகு – காட்டு மல்லிகை, மண்ணை – வாலுளுவை, பச்சைக் க்சபோலம். அளவு – எல்லை.

74. குறிப்பு: புளிய மரஇலைச் சாற்றைக் குறிக்கும். காற்று – அபானவாயு, சலனம், ஆவேசம். பால் – சாறு இம்முறைகளை சித்த மருத்துவர்

உடைய ஆலமரம், இவைகளைக் குழம்பாக்கி, கைப்பிடியால் எடுத்து துண்டு செய்து, இழிகண்ணில் இடவும். அசோகமர இலையின் சிவந்த நிறத்தைவிஞ்சம் பெண்ணே் கறுப்பான கருங்குவளையை மிஞ்சி ஆலகாலத்தை அருந்திய சிவபெருமானின் புராணக் கதை இங்கு கூறப்படுகிறது. ஆலகாலம் இங்கு பார்வையற்ற கண்ணுக்கு ஒப்புமைப் படுத்தப் படுகிறது. அந்திக்கு முன் என்ற சொல், இரவுக்கு முன்னர் உள்ள மாலையையும், அக்காலத்தே உண்டாகும் மாலைக் கண்நோயையும் குறித்தது. இருளைக் குறிக்க கருங்குவளைப்பூ. சுட்டிக்காட்டப்பட்டது. இவ்விதம், இலக்கிய நயம் மகிழத்தக்கது. அசோக மரத்தைக் குறிக்காமல், சிவந்த இலைகளைக் குறித்தது.

74. **பற்று**

பேய்க்கரும்பின், குடலொடு உப்புப்
பெருக உலர்த்திப் பொடி செய்து
நாய்க் கரும்பின், சீலை தன்னில்
கபாலந் தன்னில், மை பற்றி
தேய்க்கும் தேன், அரக்கு விட்டால்
தீரும், ழிகண் தீருமதே.

உரை: இழிகண் நீங்கும். கசப்புவகைக் கரும்பு, சதுரக்கள்ளி, உப்பு இவைகளை உலர்த்திப் பொடி செய்யவும். புளியமரம், சர்க்கரை, மனோசிலை, இவைகளையும், பொடியையும் தேன் விட்டு கல்வத்தில் மெழுகு பதம் வரும்வரை அரைக்கவும். பற்றுப் போட, இழிகண் தீரும்.

75. தோற்றுப்போமே, கண்நொவென்ன
சொன்னார், அதோர், சொன்னாடி
காற்ப்படாமல், எருக்கம் பாலில்
கள்ளிப் பாலைத் தேய்த்துலர்த்தி
உலர்மிருந்த, இலுப்பை எண்ணெய் போடக்
கேளாய், தலையோட்டில் சேர்த்து

மையைத் தேனில் குழைத்தேழு (து)

திரிந்த இழிகண்ணில்.

........................................................................

உரை: கண்களில் உண்டாகும் வலியானது நீங்கும் என்று மருத்துவத்தின் முன்னோடிகளான சித்தர்கள் சொல்லிய எருக்கு செடி அசையாமல் எருக்கம் பாலை எடுத்துக் கொண்டு கள்ளிச்சாறு சேர்த்துத் துணியில் தோய்த்து, உலரவைக்கவும். உலர்ந்தபின், இத்துடன் இலுப்பை எண்ணெய் விட்டுக் கொளுத்தி, மை செய்யவும். மையைத் தேனில் குழப்பி, இழிந்த கண்ணில் எழுதவும். இழிகண் நோய் அகலும்.

76. பயக்கும் பச்சைப் பனைமட்டை

பகரு, ஈச்சம் பழச் சாறும்

ஒக்க இடித்துச்சாறு இரண்டுவிட்டு

கலத்தின் அப்புறம் தேய்த்து

மைக்கண் குழிவு, மாற(அ)தனில்

மாய்த்து, கழிந்து, மயங்காமல்

இக்கண், தன்னில் எழுதீர்

இளைக்குமிது, எண்ணாதே.

உரை: பூத்துள்ள பசுமையான பனைமட்டையை இடித்துச் சாறுடன் பேரிச்சம் பழச்சாற்றையும் கலந்து, பாத்திரத்தில் வைக்கவும். விலாச்ச வேரைத் தோய்த்துக் கொள்ளவும். கலந்து இச்சாற்றை கண்ணின் மேல் பூசவும். இவ்வாறு செய்ய கண்நோய் குறையோ என்று எண்ணுதல் வேண்டாம். பகையான, கண்களின் குழிவிழுதல் போன்ற கண் நோய்கள் போக்கப்பட்டு, நீங்கும்.

........................................................................

76. பயத்தல் – பூத்தல்; பயம் – நீர், பால். தோய்த்து – என்றாதல் வேண்டும். பச்சை – திருநீற்றுப் பச்சை பசுமையான் இரண்டு – விலாமிச்ச வேர் வெட்டிவேர் கலத்தில் உட்புறந்தோய்ந்து என்றாதல் வேண்டும். மாய்தல் – மறைதல், இங்கண் – இவ்விடம் கழிதல் – போக்குதல்; கலம் – பாத்திரம்; மயங்குதல் – கலத்தல். மாற – பகை.

77. ஆகாக் கண்ணும் கறுக்கும்

அரு(ம்)மருந்து இரும் அறியு(ம்) உரைக்க

கேள், மின்னைப் போகாப்பெரிய

தம்முடைய, பிசனைக் குணர்ந்து

கண்ணில் வளை, எகாப்புண்ணும்

இமை த்தடிப்பு எல்லாம் தீரும், சீலை

தன்னில், தேயாதுலர்த்தித் தேனைமையப்

பற்றச் சொல்லும் வியாதிபலபோமே.

78. எண்ணெய்த்துளி ஒட்டறையும்

இயங்க பழத்தின் சாறு

உண்ண அரியத் தயிர்ப்பனிநீர்

ஒழுது இருக்கும் கற்றாழை

கிண்ணத்தோடு கிண்ணத்தார்

தேய்த்து பத்து நாளியிட்டுக் இழி

கண் தீர்த்துக்கொள்வீரே.

79. **புறவளையம்**

அன்னப் பாவாய் , கண் நொந்தால்

அகத்திலிருந்து வருந்தாதே

எண்ணெய்த் துளியும், நெய்த்துளியும்

ஈயோடு, எறும்பும், தயிர், பனிநீர்

வண்ணச் செந்நாயுருவி வேரைச் சுட்டு

வருந்தி, கலத்தில், புறனிழைத்து

........................................................................................

77. பாடல் நன்முறையில் இல்லை.

78. பனி – நீர்த்துளி; ஒட்டு – அறுகம்புல், தார் – கமுகு, ஈந்து. திண்ணம் – வட்டில், ஓடு – கபாலம். துளி – துளசி. இயங்கதல் – அசைத்தல்; இயங்கம் – புளிமா. அரி – கடுக்காய், கொடி வேலி. அறிய தார் – ஒழுங்கு; தாறு. கமுகு, ஈந்து.

கண்ணைச்சூழ, வளையம் பூசிக்(கு)

கருப் தளவே, திரியாதே.

80. தேற்றான், சங்கு, திரிகடுகு, இந்துப்பு

மோற்றும், மரமஞ்சளன்ன புங்கரிசி

சாற்றில் நெல்லிக்கடுதான்றி வசம்பிவை

நீரால் அரைத்தெழுத, எல்லூர் தோன்றும் எழுந்து.

உரை: அன்னப் பறவையைப் போன்ற பெண்ணை கண்களில் வலி ஏற்பட்டால் துக்கமுடன் வருந்த வேண்டாம். நல்லெண்ணெயில் ஒரு சொட்டு, பசுநெய்யில் ஒருசொட்டு, தேன், அத்தி, தயிர், பயிர் நீர் இவைகளைச் சேர்த்த வண்ணம். சிவப்பு நாயுருவியின் வேரைச் சுட்டு எடுத்த கரியைச் சேர்க்கவும். பாத்திரத்தில் வைக்கவும். இவைகளை கதைத்தின் உட்புறம், இழைத்து. கண்களின் வெளியே வட்டமாக பெருமை உள்ள மருந்தைக் கனமாக கைவிடாமல் அறிந்தவனாகப் பூசவும்.

தேற்றான் கொட்டை, சங்குப் பொடி, திரிகடுகு. இந்துப்பு, மஞ்சள், அரசமரம் கற்றாழைச் சோறு, புங்கு, ஏலரிசி, கொத்தான திரிபலை, வசம்பு, இவைகளைப் பொடி செய்யவும். நீர்விட்டு அரைத்துக் கொண்டு, கண்களில் புறமாகப்பூசவும். இருளிலும் கண்தெரியும்.

81. செங்கதாரி, கவி(ழ்) தும்பைச்

சேரா, செரு(ம்ங்) கருங்குவளை

அங்கத்தாரி, கையாந்தகரை

அடவேழ, அடுக்கும் நந்தியாவட்டம்

.......................................................................................................

79. அகம்– மருதமரம். துக்கம்; துளி தளசி; அரிசி – ஏலரிசி, மிளகு. ஈ - தேனீ; எறும்பு – அத்தி; அரும் – ஆரமை – பெருமை தளம் – கனம்; வேதி – அறிந்தவன்; தீர்தல் – கைவிடுதல்.

80. மரம் – அரச மரம், அன்னம் – கற்றாழைச் சோறு; அரிசி – ஏலரிசி; சாறு – கொத்து; எல் – இரள்.

81. சேரா – சேர் + சேர் + ஆ; சேர் – கள் ; ஓரளவை. ஆ – வகை.

காங்குல் பொழுதினில், தாழாதே
கனத்தேனில் உரைத்திட்டு
மங்கைக்காசை, நிலைகட்டி
இட்டால், இனந்தொட்டாரே.

உரை: சிவந்த கத்தாரி, கவிழ்தும் பைச்சாறு வகைக்கு சேர்; இத்துடன் கருங்குவளை மலர் அழகிய கடுகு ரோகிணி, வழுதுணை, கையான் வலிமையான, முற்றிய கரும்பு, வரிசையான நந்தியாவட்டம். இவைகளை சேர்த்துக் கொள்ளவும். பெருமையுள்ள தேனில் உரைத்து தாமதிக்காமல், சூரியஒளி இருக்கும் நிலையில் காயா மரவகையை இறுக்கிப் பிழிந்து, நல்லநேரத்தில் கண்களில் இட, இருள் நீங்கும்.

82. கூனன் முதுகும், குறிஞ்சி, மை
எடுப்பான் பல்லும்
மே(ஏ)னத்தின் கொம்பு, மிரா
அறிவான், மார்பெலும்பும்
மானத்தின் மீனும் மலையிர
கனகையும் கிருங்
கானக் குறத்திமுலைப்பாலும்
உரைத்திட கண்ணுய்பூ, அன்றே அறும்.

உரை: ஆமையோடு, மருதோன்றி, கறுப்பு பசுவின் நீக்கப்பட்ட, கொம்பு, பன்றியின் பல்; சேவலின் நெஞ்செலும்பும், ஆமணக்கு,

..........................................................................................

82. கூனைமுதுகு – ஆமையோடு; குறிஞ்சி – மருதோன்றி; மை – கருமை. எடுப்பல் – எடுப்பு. எடுத்தல் ; ஆன் – பசு, பல் – கொம்பு; மேனிமை – எருமைக் கொம்பு; இரா அறிவான் – சேவல். காசை – காயாமரம், நாணல், புல் ; இனம் – வகை ; தொடுதல் – பிழிதல்; கட்டி – இறுக்கி; நிலை – பொழுது. பொழுது – ஞாயிறு; தாழ்தல் – தாமதித்தல். மல்லிகை என்பன. கத்திரி – வழுதுணை, வழுதலை. வேழம் – கரும்பு, நாலை, மூங்கில், பீர்க்கு என்பன. மங்கை – இரசம், கற்றாழை. அடுக்கு – வரிசை் மங்கை – இரசம்; கற்றாழை. அங்கம் – கொன்றை, கடுகு ரோகணி, இருவாட்சி. மல்லிகை என்பன.

மீன் எலும்பு, அறுகு, வல்லாரை அறுகம்புல், இந்தி, குறைந்த காம்புள்ள கரிசாலை, சீந்தில், நிணைப்பனை இவைகளைத் தாய்ப்பாலில் இழைத்து, கண்ணில் பூவிழுதலுக்கு தடவவும். நோய் நீங்கும்.

83. கு(ம)ரட்டிக் காரியஞ் சொறி
போல் நுத்த(ம்) இதற்கு
இரட்டிச் சாதிலிங்கமிதாகும்
குரட்டிச் சங்கத்திட்டி செம்பாகும்
எதிட்டரை, போ(ம்) எண்ணாதே
எலுமிச்சபழச் சாற்றில் அரைத்து
ஓதிச் சொன்னோம், கண் நோவும்
ஒன்றும், வாரா, கண்டிரே.

உரை: கோட்டவும், வெங்காரம், ஆவிரை, காஞ்சொறி வகைக்குச் சமஅளவு; துத்தம் இரண்டு பங்கு: சாதிலிங்கம், கோட்டம், எட்டி, சங்கங்குப்பி, கத்தூரிமஞ்சள், இவைகளை ஒப்புடன் பழச்சாற்றில் அரைத்துக் கொள்ளவும். கண்களில் வலி என்பன வராது. இதை எடுத்துக்கூறினோம். நினைக்கவேண்டாம். செய்து பாருங்கள்.

84. பசுவின் பல் முட்டைத் தோடும்
பலகளைமுத்தக்காசு பன்றிக் கொம்பு
விசைகொண்ட கடல்நுரை பளிங்குத்
துத்தம் இளம்செம்பு சங்கிவை ஓர்நிறையாக
வசிவின்றி, முருங்கையிலைச் சாறு
வார்த்தரைத்து, போதாந்தி உண்டை தானும்
புனித ஆணை பொய்யாதே.

உரை: பசுவின் பல், முட்டைஓடு, பலகறை (சோழி) முத்தக்காசு, பன்றியின்பல், கடல் நுரை, கற்பூரம், துத்தம், அத்தி, சங்கங்குப்பி – சமஅளவு; குற்றமில்லாமல் உருண்டை செய்யவும். மாலையில்

கண்ணீரில் இட கண்ணிலிருந்து வெளியாகும் நீர் நிற்கும். கண்ணில் உள்ளபூ, தசை என்பன நீங்கும். இது பொய்யானதல்ல் உறுதியாகக் கூறுகின்றேன்.

85. தேனார்த்தானை, இந்துப்புக் குலவு
தான்றி, நெல்லி............
ஆனால், நல்ல திரிகடுகம், கால், தால்
அரைக்கால், கற்பூரம்
தேனாடரைத்து உரைக்குப்பிடத்து
சட்டியிலுள்ள தோடமெல்லாம்
மானோர், அனையாய், தீரும்பூ, வேறு என்னில்
மாலைக் காரண(வ)கையாமே.

உரை: தேன் 1/2 பங்கு, அத்தி, கொன்றை, கடுக்காய், இந்துப்பு1/4, சந்தனம் 1/4, தான்றிக்காய் 1/2, நெல்லிக்காய் 1/4, ஆச்சா,

.................................................................................................

84. பல் - கொம்பு, தந்தம்; பளிங்கு - கற்பூரம்; செம்பு - அத்தி, வசி - (குற்றம்) போடந்தி என்றாதல் வேண்டும். மறிதல் - தடைப்படும்.

85. தேன் + ஆர்த்த + ஆனை ; தேன் - மகரந்தகம்; ஆனை - அத்தி; குலவு - சந்தனம்; நல்லம் - இஞ்சி; ஆர்த்த - அத்தன் - முடக்கற்றான், கடுக்காய்; ஆர் - அத்தி - கொன்றை. தேனோடரைத்து உரைக்கப்பி, (குப்பி), இடத்து சட்டி - 6 திதி மண்பாண்டம்; இடத்தில் - அகலமான் உறை - நீளமான, உரை புகழ். காரணம் - வழி; வேர் - அடி; வேற - தனி; மாலை - இயல்பு, கை - இடம்.

86. கூட்டு - நட்பு; இரண்டு - வெட்டிவேர், நாடு - பூமி; கொணர் - கொண்டுவந்து; நேக - மிகப்பொடியாக.

குறிப்பு : இரண்டு என்பதால் அத்தியை நீக்கி ஏனையவைகளையும், இரண்டு என்பதால், வெட்டி வேரையும் சேர்த்தும், பொருள் கொள்ளலாம்.

கடுக(ம்) - திரிகடுகம்.

தாளி - பனை ; அழகு , நோக்கம்; நாட்டார் - நாட்டம் - கண்; நாடு + ஆர் = நாட்டார்.ஆர் - அத்தி, சரக்கொன்றை, நாடு - உலகம், நிலம்.

குறிப்பு : உலகத்தில் உள்ள மருத்துவர்கள் அறிந்துள்ள, அத்தி; நீர் - ஒறு.

கூட்டு - நட்பு; இரண்டு - வெட்டிவேர். நாடு - பூமி. கொணர் - கொண்டுவந்து, நேக - மிகப்பொடியாக.

ஆலமரம், இஞ்சி, திரிகடுகு, என்பன முறையே எடுத்துக்கொள். இவைகளை தேனில் அரைத்து, இழைத்து, புகழ் பெற்றகுப்பி, அகலமான மண்பாண்டத்தில் வைக்கவும். மான்போன்ற பெண்ணே மாலையில் வரும் கண்களில் ஏற்படும் பூ, குற்றங்கள் இயல்பாக தனி வழியில் நீங்கும்.

86. நாட்டார் அறியும் நீர்தாளி
நல்லோர் அறியும் நிலக்கடம்பும்
கூட்டா, இரண்டும் கொண அடைக்
எடைக்கோரோசனையும்
உடன் கூட்டியிட்டார்தேனில்
அநேக அரைத்து
ஊட்டார் சீலை, நல்ல பற்றிக் கண்ணி
இடக் கண்டாரெல்லாம் வணங்குவாரே.

உரை: நல்லமையைக் கண்ணில் போட்டுக் கொண்டவர்களை, அனைவரும் வணங்குவார்கள். மருத்துவர்கள் விரும்பும் அத்தி, ஒளியுள்ள தாழிப்பனை அனைவரும் அறிந்து கொண்ட நிலக்கடம்பும் கூட்டி, எடுத்துக்கொள்ளவும். இதற்குச் சமஎடை, கோரோசனையை கொண்டுவந்து, தேன்விட்டு, மிகப்பொடியாக அரைத்துக் கொள்ளவும். துண்டில்தடவி, மையை கண்ணில் இடவும். பார்வை பெற்றவர்கள், மருத்துவனைக் கண்ணால் பார்த்து, வணங்குவார்கள்.

87. பொன்னாங்காணிச் சிறுகீரை
புதிய துத்தமிவை மூன்றும்
தன்னாலோர் ஒன்றிருகழஞ்சு
தணியப்புளியிலை சாற்றிலரைத்துக்
கண்ணான, கொட்டிய கலந்தனிலே
கடுகத்தேன், வார்த்தரைத்தோர்
சொன்னேன், கண்ணுக்கிடும் பிணிகள்
தொண்ணூற்றாறும் தொலைந்திடுமே.

உரை: பொன்னாங்காணி - 1 கழஞ்சு, சிறுகீரை, புதிய துத்தம் - 2 கழஞ்சு. இவற்றை புளிய இலைச்சாறு விட்டு அரைக்கவும். இச்சாற்றை கலத்தில் கொட்டவும். திரகடுகுப்பொடி, தேன் விடவும். உண்ண அம்மருந்தால் கண்ணில் ஏற்படும் 96 வகை நோய்களும் தீரும்.

88. **கண்நோய் தீர உருண்டை**

ஓரிலை வேரொடு, கல்லோடு சங்கோடுதுத்த
ஒன்றிலையோடியை, ஒக்கக் கொண்டு
சீரியதுருசு, அந்நிறையாக அத்தி
எலுமிச்சம் பழச் சாறிலரைத்து
நேரிழையாள், முலைப்பாலில் அரைத்திடக்கூறிய
நவவோடம், குடி கொண்டிடுமே.

உரை: ஓரிலைத் தாமரையின் வேர், காவிக்கல், ஆமைஒடு, சங்கு, துத்தம் என்பனவற்றை சமஅளவு, தனித்தனியாக எடுத்துக் கொள்ளவும். மொத்த அளவு துருசை இத்துடன் சேர்க்கவும். கல்வத்தில், ஒன்றும்படி, தனித்தனியாக இல்லாமல். குழவியை ஒட்டி, அத்திச்சாறு, எலுமிச்சம்பழச்சாறு ஊற்றி அரைக்கவும். பின்னர், உருண்டையாக்கி, தாய்ப்பாலில் உரைத்து, கண்ணிலிடவும். ஒன்பது வகையான குற்றங்கள், புதுமையான குற்றங்கள் தீரும்.

89. **இருமல் தீர நெய்**

ஆடாதோடை ஆக்கி அவித்துப்
பிழிந்துதன், சாறுடனே
தேடாத்திப்பிலித்தேன் கூட்டிச்சேர்
குழைத்து நாக்கிலிட
வாடா, வெதும்பும் வறட்சிகளும்
வந்தேகும், சிலேத்துமமும்
கூடாமெனக் குறைவழியே
குலைந்து, குறைந்துபோய் விடுமே.

உரை: ஆடாதோடைச் செடியின் இலையை, நீராவியில், அவித்து, புட்டவியலாகவும். இதைப்பிழிந்து சாறு எடுக்கவும். நாடக்கூடியதான திப்பிலிப்பொடி விட்டு, நாக்கில் விடவும். குறைந்து போகாத வெட்பம், வறட்சி நீங்கும். கபநோய்களும், தன் வலிமையிலிருந்து, விலகி, உருமாற்றமுடன், அதிகமான அளவிலிருந்து 1/4 என்ற குற்ற அளவுக்குக் குறைந்து வடும்.

90. மூலாதார முசுட்டைக் கொடிகழல்
வேரே, சாறெடை வீழி செருப்படி
ஆடேதோயோடஞ்சி(இ)லை, தின்ன
ஓர்கோடி வியாதியும் தீரும்.

உரை: திப்பிலி மூலம், நிலையுள்ள முசுட்டை, சீந்தில் கழற்சி இவைகளின் வேர்ச்சாறு; இதன் அளவுக்கு வீழி, செருப்படை, ஆடாதோடை கருங்காலி, ஐங்கோலம், சந்தனம் இவைகளை உட்கொள்ள, ஒரு கோடி நோய்கள் நீங்கும்.

91. பொன்னாங்காணிக் குலப்பாளை
புகழும் தோன்றி, பிரமியுடன்
என்னார், நீலி, வெள்ளருகு
இதன், சீதேவிச் செங்கழுநீர்
மன்னார், கற்பூர வள்ளியிலை
மருவும், சித்திர வாசகனும்
இன்னார், செருப்படி, சங்கங்குப்பி
இலைச்சாறு எல்லாம் இருநாழி
பின்னாவாளம் இருந்தெல்லாம்
அரிய பிழியும்படியே
பின்னும், நெல்லிக்கரிச்சான் வேரும்
பின்ன, இலவங்கம், பச்சிலை எதிச
நன்னாரிவேர், கோட்டமுடன்
நாகப்பூவும், கிராம்பும்

என்னார் சல்லியம் பூதவிருட்சம்
மேவுவிளாவரிசி சாதிக்காய்
முன்னால் திப்பிலிகுறுகடுகும்
ஓதும் கடுகு ரோகணியும்
பின்னா, மதுரம், செவ்வியமும்
செவ்வல்லி இலாமிச்ச இருவேலி
புன்னார் வன்னங்கண்ட வுடன் ஓங்கு
கண்டங்கத்தரி தேற்றான் கொட்டை
பன்னவரைக்கழஞ்சு சேர் ஒன்று
பாய்ச்சு இளநீர்பட்டைசாறு
நன்றா, நைய்ய அரைத்துக்கரைத்து
நாட்டு நிலவேர் முசுட்டு முட்டை
வன்ன, அரிய கற்றாழை யறுத்து
மறையிர் முறியுடன்
புன்னாவு நெய் இருநாழி
புதுமேதிப் பாலில் இருநாழி
உன்னாவான பாலிரு நாழி அருந்தும்
தன்னால், வந்த பதத்தில் வடித்துத்
தொட்டு நக்க, சிலேத்துமம்போம்
என்னாதென்னும் இயல்புடனே
கண்ட திசை எனலாம்.

........................................................................................................

பட்டை - பேய்ப்புடல், பரங்கிப்பட்டை ; ஓங்கு - பெருமையுள்ள பன்னல் - ஆய்வுசெய்து. விருட்சம் - நாவல்; புன்னாகம் - புன்னைமரம்; அன்னம் - கற்றாழை, எதம் - திப்பிலி; சல்லியம் - சந்தனம்; பூதம் - ஆலமரம். பின்னா - சேதமடையாத ; பன்னம் - பருத்தி, வெற்றிலை. இன்னார் - இத்தன்மையர் ; பகைவர்; சித்திரம் - ஆமணக்கு, சித்தர்வேலி, வாசகம் - ஆடேதோடை.

91. குலம் - மூங்கில்; புகழ் - அகத்தி; மன்னர் - மேனா. தோன்றி - காந்தள் , மருதோன்றி. மரு - மருக்கொழுந்து;

குறிப்பு : தோன்றி, மரு என்பன ஒன்றையே (மருதோன்றி மருக்கொழுந்து) குறிப்பதால், தோன்றி என்பதற்கு காந்தன் எனக் கொள்ளப்பட்டது.

உரை: பொன்னாங்காணி, மூங்கில் குருத்து, காந்தன், அகத்தி, பிரமி, நீலி, வெண் அறுகு, சீதேவி செங்கழுநீர்ப்பூ, கற்பூரவல்லி இலை, மருக்கொழுந்து, சித்திரமூலம், ஆடாதோடை, செருப்படி, சங்கங்குப்பி, இவைகளின் இலைச்சாசறு, இருநாழியாளவு. நேர்வாளம் திருநீற்றுப்பச்சிலை, நன்னாரிவேர், கோட்டம், சிறுநாகப்பூ, கிராம்பு, சந்தனம், நாவல், திப்பிலி, சிறுகடுகு, கடுகுரோகிணி, அதிமதுரம், செவ்வியம், செவ்வல்லி, விலாமிச்சம், இருவேலி, புன்னை, கற்றாழை, கண்டங்கத்திரி, தேற்றான்கொட்டை, நல்லதாக, ஆய்வு செய்து அரைத்து, கழஞ்சு அளவு, கற்கம் எடுத்துக்கொள்ளவும். இக்கற்கத்தை, இளநீர், பேய்ப்புடல், சாறுகளால், நன்கு அரைத்து, யாவற்றையும் கரைத்துக்கொள்ளவும். கள்ளிவேர், முசுட்டைச்செடி, பீநாரிச்செடி, அரியதான, கற்றாழைச்சோறு, தளிர்கள், கரும்பு, புங்கநெய், 2 நாழி, எருமைப்பால் இருநாழி; பசும்பால் இருநாழி. வெள்ளாட்டுப்பால் இருநாழி; சேர்த்து அடுப்பேற்றிக்கொதிக்கவிட்டு, பதத்தில் எடுக்கவும். கபநோய்கள் நீங்கும்.

92. **இருமல் தீரத்திரி**

உத்தம தானிக்கையாந்தகரை
ஓங்கும், நாரத்தை எலுமிச்சுமுட
கொத்தான், இவை அஞ்சிலையும்
குறுகச் சாறுகொண்டகில்
மெத்த, தேன், வெள்ளைத்துணியதில்
மேவி, நனைத்தும், பொன்
அரிதாரமும், விரலிஉலர்த்திநிழல்
தன்னிலேவைத்தத்
திரியைப்புகைக்கக் குடிக்க
சிலேத்தும், மங்கை, மசக்கை
இத்தனைத்தாறும், செய்துவிட
இருமல், இளை போய்விடுமே.

உரை: உத்தாமணி, கரிசாலை, நாரத்தை, எலுமிச்சம்பழம், முடக்கொத்தான் இவற்றின் இலைகளைச் சாறுவரும்படி இடித்து, எடுத்து சாறுடன் மென்மையான தேன்; பொன்னரிதாரம், சேர்த்து சுருட்டி, வெள்ளைத்துணியில் நனைத்துக் கொண்டு, உலர்த்தவும். இத்திரியினால் விளக்கில் ஏற்றி, மூக்கிலிட்டு உறுஞ்சி இழுக்கவும். வாயினால் குடிக்கவும். கபநோய்கள், பெண்களுக்கு ஏற்படும் சூலகால வாந்தி, இருமல், இளைப்பு, ஈளை என்பன தீரும்.

93. இலந்தைப் பிசினும், பொன்னரிதாரம்
இரண்டும் பொடி செய்தனுடனே
உலைந்த, வெள்ளைத்துணி நனைத்து
உள்ளும், பிரம்பு முளப்பூசி
கலந்த, துணியைத் திரியாக்கி
கடு, கத்தரியும் கலந்(து) தெரிய
நலந்த, தேங்காய் சிரட்டை தனில்
நலந்த, தேங்காய் சிரட்டை தனில்

.........................................................................................

92. அஞ்சி - ஐங்கோலம்; இலை - சந்தனம்.
நிலம் - தாளி, கள்ளி, வேர் - இலந்தை, சாறு. முட்டை - பீநாறி. சுட்டை - சுண்டைட் முசுட்டை முட்டை ; மறை - வேதம் - வாலுளுவைவ் முற - தளிர்கள் ; மறையீர் - என்றாதல் வேண்டும்.ஈர் - கரும்பு; புன் - புனுகு. உன்னம் - அழிஞ்சில்; கருத்து; தாறு - அளவு. குறிப்பு : உத்தம தானி என்பதற்கு, உத்தாமணி, தான்றிக்காய் என்றும், அஞ்சிலை என்பதற்கு, ஐங்கோவம் சந்தனம் என்றும், பொருள் கொள்ளலாம்.
93. நலம் - சிவப்பு, நன்மை. உலைந்த - கலைந்துபோன ; உள்ளுதல் - ஆய்தல். முனைப்பூசி என்றாதல் வேண்டும்.
93. கூட்டு - என்புக்கூட்டையுடைய, உடல்; நட்பு; மூலம் - கிழங்கு; மூலநோய். சுக்கைச் சுட்டு, உப்பைப் பொடி செய்து என்று பொருள் கொள்ள வேண்டும். கறி - மிளகு, திப்பிலி. பிட்டு - உடைத்து. ஆட்டு பலக்கறி - வெள்ளாடு, வரையாடு, செம்மறியாடு என்ற ஆட்டின் வகைகளையும் குறிப்பால் உணர்த்தும். இடத்தில் உள்ள இலை, பூ, பிஞ்சு, காய், கனி என்ற ஐந்து வகை கறிகளையும் பன்னர் உண்ணலாம்.

நடுவில் துளைத்துப் புகையேற்றி
கலந்த, புகைபிடிக்கச் சிலேத்துமன்
மங்கை மசக்கும் ..............................
பலந்தான், நெறின்றிப் பிறந்தகலும்
பற்றிச் செய்யும், பிச காதே.

உரை: இலந்தைச் செடியின் கோந்து, பொன்னரிதாரம், இரண்டையும் தூள்செய்யவும். கலைந்து போன வெள்ளைத்துணியில் தோய்க்கவும். திரியாக்கவும். ஓர்மூங்கிலின் உள்ளேயும், நுனியில், பூசவும். இந்துடன் கடுக்காய், கண்டங்கத்திரி சேர்த்துக் கொள்ளவும். சிவந்த தேங்காய் ஒட்டின் நடுவில், துளையிடவும். முன்சொன்ன மூங்கில் குச்சியைக் கொளுத்தி சிரட்டையில் புகை ஏற்றவும். பின்னர் சிரட்டையில் முன் சொன்ன பொடிகளைப் போட்டு எரித்து துளை வழியாக வரும் புகையை, முகரவும். கப நோய்கள் மனத்திலுள்ள கெடுதல்கள், மயக்கம், என்பன நீங்கும். வலிமையைதரும்.

94. **இருமல் தீர மருந்து**

திப்பிலி, மிளகு, கடுதான்றிச் சிறந்த
தாயைக் கொன்றானும்
ஒப்பாடியே செய்யும் குடுக்கைக்குள்ளே
அடைத்து வைத்துப்பெற்ற
சிறிய, பாகலிலை பிசைந்துப் பிழிந்து
சாறுடனே. வைத்து, மீளும்.

உரை: மிளகு, திப்பிலி, கடுக்காய், தான்றிக்காய் குடுக்கையில் சின்னபாகல் இலையைக் கசக்கி, பிசைந்து, பிழிந்து சாறுடன் கபநோய்கள், மருந்தீட்டால், ஏற்பட்ட மயக்கம் என்பன தீரும்.

..............................................................................................

93. கயம் - கேடு: மசக்கு - மயக்கம். வாழை - வாழைப்பட்டைச் சாறாதல் வேண்டும். ஒப்பல் - உடன்படுதல்.

94. இலத்தி - இலந்தைக் குதிரை - மாமரம்.

95. குதிரை லத்திதனை, எடுத்து உகந்து
இருநாழிநீரிலிட்டு
அதில், கரைத்து அன்னீரில் வடித்து
உதிரு, முப்பி(இ)ரு நாழியென
ஒக்கத் திரளும், அதை எடுத்து எதிரே
எட்டு நாள் தின்ன (அ)ர(க்) குமிருல் இயம்பாமே.

உரை: மாமரம், இலந்தை இவைகளை 2 நாழிதண்ணீரில் போடவும். இருநாழி அளவுக்கு அடுப்பில் எரிக்க, துகள்கள், பெருக்கும். ஒன்றாகத்திரண்டு வரும். அதை, எடுத்து 8 நாட்கள் உண்ண வருந்தச் செய்யும். இருமல் தீரும்.

96. முன்னே, சீலை, பிரான் பாலில்
மூடி, நனைத்து முதிர்ந்த சங்கு
பின்னே, கையாந்தகரை தனைப்
பிழிந்த, சாற்றில் உலர்ந்ததனை
உண்ண, நி(அ)ழல். ஊடே கூட்டு
மருந்தினி, கேள்...............
பொன்னரிதாரம், கோழிமுட்டை
பொருங் கருபச்சிலைதனில்.
இன்ன, நனைத்து நிழலுலர்த்திச்
சொன்னோம், உத்தமதாளிச் சாற்றில் துலங்கத்
தோய்த்துத் திரியுருட்டி ஆவின்
தயிரால் அரைத்த தைக் குவித்து வர்த்தி
அன்னாதிரியில் கொளுத்துப் புகை ஆகக்குடியும்
அன்பாக முன்னே சொன்ன சிலேத்துமமும்,
மீளப்பித்த காசமும் போம்.

உரை: முதலில் பசும்பாலை பாத்திரத்தில் வைத்துக் கொள்ளவும். நல்ல தூய்மையான துணியை அதில் போட்டு நனைக்கவும். சங்கங்குப்பி, கையான் இவற்றைச் சாறுநீக்கி, துணியில் போட்டு உலர்த்தவும். உலர்ந்தபொடியை உண்ணவும். அடுத்த மருந்து

கூறுகின்றேன், கேட்கவும். பொன்னிதாரம்; கோழி முட்டையின் கரு, திருநீற்றுப்பச்சிலைக் சாறு, எடுத்துக்கொள்ளவும். அரிதாரத்தை, கோழிமுட்டைக்கரு, பச்சிலையின் சாற்றில் தோய்க்கவும். பின்னர் உத்தாமணியின் தயிரில் அரைத்து, நெருக்கித் திரட்டவும். உலர்த்தி எடுத்துத்தீயில் கொளுத்திப் புகைபிடிக்கவும். முன் கூறி பித்தகாசம், கப நோய்கள் போகும்.

97. இன்ன எருக்கிலையின் சாற்றில்
இசைந்த சீலைதான் நனைந்து
பொன்னரிதாரம், மஞ்சள் தனைப்
பொடியாய் சீலைதனில் புகட்டி
அரிய திப்பிலி, மிளகுப் பொடி
பின்னை தூவித்
திரியதனைப் போத நிழலுலர்த்திப்
பின் சொன்னத்
திரியை சுருட்டி எடுத்தொன்ற
எருக்கிலைந்த கம்பைய்
பின்னமற வெதுவாக்கிப் பெருக்க
நெருப்பில், கொழுந்துப்புகை
அன்னவாயில், குடிபுகையை
மாறு இருமல் மாறிடுமே.

........................................................................................................

சீலை – துணி

விளக்கம் : மின்னை என்பதால் சங்கங் குப்பியை முன்னதாக என்பதை குறிப்பால் உணர்த்துகின்றார்.

95. உதிர் – துகள். உப்புதல் – பெருக்குதல். அரகு – அரக்கம் என்றாதல் வேண்டும். அரக்குதல் – வருந்தச் செய்யும். மிரு – பாலைநிலம். இரு – பெரிய. பிரை – நன்மை.

96. பிரான் பால் – ஆவின் பால்; நிழல் – (ஒளி – ஒம) நி + அழல்; நி – உறுதி. ஊடே – இடையே, அழல் – எருக்கு, கள்ளி, கொடுவேலி.
பொறம் – சுக்கு, பொறம் என்றாதல் வேண்டும்.

உரை: எருக்கிலைச்சாற்றில் துணியைத் தோய்க்கவும். பொன்னரிதாரம், மஞ்சள் இவைகளைப் பொடியை, துணியிலிடவும். திப்பிலி, மிளகுப்பொடியையும் தூவி திரியாகச் சுருட்டவும். உலர்த்திக்கொள்ளவும். சேதமடையாமல் ஒரு திரியை நெருப்பில் பற்ற வைக்கவும். இப்புகையை முகர, இருமல் நீங்கும்.

98. கீழ்காய் நெல்லிவேர் கழஞ்சு
கிளா, பொற்கடுக்காய் அரைக்
கழஞ்சு, காரமிளகு கால் கழஞ்சு
கடுகு, புளித்தமோர்தனிலே
தாழா, துன்னும் தன்னாலே
தானுண் பண்டம் நீறாகும்
ஆனவான், உலகு தன்னில்
உள்ளோர்க்காயு மிகஅதுவாமே.

உரை: கீழ்க்காய், 1/2 கழஞ்சு; மிளகு 1/4 கழஞ்சு இவைகளை கடுகு, புளிப்பான மோரில் உண்ண உணவு, கரைந்து போய், சீரணமாகும். இது உலகில் உள்ள ஏனைய உயிரினங்களுக்கும், பயனாகும்.

99. **மூலநோய் நீங்க**

காட்டுக் கருணை, கல்வாழை
வெருகுகொடுவேலி
நாட்டில்பெரிய புளியிரண்டை
நல்லோர் தின்னும் மரப்பிரண்டை
கூறு அந்தஅறுவரையும்
கூட அரைத்துக்கொள்வீராய்
கூட்டிலிருந்த மூலமெல்லாம்
ஓகோ, எனக் கூப்பிடுமே.

உரை: காட்டுக்கருணை, பீர்க்கு, பூவரசு, கொடுவேலி, புளிப்பிரண்டை, மரப்பிரண்டை என்ற ஆறு பொருட்களையும், அரைத்துக்கொள்ளவும். நட்புடன், மேற்சொன்ன காட்டுக் கருணைக்கிழங்கு அழைக்கும்.

100. சுட்டும்பொடியசெய்த, சுக்கையும் உப்பையும்
இட்டுப்பிடியும், இருபிடி முப்பிடி
ஆட்டுப்பலகறி, ஆன் பாலும் உண்டபின்
பிட்டுப் பதினைந்து பின்னையும் தின்னலாம்

உரை: சுக்கைச் சுட்ட பொடி இருபிடி, உப்புப்பொடி மூன்றுபிடி என்ற அளவில், கணக்காக எடுக்க வேண்டும். இதை பல முறை கல்வத்திலிட்டு ஆட்ட வேண்டும். மிளகுத்தூள், பசும்பாலில் உண்ணவும். பொடியை, பின்னும், இம்மருந்தை 15 நாள் வரை உண்ணலாம்.

101. **பெருவயிறு தீர**

செவ்வாலங்கொட்டை பத்தேழ்
சிக்கெனத் தோலுடைந்து
அவ்வாயில், அடாத வண்ணம்
அது, பசும் பொடியாக்கி
செவ்வாயில் இரதம் வலக்
கந்த மரைத்துக் கூட்டி
அவ்வாயில் இருந்தகண்டம்
கோ, தாங்கள் (அ)கலுங்காணே.

................................................................................................

99. காட்டும் – காட்டிலுள்ள, எடுத்துக்காட்டாக உள்ள கல்லான் பீர்க்கு; ஆனை – அத்தி. வெருகு – பூவரசு; பூளை.

உரை: 17 என்ற எண்ணிக்கையில் சிவப்புநிற ஆலங்கொட்டையை, உடைத்துத் தோலை நீக்கவேண்டும். பொடி செய்யவும். இப்பொடியுடன் சந்தனம் சேர்த்து சாறு போலாக்கவும். நன்கு, அழகு இல்லாத, இடத்தில் பொருந்தாதவகையில் தொண்டையிலுள்ள கோழை, குற்றங்கள் என்பன நீங்கும்.

102. செங்கொடி, வேலியோடகில்
சிதவில்லாக் கவு தும்மைசேர்
அரைத்துச் சிதையாமல்தங்க
ஆவின் பாலுடனே சாற
ரைத்துத் தப்பாமல், மங்கை
வலிக்கும், அந்தரவாயுவிகார
அனைத்தையும் முங்க, மூன்று நாள்
குடிக்க, முசியாதோடி, முயங்கிடுமே.

உரை: சிவந்த சித்தரமூலம், அகில், கவிழ்தும்மை இவற்றை பசும் பாலில், சேர்க்கவும். குற்றமில்லாமல் கல்வத்தில் அரைத்து, சாறு எடுக்கவும். கெடுதல்களைச் செய்யும் வலி அந்தவாயு, மனக்குற்றங்கள் அனைத்தும் 3 நாள் குடிக்க தழுவி, கெடுதல்களைத் தழுவி அழித்து ஓடிவிடும்.

..............................................................................................

101. செவ்வு – செம்மை; ஆய் – அழகு; இல் – இல்லாத செவ்வு ஆய் இல். சிக்கு – தடை; வாயில் – இடம்; அடாத – சமைக்காத வண்ணம் – வகை. வலம் – வெற்றி. கந்தம் – சந்தனம்; இரதம் – மா, சாறு. வாய் – உண்மை; கவம் – கோழை. கண்டம் – குரல், கழுத்து; கோதங்கள் – பொல்லாங்கு. கவம் என்றாதல் வேண்டும். கோதம் – பொல்லாங்கு; வண்ணம் – வகை.

102. சிதைவு – குற்றம்; முசிதல் – அழித்தல்; முங்குதல் – மூழ்குதல். முசிதல் – கெடுதல் ; முயங்குதல் – தழுவுதல்; மங்குதல் – கெடுதல்.

103. **விரியன் பாம்பு நஞ்சு தீர**

கொத்தான், கொழுஞ்சி, முடக்கொத்தான்
கூத்தன் குதம்பைக்கொடி, சன்னை
சிற்றா மணக்கினிலையுடனே
சேரும், செருகார், பூகம்
சாற்றும், சுடாமல் (அ)விரி சாற்றில்
விரவிச் சுட்டுகவே
செற்றுக் கிடந்த, விரியன்விடம்
செறிந்து, காயம் பரிந்துடுமே.

உரை: முடக்கொத்தான், கொழுஞ்சி, கொத்தவரை கூத்தன் குதம்பை, கொடிவேலி, சின்னிக் கிழங்கு, பச்சைப்பாக்கு, சிற்றாமணக்கு இலை இவைகளை இடித்துச் சாறு எடுக்கவும். இதை அவுரிச்சாற்றில் கலந்து, கொள்ளக் காட்டுகிறேன். கொல்லும் விரியன் பாம்பு நஞ்சு உடலில் கலந்து, மயங்கிய நிலையில் படுத்திருக்கும் உடல் மருந்தை ஏற்றுக்கொண்டு விடும். விரியன் நஞ்சு நீங்கும் என்று அறிவிக்கிறேன்.

109. **வசியம்**

நாய்ப்பாகல் வித்துடனே, நன்றாகப்பித்தி
வெய்யாலோ(ர்) இந்திரிய வெற்றரைத்து
வாய்ப்பாகச் சுண்ணத்தில் கூட்டி சரிகுழலுக்கு
இடக்கால் விண்ணுக்குப்போயும் விடான்.

.................................................................

103. கார் - பசுமை. பீக்கம் - கமுகு. பூக்கம் என்றாதல் வேண்டும். செற்று - கொல்லுதல்; செறிதல் - கலத்தல்; காயம் - உடல், புண்; பரிந்து - துணிந்து, ஏற்றுக்கொண்டு. விரவி - கலந்து; சுட்டுக - சுட்டிக்காட்டுதல்.

104. பித்தி - அறுகு; நாய் - புளியமரம். இந்திரியம் - இரசம்; இந்தி + இரியம் = இந்தி; வெட்பாலை, பூளை. இரியல் - லவங்கம் விரைவு.

உரை: புளி, பாகல், விதை, அறுகு, இந்துப்பு, சிறுபூளை, இலவங்கம் இவற்றைப் போடவும். இப்பொருட்களை அரைத்து, சுண்ணாம்பில் சேர்த்து அடைத்து, பெண்ணுக்கு தக்கநேரத்தில் தரவேண்டும். இவ்வாறு செய்ய, வானத்தில் மறைந்து கொண்டாலும் பிரியமாட்டாள்.

105. **தீட்டுக்கு விரேச்சனம்**

**கொன்றைத்தோலும், கொத்தமல்லி**
**குமரிச் சாறு(க்)குங்கடுக்காயும்**
**ஒன்றைக்காய்ச்சி, ரோகணியும்**
**ஒக்கக் கலந்து, குடிப்பீராய்**
**கன்றிக்கிடந்த, மலங்கலங்கி**
**கடுக்கக் கழியும், வகை**
**சொன்னோம், வெற்றிக்கொடிய**
**வேந்தருக்கும், வெப்பும், சுரமும்வாராதே.**

உரை: கொன்றையின் பட்டை, கொத்தமல்லி கற்றாழை, மிளகு நீர் கடுக்காய் ஒன்று இவைகளை அடுப்பேற்றிக் காய்ச்சி வடிகட்டி, கோரோசனையையும் கலந்து குடிக்கவும். வருத்தமுடன் வலியை ஏற்படுத்தி வெளியாகும். தேங்கிய மலம், இயல்பாக வெளிவாகும். இம்முறையைச் சொன்னேன். வெற்றியைக்கொடியாகக் கொண்ட அரசர்களுக்கும் கொடுமையான சுரநோய் வராது. போரில் வெற்றி பெறுவதற்காகப் பலரை கொல்லும் கொடிய செயலை மன்னர்கள் ஆற்றுவார்கள். கொடிய செயல்புரியும் அரசர்களுக்குக்கும், இம்மருந்து பயன் தரும். இகழ்ச்சிக் குறிப்பாக இப்பாடலை இயற்றியுள்ளார். அரசர்களின் போர்த்தொழிலை இகழ்ந்துரைத்து, துறவி என்பதை வெளிப்படுத்தினார்.

.................................................................................................

104. பால் - வெண்மை பங்கு, சாறு; பெய் - போட்டு. பெற்று - அடைந்து;
105. சாறு - மிளகுநீர்; கன்றுதல் - வருத்தப்படுதல். கொடிய - கொடியை உடைய, கொடுமையான.

106. **இராமபாணம்**

கவுரி, துத்தம் அரிதாரம் கிளலே
 கொண்டங்கோர், எடையாய்
அவுரி, மத்தன் சாறுடனே
 அரைத்த உண்டை பயிறளவுக்கு
வரி, நெருக்கி ஒருண்டைக்
 குடிப்பீர், இஞ்சிச் சாறுடனே
தவறி, நெருக்கும், குளிர்பனியும்
 சாற்று, இரா,மனை இதே.

107. நச்சணங்காரம், சூதம்
 நல்விந்து, சாதிபானம்
கச்சனி, சீதம், போதும்
 கடு, திரி, அப்பிரகம்
நொச்சு, நிதமும் கூட்டி
 நொதரிக்கனியில் சாற்றில்
ஒத்தரைக்குளிகை குளிகை
 போல் அளவாகும் என்றே.

உரை: கௌரிபாடாணம், துத்தம், அரிதாரம், சாதிப்பத்திரி, சமஅளவு எடுத்துக் கொள்ளவும். அவுரி, ஊமத்தன் சாறு விட்டுக் கொள்ளவும். அரைத்துச் சீராக உருண்டை செய்யவும். இவ்வுருண்டையை நெல்லிக்காய்ச் சாறு இஞ்சிச் சாற்றில் ஒன்று வீதம் அருந்தவும். இரவில் குளிர்ந்த பனியால் உண்டாகும் சுரம் விலகும் என்று கூறுகிறேன்.

எட்டி, சந்தனம், மாமரம், இரசம், சாதிக்காய், கள், நுணா; அகில், ஓமம், திரிகடுகு, அப்பிரகம் என்பவைகளை நொச்சி சாற்றில்

........................................................................................................

106. கிளலே - கிள்ளை - சாதிபத்திரி; வரி - ஒழுங்கு, வரி - நெல்லி. நெருக்கி -ஒழுக்குதல் தவறி நீங்குதல். இரா - இரவு. மனை - வீட்டு, ஓரளவு.

நாள் தோறும் சேர்க்கவும். மென்மை இருக்கும், அத்திச்சாற்றில் கலக்க அரைக்கவும். சமமாக இருக்கும்படி, அளவுடன் குளிகையைச் செய்யவும்.

108. **வாதநோய்கள்தீர எண்ணெய்.**

நற்றம் பலாவின் சாறுழக்கு
நொச்சிச் சாறுழக்கு
மெத்தும், பூனைச் சாறுழக்கு
மீன்றும், வெள்ளப்பட்டு சாறுழக்கு
அத்தன (ஆ)மணக்கெண்ணையுழக்கு
ஆக ஐந்தும் வெந்து வடித்து
நித்தம் பூசி உள்ளே, கொள்ள
நில்லா, எண்பது வாதமே.

உரை: தாம்பூலச்சாறு, பசும்பால், நொச்சிச்சாறு, குப்பைமேனிச்சாறு, பூனைக்காலிச்சாறு; வேங்கை மரப்பட்டை, பேய்ப்புடன் இவைகள் வகைக்கு உழக்களவு; ஆமணக்கெண்ணெய், 5 உழக்கும் வேகவைத்து, இறக்கி, வடிகட்டவும். உள்ளுக்கு உண்ணவும், வெளியில் தடவவும், 80 வகையான வாதங்கள் நீங்கும்.

........................................................................................

வெள்ளை-வேங்கைமரம்; பட்டை - பேய்ப்புடல்;

107. ஆற்றல் - வரிசை ஒத்தல் - சமமாக இருத்தல். நச்ச நங்காரம் - நச்சமரம் - எட்டி; நங்காரம் - சந்தனம்; சூதகம் - மா, புளி, பவளமல்லி; சாதிபிரம்பு, சாதிக்காய், சீந்தில்; பானம் - கள். கச்சு - கச்சி - சீந்தில்; அணி - நுணா; நொ - மென்மைநோய். தரி - தாங்கும், இருக்கும்; கரி - அத்தி; சீதம் - அகில்; மோதம் - மோதகம் - ஓமம்.

108. தம்பலம் - தாம்பூலச் சாற - நற்றம்பல(ம்), மெத்தும் - மிகுதல், அப்புதல்; பூனை - குப்பைமேனி; மீன் - மச்சம்; பூனைகடகாலி -

அரு - அட்டை, அணு; அறு, வெட்டு, தீர்க்கப்படும்.

109. **உருண்டை**

மருந்து சொன்னோம், போற்றரிய உபாயம்
பருத்திச்சாறு கொண்டு போந்து
நீரளந்து, ஒன்றி, வேறே வார்த்து
சங்கங்குப்பி, புங்கு, நொச்சி
இயலுடைய கொழுஞ்சி இலைச்சாறு
மாற்ற அரியதாம் கொண்டு
வகை ஒன்றியிவை, நாழி வகையில்
காய்ச்சிக் கொதியளந்து
குறுகும்போது பாகுசுக்குள்ளி
கறுப்புக்கட்டி, ஆய்ச்சிட
கனமே, சடைக்குஆவின் பால் அறு
பெருதுத்தம் பெருமிளகு அரைப்
பொடியும் கூட்டிவாய்த்த கருஞ்சீரகமும்
பெருங்காயமும் மன்னயர இந்துப்பும்
பொடி செய்திட்டு ஆற்றி இவைஉண்டை
செய்யும் பிரமாணமாகக் கொண்டு
தித்தியென, வெற்றிலை தின்றிருக்க
திருதியென்ன, வதுடைக்கும்போது
கூத்தெனவே வந்து காற்றும் கலைந்து போகும்
சுழலில் சினத்திவரும் வெள்ளாட்டு
தயிரும் சோறும் சுகமாகக்கொடு
என்று சொன்னோம் காணே.

உரை: பாராட்டக்கூடிய வழியில் மருந்தின் செய்முறையைக் கூறினேன். வேலிப்பருத்தியின் சாற்றைக் கொண்டுவரவும்.

.................................................................................................

109. நீர் – முறை; ஒன்றி–தனிமை ; வேறு – மற்றது, தனி.
இயல் – தங்கம் ; பருத்தி; மா – மாமரம்; அரி – கடுக்காய்; கொடிவேலி, மூங்கில்; கனம் – திப்பிலி, கோரைக்கிழங்கு. சடை – நெட்டிவேர், பெருகு – தயிர். அரம் – அயம். இன்பம்; திருதி – வகிர் – கீறு. கதி – வழி, விரைவு; சுழல் – மனங்கலங்கும்.

முறையுடன் அளந்து கொள்ளவும். தனியாக அடியுடன் ஊற்றவும். பின்னர், சங்கங்குப்பி, புங்கு, நொச்சி பருத்தி, கொழுஞ்சி இலைகளின் இலைச்சாறுகளை எடுத்துக் கொள்ளவும். ஒன்றாக்கிக் கலந்து நாழியளவு அளந்து கொள்ளவும். பின் கொதிக்கவைக்கவும். சுண்டியவுடன், கருப்புக்கட்டியின் பாகு, சுக்கு, பூண்டு, திப்பிலி, நெட்டிவேர், பசும்பால், துத்தம், தயிர், பெருமிளகு, அயப்பொடி, கருஞ்சீரகம், பெருங்காயம், இந்துப்பு இவைகளைப் பொடி செய்யவும், உருண்டையாக பிடிக்கவும். வெற்றிலையில் இன்பமாக உண்ணவும். உறுதியுடன், விரைவாக, வயிற்றில் கீறும் அதிசயமாக வந்துள்ள வாயு நீங்கும். மனங்கலங்கி, தீமையால் வரும் நோய்கள் தீரும்.

110. **தாக சுரம்தீரப் பானம்**

தூய்ய சீந்தில், பற்பாடகம்
துவளும் அதிமதுரம், சர்க்கரையும்
நை(ய்)யப் போதகத்து, அது அரைத்து
நல்கு, இளநீர் அதில், கரைத்து
மையைப் பயிலும், விழியாளே
மகிழ்ந்தே, உண்ணவல்லிராய்
பைய, தாகச் சுரமெல்லாம்
பாராதோடும் கண்டீரே.

**உரை:** மென்மையான சீந்தில், பற்பாடகம், வட்டத்திருப்பி, சர்க்கரை, உள்ளே நன்கு, அறிவை இருப்பிடமாகக் கொண்டு அரைக்கவும். அரைத்ததை, இளநீரிவிட்டுக் கரைக்கவும். இதை மகிழ்ச்சியுடன் அருந்தவும். தாக சுரம், நீங்குவதைக் காணலாம்.

111. **தாகசுரம், பித்தசுரம் கேள்**

பித்தசுரத்தின் விகாரங்கேள்
பெருத்த தண்ணீரது, வாங்கில்

முத்தக்காசு, சந்தனத்தோலுழக்காய்
காய்ச்சியது வார்த்து
மெத்தப்பருகுமிது, தண்ணீர் வேண்டும்போது
மிகக் கொள்ளும்
சுத்தமாகச் சுகமிதுதான்
சொன்னார்தாக சுரந்தனக்கே.

உரை: பித்தசுரத்தின் வேறுபாட்டைக் கேட்கவும். அதிகமாக, தக்கோலம், சாதிக்காய், பெருங்காயம், தேற்றான் கொட்டை, முத்தக்காசு, சந்தனத்தோல் - சமஅளவு. 8 பங்கு நீர்விட்டு உழக்களவுக் காய்ச்சி எடுக்கவும். நீர் வேண்டும் போது அதிகமாக உட்கொண்டு அருந்தலாம். முழுமையாக இன்பம் இது தரும் என்று தாக சுரத்தின் இலக்கணத்தை மருத்துவர்கள் கூறினார்கள்.

112. வேலந்தோலை, வெட்டியிட்டு
விளங்கு மதுரம், கடுக்காயும்
மேல் மிளகும், வேர்க்கொம்பு
மிசையும், இந்துப்புடன், புளியின்
தோலின் சாற்றிலிவை துவளக்
காய்ச்சிக் கற்கத்தைச்சால
நாவிலிட்டக்கால், தணியும்
தண்ணீர் தாகமிதே.

உரை: வேலம்பட்டையைத் துண்டுகளாக்கவும். சிற்றரத்தை, அதிமதுரம், கடுக்காய், மேலான மிளகு, இலந்தை, மூங்கில் சோறு, இந்துப்பு, புளியமரப்பட்டை சாறு, இவைகளைக் காய்ச்சி 1/4 பங்கு

..............................................................................

110. துய்(ய)-மென்மை துவளும் - துவள் - வட்டத்திருப்பி; நைய - அவசரமாக ; அகம் - இருப்பிடம். போதம் - அறிவு. கூத்து - அதிசயம்; சினம் - வெம்மை. தீ - தீமை ;

111. விகாரம் - வேறுபாடு, தண்ணி - தக்கோலம், வா + இங்கில்; வா - சாதி. இங்கு - பெருங்காயம். இல் - தேற்றாமரம்.

ஆனவுடன் எடுக்கவும். இக்கற்கத்தை நாவில் இட்டு, உண்ண, தண்ணீர் வேட்கை நீங்கும்.

113. காளும், மெதைக் கற்பகத்தின்
கருதின குணத்தை நீர்கேளும்
நாள்தோறும், இதுபொடி
நாவில்வரட்சிநீர்த்தாகம்
பாழும், செய்யும்பதம், பித்தம்
பருகும் நெஞ்சில் தூரம்பதெல்லாம்
வேல் முருகன் ஆணை
விரையத்தீருமிது, பாரீர்.

உரை: அவுரி, கரிசாலை, ஆய காய கற்ப மூலிகைகளின் தன்மையைக் இதைப் பொடி செய்து நாள்தோறம் பயன் படுத்தலாம். நாவரண்டு போதல், நீர்வேட்கை இனிமையைப் பாழாக்கும், பித்ததொடர்கான நோய்கள் நெஞ்சில் உள்ள நோய்கள் அருந்திட விலகும். இதுவேல் முருகன் மேல் உறுதி. இந்நூலாசிரியர், முருகனின் அடியார் என்பதை கடைசி வரிகளில் உணர்த்துகின்றார்.

114. **பேதிநிற்க மருந்து**

அத்திப்பட்டை தன்னோடே
அடரும் வாழைப்பழம் துகைத்து
பொத்திப்பிடித்துத்தான் பிழிந்து
பொருந்த, சோறுதான் கொண்டு
மெத்த, சீனிதானிட்டு
மேவிப்பருவது கேளாய்

.................................................................................

112. வேர்க்காம்பு. வேர் – இலந்தை ; காம்பு – மூங்கில். மிசை – சோறு, தோல் – மூங்கில். தேன்; துவள – அடர்த்தியாக. மெ:ம்+ஏ. 113. காள் + உம் = காளம் – கருமை, நஞ்சு எட்டி, அவுரி. மேதை – கொழும்பு – கரிசாலை, வசம்பு. கரிய கரிசாலை என்றும், வசம்பு என்றும் கொள்ளலாம்.

பித்தசுரமும், வயிறுகழியும்
பேதிதீரும், கண்ணடாயே.

உரை: அத்திமரத்தின் பட்டை, கற்றாழைச் சோறு, வாழைப்பழச்சாறு. இவைகளை ஒன்றாகக் கலந்து அதிக அளவில் சர்க்கரையைச் சேர்க்கவும். இதனை அருந்த, பித்த சுரம், பேதி என்பன தீரும்.

115. பித்தசுரம்தீரப் பானம்

துய்ய சீந்தில், துவைத்து
துவளு இளநீர் தன்னில் பிசைந்து
பைய்ப்பிழிந்து, பதம் செய்து
பதைய்ய, சீனியது கரைத்து
அய்யப்படாமல், இது குடித்தால்
அமரும், பித்தசுரமென்று
பையத்தலமா முனிவர்
பகுத்தார், இதனைப் பாரீரே.

உரை: மென்மையான சீந்திலை இடித்து, இளநீரில் போட்டு, பிசையவும். சாறு பிழிந்து, வடிகட்டி, பக்குவம் செய்யவும். சர்க்கரையை இட்டுக் கரைத்துக் கொள்ளவும். இதைக் குடிக்க, பித்தசுரம் விலகும் என்று மெதுவாக சித்தர் வகைப்படுத்திக் கூறினார்.

116. **பொட்டணம்**

பித்தம் மிகுந்து, மோகித்தால்
பேணும், கிரிகை நீ கேளாய்
ஒத்த, கழுநீர், மலர்தன்னை
ஒக்கக்கூட்டிப் பொட்டாக்கி

.................................................................................................

113. பதம் - இனிமை ; துரப்புதல் - நீக்குதல்.
114. பட்டை - பேய்ப்புடல், பரங்கிப்பட்டை எனவும் பொருள் உண்டு. அன்னம் - கற்றாழைச்சோறு.

மெத்த, சாந்துக் கத்தூரி
மேவும், பன்னீர், குங்குமம்
நயந்த பச்சைக் கற்பூரமுடன்
நிமப்பூசி, முகர்வாயே.

உரை: பித்தம் அதிகமாக இருந்தால், அதற்கான செய்கையை, மதித்து நீ கேட்கவும். செங்கழுநீர்ப்பூ, குங்குமப்பூ, சந்தனம், கத்தூரி, பன்னீர் பச்சைக் கற்பூரம் இவைகளை தூள்செய்து, ஒன்றாக இணக்கமாக முகரவும். திலகமாக பூசிக்கொள்ளவும்.

117. **வாதசேத்தும சுரம் தீர**

கண்டக் காலியுடன் சுக்கு
கடுவிட்டு, எட்டொன்றாக்க இன்நீர்
உண்டபோதே, ஒண்தொடியாய்
கொண்டநீரிப்படியே கூட்டிக்
மண்டி, இயங்கிப்போய்விடும்
காண, வாதசேத்தும சுரந்தானே.

உரை: கண்டங்கத்தரி, கடுக்காய், சுக்கு - ஒத்த அளவு எடுத்துக்கொள்ளவும். 8 பங்கு நீர்விடவும். அடுப்பேற்றிக் காய்ச்சி 1/8 பங்காக எடுத்துக் கொள்ளவும். இக்குடிநீரைக் குடிக்க, வாத சேத்தும சுரம், இளைத்துப்போய், விலகும்.

..........................................................................................

115. துய்ய - மென்மையாக் துவைத்தல் - இடித்தல், துவளுதல் - வருந்துதல்.
116. மோகம் - ஆசை கிரியை - செய்கை பேணுதல் மதித்தல்; மலர் - குங்குமப்பூ; மலரம்பொலிவகை அக்கரமதுரம் என்று வருகின்றது. (பாலசஞ்சீவி மாத்திரை- சித்தவைத்தியத் திரட்டு)
நிமமம் - இணக்கம். பொட்டு - திலகம்.

118. **பித்த சுரம் தீர**

துய்ய, சாந்து கத்தூரி

துலங்கும், பன்னீர், குங்குமமும்

வெய்ய, பச்சைக்கற்பூரம்

விளங்க அரைத்துக்கரைத்து

அய்யப்பாதே, புதுக்காகமதிலே

வார்த்து, வைத்திதனை

உய்யத்தெளிநீர், முகந்தொழுக

உகந்தே, விட்டுப் பாராயே.

உரை: மென்மையான, சந்தனம், கத்தூரி, பன்னீர், குங்கமப்பூ, பச்சைகற்பூரம் இவைகளைப் பொடி செய்து, தெளிவான நீரில் கரைக்கவும். விருப்பமுடன் முகத்தில் தெளிக்கவும், குளிக்கவும்.

119. **இந்தத் தெளிநீர் விட்டாக்கால்**

**இதிலே, அமருமிது கேளீர்**

**முந்திக் கடுகமதுபோல்**

**முகத்தில் அழுகு, உடம்பெரியும்**

**கொதித்தன், பித்தம்**

**கொடிய பித்தசுரமெல்லாம்**

**அந்திப்பாமல், உடல் குளிரும்**

**அசவாதினைப் பாராமே.**

உரை: தெளிந்தமுன் கூறிய நீரை உடலில் ஊற்றினால், விரைவாக, உடல் எரிச்சல் பித்தசுரம், என்பன விலகும். உடல் குளிர்சியடையும். காற்றைச் சரிசெய்யும்.

120. **வாத, பித்த, கப சுரம்**

**ஓதரிய, கொத்தமல்லி, நிலவேம்பு, சுக்கு**

**உகந்த, சிறதேக்குடனே, முத்தக்காசு**

**தீதறு பற்பாடகம், தேவதாரம், சிறந்த குமிழ்**

**இவையுடனே எட்டும் கூட்டி பேதமுற**

இருநாழி நீர், உழக்காய்க் காய்ச்சிப்
பேணியே, இறக்கியதை வடித்துக்கொள்ள
வாத பித்த சிலேத்தும, சுர வகையும் போகும்.
வன்மையுடன் நியதனை வருத்திக்கொள்ளே.

உரை: கூறுவதற்கு இயலாத தன்மைகளை உடைய கொத்தமல்லிவிதை, நிலவேம்பு, சுக்கு, விருப்பமுள்ள சிறுதேக்கு, முத்தக்காசு, தீமையில்லாத, பற்பாடகம், தேவதாரம், குமிழ் என்ற எட்டுவகை பொருட்களையும், ஒன்றாக 2 நாழி நீர்விட்டுக் காய்ச்சவும். உழக்களவு ஆனவுடன், வடிகட்டவும். இதைக்குடிக்க, வாதபித்த, கபசுர வகைகள் நீங்கும்.

121. **சன்னி, வாதசுரம் தீர**

சுக்கு, சீந்தில், சேவகனும் துய்யக்
கருவேல், வேப்பந்தோல்
மிக்க, கடுக்காய், கருவேம்புவிரவும்
வெள்ளை உள்ளியுடன்
ஒக்க, அரைத்து, இருநாழிநீர்
உழக்காய் காய்ச்சி நீயதனை
நக்கச் சன்னி வாதசுரம், நாடா
நடுங்கி ஓடிடுமே.

**உரை: சுக்கு, சீந்தில், சிற்றாமுட்டி, கறுப்பு வேலமரம், வேப்பந்தோல், கடுக்காய், கறும்பு, வேப்பமரம் கலந்து கொள்ளவும். சமஎடை பூண்டுடன் அரைத்து 2 நாழி அளவு நீர்விட்டு உழக்களவு சுண்டிய பின்னர் நாவால் எடுத்து உண்ண வாத சுரம் என்பன விலகும்.**

........................................................................

117. மண்டுதல் - நெருங்குதல்; இயங்குதல் - இளைத்து; கண்டங்காலி - கண்டங்கத்தரி.

118. துய்ய - மென்மையான் புதுக்குதல் - அழகுபடுத்தல்; முகம் - வாயில்; முன்புறம்.

119. கடுக - விரைவாக. அச - நிவர்த்தி; வாதி - காற்று.

நக்குதல் என்பதால் குடிநீரை நீக்கி, கற்கத்தைக் குறிப்பால் உணர்த்தியுள்ளார்.

122. கதித்தாங் கடுகு, சுக்கு, இருவேலி
கடுக்காய், சீந்தில், சேவகனும்
நிதித்தார், ஒன்றிரு கழஞ்சு
நீரோ, நாழி எட்டொன்றாய்
கொதித்தால், வடித்துக் குடித்திடிலோ
கொடிய சன்னி, வாதங்கள்
மதித்தார், நிலவழி நில்லாதவாறு
மாறும், மருந்திதுவே.

உரை: பருத்த கடுகு, சுக்கு, இருவேலி, கடுக்காய், சீந்தில், சிற்றாமுட்டி, மஞ்சள் பாக்கு இவைகள் வகைக்கு 2 கழஞ்சு தண்ணீர் நாழி அளவு. 1/8 பங்கு அளவு வரும்வரை அடுப்பேற்றிக் காய்ச்சி, எடுக்கவும். வடி கட்டிக் குடிக்க. கொடுமையைச் செய்யும் சன்னி வாதசுரம் தீரும். நோயை மாற்றும் மருந்து, இது என்று மருத்துவர்களால் மதிக்கப்படும்.

123. **அமுதாதிக் கசாயம்**

சீந்தில், வேலி, இலாமிச்சம்
சிறுகாஞ்சோறி, பற்பாடகம்
வாந்த, முத்தம், கொத்தமல்லி
மருவும்சுக்கு, நிலவேம்பு
சேர்ந்த, பதத்திலிவை நாலொன்றாக்கி
சேர, வெந்நீர் கொள்ள
வந்த, வெப்பை, விடுவிக்கும்
வீறு, அமுதாதி என்பதுவே.

உரை: சீந்தில், வேலிப்பருத்தி, விலாமிச்சம், சிறு காஞ்சோரி, பற்பாடகம், முத்துக்காசு, கொத்தமல்லி விதை, சுக்கு, நிலவேம்பு, சமஅளவு எடுக்கவும். 8 பங்கு நீரைவிடவும். காய்ச்சி 1/4 பங்கு ஆனவுடன் எடுக்கவும். இக்குடிநீரை வடிகட்டி, அருந்த வெம்மை தணியும். வலிமையான அமுதாதிக் குடிநீரின் செய்முறையாகும்.

124. **சீதசுரம் நீங்க மருந்து**

எரிக்கும் பக(ம)வனைப் பொன்னம்பலத்தில்
ஊறப் பிசைந்து
பலிக்கும்படி, பொடி தன்னையும்
சேர் பச்சை சாற்றில் இஞ்சி
நலிக்கும், மருந்தொரு கோளப்பிரமாணம்
நடுவில் இட்டுக் குடித்திட
சீத சுரம் நிற்கும் குன்றவனார்
ஆணை இன்றே.

உரை: கொடி வேலியைக் கொக்கு மந்தாரை, முல்லைக்கொடியின் சாற்றில் ஊறவைக்கவும். ஊறியபின் பிசைந்து, கொள்ளவும். மிகுதியாக இருக்கும்படி தூள்செய்யவும். ஒருசேர் அளவு திருநீற்றுப் பச்சை இஞ்சி சாற்றில், உருண்டை அளவு செய்து குடிக்கவும். சீத சுரம் நீங்கும் என்பது உறுதி. "சேர், பச்சை சாற்றில் இஞ்சி" என்பதற்கு, ஒரு சேர் அளவு என்றும் பொருள்கொள்ளலாம். திருநீற்றுப் பச்சை இலைச்சாறு, இஞ்சியின் சாற்றிலும் என்றும், பச்சை, இஞ்சி இவற்றுடன் சேர்த்து என்றும் பொருள் கொள்ளலாம்.



125. **மருந்து**

குடகரிதன(க்) இங்கு, கூறுவன்
கிரியை தன்னை
உட, விலா, நெஞ்சோடு உறைத்திடவே
எண்ணெய் நெய்யும்
தடமதில் காயவைத்து, கலந்து
ஒழுக்கி மாற்றிச்
சுடச்சுட, கொள்ளு சாற்றில்குணமது
கூட்டிக் கொள்ளே.

126. உற்றுற வலித்துப்பின்னை எரிந்
தெருக்கு, மாகில்
சர்க்கரை, நாழி நீரும்தான்
உறக்குடிப்பதென்ன?
உதரமே வினவியுள்று துரப்
புற, வலிக்குமாகில்
பதறவே, நீயும் வேண்டாம்
பரிந்தங்கு, வெண்ணை நெய்யால்
சிறுகவே. ஆக்கி, ஏற்றி
சீரிய, உள்ளி இந்து
ஏறு, நீ, குடிப்பதென்ன?

..............................................................................................

125. பொடி – துகள், சூரணம், தூள். குன்று – குன்றாத, ஆற்றல் குறையாத. உறைந்திடவே என்றாதல் கூடும்.

125. குடை – குடைதல் – வருத்துதல்; கரி – மைம் நஞ்சு. தனகு – களிப்பு. தனகு என்றாதல் வேண்டும். குடை என்றாதல் வேண்டும். கரியை – செய்கை. உறை – வாணாள், இருப்பிடம்; உடன் – உடனரி. உறைத்தல் – பெய்தல், உறுதியடைதல்.

125. தடம் – பெருமை, வலம்பு; மதில் – அரண், காவல் ; இஞ்சி மூங்கில், கடம்பு, ஒழுக்கி – ஒழுக்கல் – எழுச்சி, மாறு – ஒப்பு; சாற்றுதல் – உணர்த்துதல்.

127. இந்துவும், நெய்யுமாக
இயல்புடன் குடிக்கையில்
விந்துவும், சுக்குநீரும்
கடுவுடன் குடிக்கிலோடும்
இந்துவும் முள்ளிக் கொற்றான்
இசைவுடன் தின்னில் மாறும்
இந்துவும், பாலுமாகக்
குடகரி ஏகமென்றே.

128. மருங்கை, வன்னி, உள்ளியோடும்
முசுண்டை, வேர், சாறெடை
பருங்கழல், கோழி, இஞ்சி, சுக்கும்
பகிர்ந்திரண்டு, நாழீ நீர்
விரும்பி, நீர், உழக்கதாலி விரைந்து
காய்ச்சிக் குடிப்பீரா
விரும்பிய, குடல்கரிவிரைய
வெகுமானையே.

129. கொடிக்கழல் பருப்பது உள்ளி
கொடியவிந்து, காயமும்
அடித் திரண்ட, வெண்ணெய், சுக்கு
ஆனநல் மரிசமும்
பொடிப்பட அரைத்து, நீர்
புகழ்ந்திடக் குடித்திடில்
வெடிப்பரந்த சூலை, குன்மம்
மேவி அஞ்சி ஓடுமே.

உரை: வருத்தம் தரும் நஞ்சின் செய்கையை இப்பாடலில் கூறுகின்றேன். உடல், விலா, உறுப்புகள், இதன் இருப்பிடமாகும். கடம்பு, இஞ்சி இவைகளைக் காயவைத்துப் பொடி செய்யவும். எண்ணெய், நெய்யில் கலந்து கொள்ளவும். இதைச் சூடாக,

எழுச்சியுடன், கொள்ளுச் சாற்றில் உட்கொள் நோய் தீரும் என்று ஒத்துக் கொள்ளவும். இதற்கு வேறு பொருளையும் கொள்ளலாம். பொடியைச் சூடாக, உட்கொள்ளவும். இவ்வாறு உட்கொண்டால், நோய்தீரும் என்று யாவருக்கும் உணர்த்தலாம்.

130. **கழல் வாதம் தீர**

ஆமணக் கெண்ணெய், இந்து
அமர்த்துறக் குடிக்கையில்
ஏகும், திறதாக்குக் குடிக்கில்
ஓடும், ஆமணக் கெண்ணெய்
தானம், குடகரி, ஏகுமென்றே.

உரை: ஆமணக்கு எண்ணெயில், இந்துப்பைச் சேர்த்துக் கொண்டு, உள்ளே குடிக்க விலகும். விளக்கெண்ணெயுடன் அன்னக் காடியைக் கலந்து குடிக்க, வெப்பத்தின் வகைகள், நீக்குதலைச் செய்யும். கைகால்களின் குடைச்சல் என்ற நஞ்சு விலகும்.

131. **ஒற்றிடம், புகை**

வேயனுறைகின்ற, சுருங்கி, வலிக்குமே
ஆகில், கேளாய்
நயமுறு, எண்ணெய், நெய்யால்
நாடியே, ஒழுங்கி, ஒற்றி
மயமுறு, உள்ளி, மஞ்சள்
மருவிய, நிம்பவித்து,
அதுகளுறப் பொடிகள்செய்து
தாவியே, புகைப்பதென்ன?

........................................................................................................

130. தலைப்பில் உள்ள கழல் வாதம் பற்றியது, பாடலில் இல்லை. குடை - கடைதல்; கரி - கருப்பு, நஞ்சு; ஏகும் - நீங்கும். திறம் - வகை. ஆக்கல் - செய்தல்.
131. வேண் - மூங்கில், வேய்தல் - மூடுதல். உறைதல் - தங்குதல்.

உரை: மூடியும், சுருங்கியும் உள்ள தசைகளில் வலிதங்கினால், அதற்கான மருத்துவம், கேட்கவும். எண்ணெய், நெய், இவைகளை, வலியுள்ள இடத்தில் தடவி, ஒற்றடமும், பூண்டு, மஞ்சள், வேப்பவிதை இவைகளின் பொடியை நெருப்பில் போட்டு, புகையை ஏற்படுத்திக் காட்டவும்.

132. இத்துடன் குந்தரிகம்
இயல்புடன் கூட்டிக் கொண்டு
மதமுத, கைகள்காட்டி
மருவி, மேல் கிரியை சொல்வான்
விதமுறக் கொத்தான் உள்ளி
வியனக் கழலிலையும் கூட்டிக்
கதம்படிவிதி தங்கொத்தி
கட்டுவானாக என்றே.

மேற்சொன்ன பொருள்களுடன் குங்கலியம் சேர்க்கவும். வலியை, எடுத்துக்காட்டி, ஆற்றலுடன், சேர்த்துச் செயல் படுத்துவான், செயலுள்ள முடக்கொத்தான், பூண்டு, பெருமையுள்ள கழற்சியிலை இவைகளைச் சேர்க்கவும். வலியுள்ள இடத்தில் சிறிது சிறிதாக, கைப்பிடியளவு, தொழிலைச் செலுத்துவான்.

133. **பற்று**

உத்தமாதாணி இலையின் சாறுகள்

.........................................................................................................

பின்னை – அடுத்து

இல்லி – மிளகு நெற்றி, கில்லிடும் எனறாதல் வேண்டும்.

132. மதம் – வலி, கை – ஆற்றல். காட்டல் – எடுத்துக்காட்டல் ; மருவுதல் – சேர்த்து. கதம் – வலி. கிரியை – செயல்; விதம் – வியன் – பெருமை. செய்தொழில், தன்(னு) – சிறிது சிறிதாக் கொத்தி – கைப்பிடியளவு. கட்டுதல் – செலுத்துதல்; நெற்றி – கொண்டை. இடு(ம்) – இலந்தை.

உள்ளியும், சுக்கும்
நெற்றியிலிடு(ம்) சயந்த லவணமிங்கு
நேர்படி, அரைத்துப் பின்னை
ஒத்திட வீக்கம் பின்னை அண்டத்தே
உகந்து, காகட்டிட வலியும்
குலை, கனங் குறைந்தே
ஏகும் காணே.

உரை: உத்தாமணி, மா, தான்றி இலைகளின் சாறுகள், பூண்டு, சுக்கு, இலந்தை, மிளகு, இந்துப்பு, இவைகளை, சமஅளவில் எடுக்கவும். இதை, அரைத்து, அடுத்து, முட்டையுடன் விரும்பிக் கட்டவும். வலி, பளு என்பன, குறைந்து, நீங்கும். நெற்றி என்பதற்கு இலந்தை என்ற பொருளை, மறைமுகமாக உணர்த்திய நயம், சுவைக்கத்தக்கது.

134. **குடிநீர்**

கொடிக்கழல், பருப்புள்ளி
கொற்றவனிலையின் சாறும் விழி
இலைச்சாறும் நொச்சி
இயபுறக்காய்ச்சிப்
பின்னக் குடித்திடில் சூலைகுன்மம்
குடலை விட்டேகும்
என்று நடித்திடும், நாதும் ஆனை
நாழியிது, கண்டதாமே.

..........................................................................................

புனல் – முருங்கை

134. நாழீ – நேரம், நாதும் – தலைவன்;

குறிப்பு : கொடிகழல் பருப்புள்ளி கொற்றவன் – விழாவை உடைய பெரிய கொடியையும், காலில் ஆண்களின் வீரத்தின் அடையாளமான அணியையும் உடைய பேரரசன் என்பதான இலக்கிய நயம், மகிழத்தக்கது.

உரை: கொடிவேலி, கழற்சிப் பருப்பு பெரிய பூண்டு முடக்கொற்றான், இவைகளின் சாறுகள் விழிதலைச்சாற, நொச்சிச்சாறு இவைகளைக் காய்ச்சி, வடிகட்டிக் குடிக்கவும். சூலை, குடலில் உள்ள புண் என்பன விலகும். இம்மருந்தை, நல்ல நேரத்தில் கொடுத்து, அதன் செயலைக் கண்டறிந்தேன். என்று இறைவன்மீது உறுதியாகக் கூறுகிறேன்.

135. புங்கு, சங்கங்குப்பி, நிம்பம்
புனலில், கழல், கிலுகிலுப்பைக் கொற்றன்
நங்கையின், புறங்கை
நாபியடம், பிளமா, சம்பு
இங்கிவை, குளிர
இடித்துயிர் மறவறுத்தே ஒட்டி
இதமறக்கட்டிப் பொங்கு
குடலுற்றவாதம் வழிவிட்டேகிப்
போகும் ஆணையாரே.

உரை:புங்கு, சங்கங்குப்பி, வேம்பு, முருங்கை, கழற்சி, கிலுகிலுப்பை, முடக்கொற்றான், பூண்டு, நங்கை (பூண்டு) தேன், கரிசாலை, நாபிகொட்டைப்பாசி, மாமரம், நாவல், பீதரோகணி, என்ற இவைகளை சாறு தங்கும்படி இடிக்கவும். பின், துன்பம் நீங்க, வறுக்கவும். இவைகளை ஒன்றுடன் ஒன்று சேர்த்து, நன்மையைத் தரக் கட்டவும். மிகுதியானவாத நோய்கள், உறதியாக நீங்கும்.

136. உற்றுநீ, செய்யும் அந்த
உறுபல கிரியை எல்லாம்
பற்ற, மாறாதாகில், பகிர்ந்து
மேற்கிரிகை, சொல்வான்
மற்றதினி, துன்பம், கண்டம்
தூற்றல், இவையி லென்ன?

மெய், படர்ந்தன்ன, ஒழுப்பிக்கின்றன
மேல் தேசிப்பதென்ன?

உரை: இவ்வாறு நீங்கள் செய்யும், செயல்களில் நோய் நீங்காமல் இருந்தால், மேற்கொள்ளவேண்டியவைகளைச் சொல்லுகிறேன். வேறு, அடுத்த நோய், இடையூறு, சிதறுதல் இவைகளில் என்ன உடலில் செல்லுதல் என்ன? அழகுடன், மேலே தவிர்ப்பது என்ன?

137. உற்று வருவாதி, மூலடத்துடங்கடி
ஒக்க உன்னிப்
பற்றாக, வந்தாதிக் கொண்டே செயிற்றும்
பற்றாமல், தன்மேல் இரண்டங்குலத்தை
வெச்சாமல், முக்கூடு பொருட்டாக
வைத்துச் செறி, பின்பு, முச்சந்தி இருப்பன்
குழையில் அற்றாமல் இது, பொட்டினாலே
தேயிற்றால், அறம்பொய், குடல்வாதம், போமே.

138. **இச்சாபேதி மாத்திரை**

நச்சனாங்காரம், சூதம்
நல்விந்து, வனம், அகைக்

...........................................................................

135. நங்கை - பூண்டு, சிறியாநங்கைப் புறம் - முதுகு; கை - கரிசாலை புரம் - வீடு - புடம். தோல்ல் - தேன், மூங்கில். அடம் - கொட்டைப்பாசி; பிலம் - பாதாளம், குகை, பாதலம் - மரம். இங்கி - பிதுரோகிணி; ஒட்டி - ஒட்டுதல்.
136. கண்டம் - இடையூறு; துன்பம் - நோய்; ஒழுப்பு - விலக்கி, தவிர்த்து, தூற்றல் - இடையூறு.
தேசி - அழகு. படர்தல் - நடத்தல், பரவுதல், செல்லுதல். வருந்துதல். இதம் - நன்மை பொங்குதல் - மிகுதல்.
துயர்மற இடித்து - துயர் - துன்பம்; உயிர் - ஓசை மறம் - வலி, வீரம், அற - முற்ற முத - கந்தங்கிழங்கு. கட்டு - உறுதி.

கச்சணி, சீரகமோடு

கடுகில், புறத்ததாகும்,

நெச்சக் கந்தகமும், கூட்டி

நொதலைக்கரியின், சாற்றில்

வச்சரைக்குளிகைக் குன்றி

போலன்வாகத்தானே,

இச்சாபேதி தன்னை இள

இஞ்சிச் சாற்றில் கொள்ள

வைச்சிடும், குன்மம், கிருமிய

மாகும், கரியதேகி,

நொச்சிடும், நோய்கள் எல்லாம்

நொந்துதான் போகும்

வச்சிடும் நோய்கள் போகும்

மாமுனி, அருளிச் செய்தார்.

உரை: எட்டி, கற்றாழைச்சோறு, காரம், இரசம், சாதிக்காய், வானம், புல்லுருவி, நுணா,சீரகம், கடுகு, கந்தகம், மஞ்சள், இவைகளை சீந்தில், அத்தி, பொடுதலைச் சாற்றில் அரைத்துக் கொண்டு. குன்றிமணி அளவு குளிகை செய்யவும். இப்பேதி மாத்திரையைக் குருத்து இஞ்சியின் சாற்றில் குடிக்க, குன்மம், கிருமி என்பன நீங்கும். வருத்தம் தரும் யாவும், அழிந்து போகும் என்று முனிவரில் சிறந்தவர் கூறினார்.

139. சிதறவே, பிசைந்து பின்னைச்

சென்றநாள், கல்லினால் உரைத்து

அதிரவே, உருவிக்கொம்பால்

மாந்துவ, சகத்தினிலே

........................................................................................

137. அடம் - பிடிவாதம், ஈனம் ; போகுதல்.

138. நச்சன் - எட்டி, அன்னம் - கற்றாழைச் சோறு

காரம் - வெங்காரம்; சாதி - சாதிக்காய், அகைம் - புல்லுருவி.

பதிவிடம், சாந்து, பின்னைப் நீ

பைய்ய, வாயு முன்நீ

உசிவின், உந்தி, தன்னால்

மூன்று செலவதனில் கட்டே.

உரை: இஞ்சிச்சாற்றில் இச்சாபேதி மாத்திரையை பொடி செய்து, பிசையவும். பின்னர் கல்லில் தேய்த்து நாயுருவியின் கிளையைக் கொண்டு கலக்கவும். வெள்ளாட்டுப் பாலில் குடிக்கவும். செம்பு, அதிலிடையம், சந்தனம் இவைகளை மெதுவாக நீரிலரைத்து, மெதுவாக தொப்புளில் கட்டி வைக்கவும். மெதுவாக, முற்பட்ட, கூர்மையான வாயு, இனிமையான கொப்புளில் கட்டிவைக்க நீங்கும்.

140. கட்டிய, பின்பு, தான் தானம், கலம்

கொதாதினி, தன்னிலே

விட்டுறத் தேய்த்துப் பின்னை

விரகு, நா, வாகு, வெற்றி

முட்டவே இயந்தரித்து

முன்னயுட, நாடி பார்த்துப்

பட்டு, அரக்குத்திலந்த

எத்திறம், பாயுங்காணே.

................................................................................................

பைய – மெல்ல; உசவு – கரி,உசாவுதல் – கேட்டல். எண்ணெய் கூட்டு. பதி – செம்பு, விடம் – அதிவிடையம், சாந்து – சந்தனம், முன் – பழமையான

138. நோவுதலை என்றாதல் வேண்டும். நோவு – மஞ்சள். தலை – பொடுதலை, கரி – அத்தி, கரிசாலை் நொசி – வருத்தம். நொந்துதல் – தூண்டுதல், அழிதல்.

139. அதிர்தல் – கலக்குதல். உருவி – நாயுருவி. மாந்துதல் – குடித்தல் . சகம் – வெள்ளாடு.

கொது = கோ – தாது + இனி. கோ – பெருமை. தாது – நாடி. கலம் – பாத்திரம். விரகு – மகிழ்ச்சி.

முன் + நீ = முன்னி. முன் – பழமையான, முற்பட்ட. உசி – கூர்மை, விருப்பம்; இன் – இனிய, இனிமை. செல(ல்) – நீங்கும்.

140. தரித்து – அணிந்து. முன் – முதல், திறன் – வகை, முட்டுதல் – அணைத்தல். இயம் – இனயம் – ஒன்றாக. இணைந்து. வெளி – ஒழுங்கு, விரகு – மகிழ்ச்சி. வாகு, நா – பொலிவு. கோதுதல் – சிறிது சிறிதாக உண்ணல். திறம் – வகை. பாய – பரவுதல்.

உரை: இவ்வாறு கட்டிய பின்னர், அழகிய பாத்திரத்தில் போட்டு சிறிது சிறிதாக உண்ணவும். நன்கு மருந்து கலக்கும்படி தேய்க்கவும். மகிழ்ச்சியுடனும், அழகுடனும், இரண்டற ஒன்றாக வெற்றியை அணைக்க, அரக்கு வண்ணம் பட்டால், நாடியைப் பார்க்கவும். எந்தவிதமாகவும் பரவிடக் காணலாம்.

141. பார், முனி, தவத்தை யுன்னிப்
பதுமுகன், நித்தம் போற்றிப்
பொதுவான, முகில், கோபம்
கொண்டு, வல்லே, குற்றிதனயே
அக்காரவிடம், பளுலோடிக்
காய்ந்த, நீரில் விளாவி ஆற
விடம்போல் நின்று அனுயிரக
வரும் நாளில்

உரை: முனிவரின் பற்றற்ற நாட் செயலைக் கண்ட பிரமன்; அவரைப் போற்றுகின்றான். பார் முனி தவத்தை உன்னிப் பதுமுகன், நித்தம் போற்றி என்ற வரிகளுக்கு, புத்த தேவரை நித்தமும் போற்றி வழிபடும், பிரமன் என்றும் உள்ளுரைப் பொருள் கொள்ளலாம். தேரர் என்பது, புத்த பிக்குகளைக் குறிக்கும். இதற்குச் சான்றாகத் தொடர் அமைந்துள்ளது. மேகவண்ண ஆடையை உடுத்திக் கொண்டு, வலிமையான மரக்கட்டையை எடுத்துக்கொள்ளவும். அதிவிடையம், கல்கண்டு, பலகறை, வனநெல் இவைகளை சூடுபடுத்திய நீரிலை போடவும். முன் (அரிசி) சொன்ன மரக்கட்டையால் கிளறி, ஆற்றி, சூட்டைத் தணிக்கவும். நஞ்சு போல, உடலில் பரவி, உயிர் வருத்தமடையும்படி, வரக்கூடிய நாளில்

142. புரந்தர முனிவனோடு
பூதநாதன் மூலாதாரமும்
கலந்திடு, தேவர்கூடக்
கலந்தருன் செய்த ஈசன்

வரந்தரும், பதுமுகத்தான்
வந்தில நிதனின் என்ன?
உரந்தரு, பார் முனியும் ஏகித்து
உயிர், குறைந்திருக்கின்றானே.

உரை: ஐம்பூதக் கலப்பால், உடல் தகுதியாக இருக்கும், மூலாதாரமான அடிப்பகுதியை நிலையாக் கொண்ட உடல், நோய்களால் துன்பமடைந்து வருத்தமடையும். பூதங்களின் தலைவன் சிவபெருமான். இவர், தேவர்கள் கூடி இருக்க, அவர்கள் மேல் பரிவு கொண்டு, தேவையான விருப்பங்களை நிறைவேற, அருள்புரிந்தார். படைப்புக்கு உரிய பிரமனுக்கு, அழியாத நிலையை அளிக்கின்றார். முழுமையுடன் முனிவன் வலிமையுடன் பூமியுள் உயிர்களை முக்குற்றங்களான வாதம், பித்தம், கபம் என்ற தன்மைகளோடும், ஆணவம், கன்மம், மாயை என்ற மனக் குற்றங்களோடும், படைத்திருக்கினறான். இது வெளிப்படையான பொருள்.

உட்பொருள் : வலிமையுள்ள, காக்கக்கூடிய அகத்தி, ஆலம், திப்பிலி மூலம், கள்ளி, சிற்றரத்தை என்ற உயர்ந்த இவைகளைச் சேர்க்கவும். உயர்ந்த மாதுளை, பேரீச்சம் மரப் பழம், மஞ்சள், தாமரை, பங்கம்பாளை, தான்றி, சந்தனம் இனிப்புள்ள தண்ணீர் விட்டான், வலிமைதரக்கூடிய, பருமையான, முருங்கையும், முழுமையுள்ள விலாமிச்சை, இந்துப்பு, எஞ்சியன சோளம், இந்நாளில் தான்.

..........................................................................................

141. இரக - இரக்கம் - மனவருத்தம். ஓடி - வனநெல்; அனு - உயிர், நுட்பமான. அக்காரம் - என்றாதல் வேண்டும் அக்காரம் - சர்க்கரை, கல்கண்டு. பலு என்றாதல் வேண்டும். *தவம்* - பற்றற்ற நிலை. பொது - சாதாரணமான் நடு நிலை. முகில் - மேகம்; முனி - முருங்கை, அகத்தி. பூதம் - ஆல், ஆலமரம். தரம் - தகுதி, மலை, வரிசை. அரக்கு; நித்தம் - அழியாத நிலை. குற்றி; பதுமம் - தாமரை. கோபம் - ஆடை, சினம் - தம்பலபூச்சி. விடம் - அதிவிடையம்.

142. புரம் - உடல். தரம் - தகுதி.

143. இப்படிச் சமைக்கு, இந்த
அகத்தியன் முகத்தை நோக்கிச்
செப்பு, அறிவதற்கு மேலும் நிகழும்
நோய், குணங்கள் தன்னை,
ஒப்பிடும், முனிவன் தானம் முறை
முறைவகுத்துச் சொன்னான்.

உரை: இவ்வாறு ஆயத்தப்படுத்தியதை மருந்தாக்கி, அகத்தியரின் முகத்தைப் பார்த்து நோயின் தன்மைகளை அறியும்படி, மருத்துவ நெறிகளை ஒழுங்குபடுத்திக் கூறினான்.

144. உற்று, நெகிழ்வித்து முதிரவே
வாங்கிப் பின்னே
பற்றுற, நின்றதாக்கிப் ப(ர)ந்து
பின் வர்க்கம் பூட்டி
மற்றதிற்கு, செழுவிப்பித்து
மன்னிய, உதிரம் வாங்கி
முத்து, இப்படியே செய்ய
முதல்வனுக் குரைப்பன் காணே.

145. இந்த, வந்திகைச் செய்தாலி(ல்)
அன்புடன் மற்றதாகி
செந்திவர்களும், பூட்டிக் குவித்திடக்
கெம்பை விட்டு

.............................................................................................

நிதன் - நித்தன் - தண்ணீர்விட்டான்; இன் - இனிமை. கறை - எஞ்சியது, இருக்கு - சோளம். தரு - மரம்; தான் - தான்றி ; வந்தி - பங்கம்பாளை் இல - இலை- சந்தனம். இலை என்றாதல் வேண்டும். உயிர் - விலாமிச்சை பது - தாமரை் முகம் - வாயில்; வரம் - மஞ்சள். அருள் - மாதுளை் தேவர் - உயர்ந்தவர்கள்; ஈசன் - ஈச்சு - ஈஞ்சு. உரம் - நாள் வலிமை, சிறப்பு; பார் - பருமை, பூமி. நிதம் - புத்தன், அருகன்; பதுமம் - நிதி, தாமரை, கோடி. ஏகம் - முழுமை் தனிமை, மிகுதி. குறை - குற்றம்; இருத்தல் - வாழ்தல். முனி - முருங்கை, அகத்தி; புதம் - ஆலமரம். தரம் - காப்பவன்; மூலம் - திப்பிலிமூலம். ஆதாரம் - ஆ - கள்ளி, தாரம் - சிற்றரத்தை.

சிந்து நேரமிருத்திக் கொண்டு
சிக்கென, மூன்று குத்தி
முத்த, நோன்பு தன்னால்

146. மூன்று தரம் வாங்கு என்னார்
முடிவந்தன், வெண்ணெய் மஞ்ச
ஈண்டவே, இட்டுப் பின்னை
இசைந்த, பின், கொம்பைவிட்டு
வேண்டவே, குறையும் தெரிந்து
விட்டேகம் என்றுப்
பூண்டவன், உரைத்துப் பின்னே
பிறகுமோர், கிரியை சொன்னார்.

147. இப்படி, அதல் இங்குத்தவி
யர் சவுக்காரமிட்டு
மெய்ப்படை, கொடை கந்தம் வெதும்பி
மேல் கட்டி வைத்து
அப்படி, மூன்று நாளும்
அதனின்மேல் கிரியை செய்து
தப்பிடா வண்ணமிங்கு
தானது செய்து பின்னை.

148. இலைக்கள்ளியது பறித்து
இற, கழுநீரில் வெந்து
குலைத்திடப் பிசைந்து இங்ஙன
கொண்டதில் கட்டிக்
குலை, கழயிலையும், புங்கு
கொண்டித்துத்தனில் கட்டி,
நிலக்குமிழ் தன்னில் கட்டும்
நெகிழ இம்முறை செய்தால்.

149. துகில், கொத்தான் தன்னை இடித்துத்
துலாக்கட்டிப் பின்னைச், சீர்த்தபின்
கொன்றை கட்டித் திகழும், தாசி
கட்டி என்றளவு உன்னு
உன்னிமஞ்ச லிண்டிலை, அதுவும்கட்டி
மேல் படக்கட்டி
அன்றே, லேசித்து
விட்டேகும், காணே.

150. கள்ளியின் பால்கறந்து, தேங்
காயின் உள்ளில் விட்டு
உள்ளி, வெங்கார மஞ்சள்
இதமுடன், சவுக்காரமிங்கு
ஒன்றிய, சவுக்கார முடன்
ஒத்தகடுகும், திரிபலையும் விட்டரைத்து
தெள்ளிய, தோமயமும் பூசிச்செந்
தெருவில் சுட்டாயே.

151. இட்ட கோமயமும் தீய்ந்து
இவ்வளவாக வெந்தால்
மட்டளவாக, நீயும்
மாறியே, எடுத்துப்பின்னை
வெட்டென அரைத்துப் பின்னமே
விடுமே அரைத்து நீயும்
சிட்டறத் தேங்காய்போல்
சேரவி, விழுங்கிடாயே.

152. மருவி, நீங்க, அருந்திவிட்டால்
மாறநேரதனைக் கேளாய்
வேர்கறவே, வெதுக்கும் குன்மம்
வியனவலி, தலையேகும்

பகருவ, பீலிகை ஏகும் அகன்று

கோபமேகும், பெருகும்

அதியதேகும், பேனுநீ

.........................கண்டிடாயே.

153. கள்ளியின் கட்டை(யை) வெட்டிக்

கருதியே உள்ளே தோன்றி

உள்ளியுமிங்கு, முப்புடன்

சீனாக் காரமிட்டு

தெள்ளிய கோமயமும்பூசி

சிறக்கவே சுட்டிடாயே

இப்படிச் சுட்ட இந்தக்கள்ளி

கோமயமும் தீர்த்தால் அப்படி

இப்படி அறிந்து நீயும் மருந்தெல்லாம்

எடுத்து உப்பையும் புடமரைத்து

இந்த வடவதின் காய் போல

அங்காரின்றே, மெய்யடா

கெத்துச் குலமிக விரைந்தே

ஏகும் கானே.

உரை: கள்ளியின் தண்டில் துறையைப் போடவும். பூண்டு, பீதரோகிணி, பூநீறு, சீனாக்காரம், வெங்காரம், இவற்றைச் சமஅளவு எடுத்து, பழச்சாற்றில் அரைக்கவும். உருண்டையாக்கி, கள்ளித் தண்டின் வைத்து கோமயத்தால் பூசி மூடவும். பின் தீயிலிட்டு எரிக்கவும். சாம்பலானவுடன், எடுத்தரைத்து ஆலங்காயளவு உண்ண, விரைவாகச் சூலை நோய் நீங்கும். இதை. நீ உண்டுப் பார்க்கலாம்.

154. கொங்கு வெங்காய முள்ளச்

சயிந்த நேர்வாளம்

பொங்க, கனகாந்தம்

புங்கம் கருதியும்

மங்குமட இடித்துப் பூந்தெருக்கி

இலையில் பொதிந்து

அங்குறு கோமயமும் பூசி

அவ்வெருவில் சுட்டாயே.

155. பூசுகோமயமும் ஈந்தும்

புனந்திலைய்துவும் வெந்தால்

பேசுகரச் சாற்றி(ல்) அங்கு

பேணியே அரைத்துப் பின்னை

மாசுத் தேரது போல்

மன்னியுட் குளிகைசெய்து

வீசண்ட வெண்ணை தன்னில்

விரலிநீறும், காவிதன்றே.

156. விசனி, நீங்கற்றபோது

விழும் தேசிதானம், நீங்கும்

முசுநாறு, கவிகை ஏகும்

முக்கூட்டு அறியுமே

ஏகு, மாசன்று

.....................................

ஏகும், வயிறது தானும்

கான்றும் கானே.

உரை: சர்க்கரை, வெங்காரம், நெல்லிவற்றல், இந்துப்பு, நேர்வாளம், திப்பிலி, காந்தம், புங்கு, நாயுருவி - சமஅளவு; எடுத்துக்கொண்டு இடித்துக் கொள்ளவும். பொடியை, பூஉள்ள எருக்கிலையினால் மூடவும். இதை பசுவின் சாணத்தால் பூசவும். பசுவின்

.........................................................................................

153. வடவதின் காய் - வடம் - விழுதை உடைய ஆலமரம்.

154. களாலு - கழல் என்றாதல் வேண்டும். கழல் - கழற்சிக்காய். தோன்றி - மருதோன்றி தோண்டி என்பதின் மருஉ.

சாணத்தாலான வரட்டியைக் கொண்டு புடமிடவும். ஆறிய பின்னர் எருக்கிலையில் மூடிய, பொடியை நன்றாக அரைக்கவும். எருமை வெண்ணெயில் 1/4 பங்கு பற்பத்தை சேர்த்து, குளிகையாக உருட்டி உட்கொள்ளவும். இது, அழகுள்ள சுத்தேரர் சொன்ன பெருமையுள்ள குளிகையாகும். சுத்தேரர் என்பது நூலாசிரியரின் இயற்பெயராதல் கூடும். இதை உண்ணத் துன்பம் தீரும். கவிசை, சூலம் என்பன விலகும். மலக்கட்டு தீரும்.

157. கள்ளியின் கட்டை வெட்டிக்
கருதி, உள்தோண்டி, மீட்டு
வெள்ளிய வெங்காரமிட்டு
வாசிப்பாலை வார்த்துத்
தள்ளி, வட்டைத்துத்
தண் கோமயமும் பூசி
கொள்ளிப்படவோ், வால்
சுட்டுக்கொள் நீ பதமாகவே.

158. ஆய்ந்த அது பசுமமாக அனலில்
அவித்துப் பின்னை
வெந்த, மதி, வெங்காரம்
விரசி உறவே அரைத்தபின்னை
ஆய்ந்தது, குன்றி, தன் நாடியது
விலங்காி, அன்றே முசி
ஆய்ந்துமே, சிற்றோடு உளளவு
சீதம்விட்டு, மூன்றுசுகம் கழியும்தானே.

159. அதனின் நேர்முதலளவு தன்னிளம் ஒருகூடுசுட்டு
இதனின், ஊறஎண்ணெய், மஞ்சள் இயனினால்

.....................................................................................

155. வீ - கேடு, நீக்கம். சண்டம் - எருது.

156. பாடலில் ஓரடி குறைவாக உள்ளது.

தன்னிலிட்டு, விதமும் முறை புண்ணதாக்கி மேவியே
கொதித்துப் பொங்கி, சிதைந்து போம் எருத்.
தென்ற தெளிந்தோர் செப்பினாரே.

உரை: கள்ளிக்கட்டையில் துளை செய்யவும். இதில் வெங்காரத்தை பாலில் கலந்து கொண்டு, துளையில் ஊற்றவும். ஈரமுள்ள பசுஞ் சாணைத்தால் துளையை மூடவும். புடமிடவும், ஆறியவுடன், புடத்தைக் கலைத்து, எடுக்கவும். இம்மருந்தை தேன், வெங்காரப் பொடியுடன், குன்றி மணியளவு உண்ண, உளைச்சல், சீதபேதி என்பன 3 நாளில் நீங்கும்.

இதுபோன்றே, முன்சொன்ன அளவில், ஒரு புடம் வைக்கவும். இப்பொடியுடன் எண்ணெய், மஞ்சள் கூட்டவும். இதை, புண்ணில் போட, ஆறும் என்று தெளிவான மருத்துவம் அறிந்தோர் கூறினார்கள்.

161. **குழநீர்**

அரமுறி, குலத்தைச் சுக்கு, மதி
தொடுவேலி, கொத்தான்
அரைக்கழல், உள்ளி, புங்கி
உற்றிவை இடித்துப் பின்னை
இச்சமாய், நீரிரண்டு நாழி
வெந்துழக்காகக் காய்ச்சி
பார், மோர், எண்ணெய் தன்னில்
பறித்து ஏகி இருங்காணே.

.................................................................................

155. மா + சுத்தோரது: மா - அழகு சுத்தோரர் - ஆசிரியர் இயற் பெயர் எனக் கொள்ளலாம்.

உரை: இருப்பு முறிச்செடி, கொள்ளு, சுக்கு, அதிமதுரம், கொடுவேலி, முடக்கொத்தான் இவை 1/2 பங்கு; கழற்சி, பூண்டு, புங்கு இவைகளை இடிக்கவும். 2 நாழி தண்ணிர் விடவும். காய்ச்சி, வடிகட்டவும். மோர், வெண்ணெய் சேர்த்து அருந்தவும். எவ்வகை நோய்கள் எனக் குறிப்பிடப்படவில்லை. இப் பாடல் தொடர்பற்று உள்ளது.

162. புன்மதி மருங்கை வேரும்
புதிய மாவிலங்கைத் தோலும்
மேன்நாவி, சாறடையின் வேரும்
கழல் உள்ளிப்புங்கு விரலியே
இவை இடித்து வியிறபோர்க்கு
வரிதமாக்கி, மனமாற நிகரில்ல
அன்றே மாறி விடும் மேல்
குத்துக் காணே.

163. பெருகிய, வேதியர்க்குப் பேணி
நானரைத்த வண்ணம்,
குலியே, பது, முகரியக்கு, மன்னி
இப்படிச் செய்யக் கருதியே,
வாதைத்தான், நன்று கலந்தன
தனக் குரைக்கக் கேட்டு
வெருவியே, உற்றுவிட்டு
விண்ணதாக்கித் தன்றே.

உரை: புனல் முருங்கை, அசோகு, மாவிலங்கை மரப்பட்டை, நாவி, சாரடைவேர், கழற்சி, பூண்டு இவைகளைக் கலந்து உண்ண உணர்வான இம் மருந்தால் உள்ளே ஏற்படும் வலி நீங்கும்.

........................................................................................

158. சீப்பால் – சீம்பால். கன்று ஈன்றபின்னர் எடுக்கப்படும் பால்.
வாசிப்பால் என்பதை வா+சீப்பால் என்று பிரித்துப்பார்க்கவும். வட்டை – வட்டமாக.
மதி – அசோகு, சோம்பு, அதிமதுரம், தேன்.

உரை: துத்தம், சீனாக்காரம், இவைகளை, மருத்துவத்தில் கூறியபடியே, சதுக்கள்ளி, தாமரை, தாழை , அகில் இவைகளை மருந்தாக்கவும். இவைகள் நன்றாக கலந்த பின்னர், நோயினரின் துன்பத்தைக் கூறக் கேள்வியுற்று, கூர்ந்து கவனிக்கவும். நோயின் கொடுமையை அறிந்து, பயந்த நோயருக்கு இம் மருந்தை அளித்து நோயற்ற வானவர் போலாக்கவும்.

164. குன்மம் தீர மருந்து

கொடாச் சாறனத்தில் குடிப்பிக்கு முன்னம்
கொண்டாங்க ஒருள்ளி இந்துப்பி னோடே
மாடாகவும், எண்ணெய் தன்னில் குடித்துப்
மலையெக்க இங்கு முன்னாத வொது
திட்டால், குழலகற்றிர் அல்குல் என்று தன்னை
போக இதன்மேல் அலங்கிட்ட போதே
கட்டாக, நின்ற, மலங்கழிந்து கணைசூலஅதி
குன்மம் விட்டே குமா(ம்) ஆணை.

உரை: வெள்ளரி, அழிஞ்சில், வாகை, துருஞ்சி இவைகளைச் சமஅளவு எடுத்துக் கொள்ளவும். சாறு பிழிந்து, பூண்டு, இந்துப்பு சேர்க்கவும். கலந்து கொள்ளவும். எண்ணெயுடன் சேர்த்துக் குடிக்க மலம் வெளியாகும். கணை, சூலம், மிகுந்தவலியைத் தரும். குன்மம் என்பன உறுதியாக நீங்கும்.

165. இங்கு நாலது இயல்புடன் மாறாதாகில்
சீந்துச் சாறடையின் வேரும்
சிறு குறுந்தொட்டி வேரும்
கொத்து கொள் உள்ளி
இங்கு வாதம் தாக்கிப் பின்னே

..................................................................................................

161. அரமுறி – இருப்புச் சத்துள்ள மூலிகை. குலந்தம் – குலந்தை, எள். முறி – தளர். குலந்தை என்பது குலத்தை என்றாதல் கூடும்.

இத்தாகத்தைலம் விட்டு
இயல்பினால் குடிப்பதன்றே.

பெருங்காயம், கார்த்திகைக் கிழங்கு மாறாத அகில், விலாமிச்சை இந்துப்பு, சாரணைவேர், சிற்றாமுட்டி வேர், பூண்டு இவைகளை எடுத்துக் கொள்ளவும். தைலமாகச் செய்யவும். தைலத்தை இறக்கியவுடன் நறுமணத்திற்காகப் பச்சைக் கற்பூரம் சேர்க்கவும். இதனைக் குடிக்க, வாதநோய்கள் நீங்கும்.

166. தேங்காயதைத்துருவித்
துய்ய, வித்துப் பால் கொண்டு
பாங்காகப்பிரமி, உள்ளிச்சாறு
உள்ளிக்கூட்டி
நீங்காமல்தான், காய்ச்சி
நெய், பிளந்த போதித்தை
தாங்காமல்தான், ஊறில்
தப்பாமல் குன்மம் போமே.

உரை: தேங்காயைத் துருவிக் கொள்ளவும். துருவிலிருந்து பாலை எடுத்து, இத்துடன் பிரமிச்சாறு, பூண்டுச்சாறு, வெங்காயம் சேர்த்து, நெய்யாகக் காய்ச்சவும். அறிவுடன், இம்மருந்தைச் செய்து அருந்த தாங்க முடியாத வயிற்றுவலி நீங்கும்.

..............................................................................................

மதி – அளவு, சோம்பு, அசோகு, அதிமதுரம், தேன், வியன்றபேருக்கு என்றாதல் வேண்டும். வியன் – பெருமை. வரிதம் – வருதமாக்கி. என்றாதல் வேண்டும்.
163. பதும்) – தாமரை முகரி – தாழை, அரும்பு. அக்க. அகில்; வாதை – வருத்தம் தரும் நோய். விண் – தேவலோகம்.
வேதி – சாதிக்காய். வேதியன் – சீனக்காரம். பெருசி – துத்தம். சூலி – சதுரக்கள்ளி.

167. அப்பெருந்தேங்காய்த்துருவி
அழகிய தாய்ப்பிழிந்துபாலை
நெய்யுற்றதாய் வைத்து, நின்ற
இம்மரிசம், தன்னைப்
பெய்யுறு பொடிகள் செய்து
உற்றதன், பொடியைத் தூவி
மெய்யுறக் குடிக்க, குன்மம்
மிக மலங் கழயும் காணே.

உரை: தேங்காயை உடைத்துத் துருவிக்கொள்ளவும். மென்மையான பஞ்சுபோன்றுள்ள துருவிலிருந்துப்பால் பிழியவும். அடுப்பேற்றிக் கொண்டுக் காய்ச்சவும். நெய் பதத்தில் எடுக்கவும். மிளகுப் பொடியை இந்தநெய்யுடன் சேர்த்துக் குடிக்கவும். அதிகமாக மலம் வெளியாகும். வயிற்றில் உள்ள புண்ணால் ஏற்பட்ட வலி விலகும்.

168. **குன்மம் தீர மாத்திரை**

இந்த நேர்வாளம் வாங்கி
இசையநீர் அரைக்கும்போது
சிந்துச் சாதிலிங்கம் கூட்டிச்
சேர்த்திட, அரைத்துப் பின்னே
கோந்து, குன்றிடைப்போலக்
குளிகை சமைத்துப் பின்பு
விந்து, மாதுவில், உண்டால்
விசையுமாம், குன்மம் போமே.

164.கொடால் - வெள்ளரி, சாற - கள், கொத்து. உனம் - உன்னம், உழுஞ்சல், அழிஞ்சில். குடி - வாலைக் முன்மை - துருஞ்சி, உசில்.
165. இங்கு - பெருங்காயம், நாலி - கார்த்திகைப்பூ. கொந்து - திரள்
166. ஊற்றி - வயிறு. போதி - அறிவு.

உரை: பாலில் காய்ச்சி எடுத்துள்ள நேர்வாளத்தில், நீர்விட்டு, மிளகுப்பொடி, இந்துப்பு, சாதிலிங்கம், சேர்த்து கல்வத்தில் அரைக்கவும். குன்றி மணியளவு மாத்திரைகள் செய்து தர, உண்ணவும். நாபிச்சாறு, கரிச்சாலைச்சாறு ஆகியவை அனுபானம். குன்மநோய் வலகும்.

169. வெந்தவத் தேங்காய் தன்னை
வேறு வேறாகக் கீறி
முந்தமுறு குணத்துள்
முறித்துத் தின்ற போது
மந்தமுறுக்கிறு கேளும்
மங்க வெப்புப் பாவையுடன்
செந்திட, வயிறிழியும்
சேதியது பாராயே.

உரை: தேங்காயை அடுப்பிலிட்டு வேகவிடவும். ஆறியபின், ஓடுநீக்கி, உடைத்து உண்ணவும். கிறுகிறுப்பு, பசியின்மை, தோல் நோய், வெப்பு, பாவை, கழிச்சல் தீரும். நேர்வாளத்தின் சுத்தி, பாலில் போட்டுக் காய்ச்சி எடுப்பதாகும். முற்றி, நெற்றுக்காயாக ஒட்டாமல் உள்ளதால் தவத் தேங்காய் எனப்பட்டது.

170. **குன்மம் தீரப்பால்**

கொத்தானிலைக் குழிக்கோல்
கழலிலைச் ..............
சிற்றாமணக்கு சிரிஞ்சி
ஒரு உள்ளி

.......................................................................................

166. பொய் – உள்ளிடல், அமர் – விருப்பம். அம்மமுறு தேங்காய் என்றாதல் வேண்டும். அம்மம் – பால்; உறு – மிகுதியான. விந்து – நாபி. சிந்து.
167. விந்து – நாபி, சிந்து.

கற்றாலின் பாழிநாழி வெந்து
உழக்காய்க் காய்ச்சி
பற்றார், சயிந்தமுடன் பருகீர்
பார் குன்மம் போமே.

உரை: முடக்கொத்தான் இலை, ஆவாரை, திப்பிலி, கழற்சி, சற்றாமணக்கு, அதிவிடையம், பூண்டு இவைகளை நாழியளவுப் பசும் பாலில் போட்டுக் காய்ச்சவும். உழக்களவு சுண்டும் வரையில் வைத்து பின்னர் எடுக்கவும். இந்துப்புடன் இப்பாலை கலந்து குடிக்கவும். உலக மக்களின் குன்மநோய் தீரும்.

171. முற்று ஆண், பனைக் காய் தன்கை
முறுகுவே, சுட்டுக் கொண்டு
மற்று மகுளம் தூள் விரவி
மகிழ்ந்திதனை உண்டதன்பின்
பற்றியுறு குன்மம்
பரந்தளரி, உதிரெல்லாம்
சற்றும் இனி நில்லாம்
சாந்த மாம்பாரே.

உரை: வலிமையுள்ள பனங்காயை எடுத்து, கறுப்பாக மாறும்படியாக அடுப்பில் சுடுதல் வேண்டும். பின்னர் பொடியாக இடித்துக் கொள்ளவும். மகுளம் பூவைப் பொடி செய்து கொண்டு, முன் சொன்ன பொடியுடன் கூட்டி குன்நோய்களில் ஒன்றான எரிகுன்மத்தை நீக்கும்.

172. முற்று ஆமணக்கெண்ணை
உள்ளியும் அழகிய

..........................................................................................

169. வெம் - வெம்மை ; விருப்பம். தவம் - ஒட்டாத தன்மை. மங்கு - அழுக்கு போன்ற தோல் நோய். செந்துதல் - வெட்டுதல். முறு - மாறுபடுதல்; மந்தம் - மயக்கம், பித்தம் என்பன கிறி - வழி.

170. குழி- வயிறு; கோல் - திப்பிலி, வயிரி - ஆவாரை. சிரிங்கி - அதிவிடையம். சிரியங்கியாதல் வேண்டும்.

முறு மற்று நகை, வேளைச்சாறும்
பிசிறி மதித்துப் பொற்கொடி
கொன்றைச் சாற்றில் வெந்து
உற்றிடு, சாரணை உரமிகு
உண்டபோது, அழல்குன்மம் சூலை
பற்றும் மாந்தம் புறுத்தியும்
பகர்ந்த சொல்லிது, தப்பாது பாருமே.

உரை: முதிர்ந்த ஆமணக்குக் கொட்டையிலிருந்து எடுக்கப்பட்ட விளக்கெண்ணெய்; பூண்டு, பெருங்காயம், பகன்றை இவைகளை வேளையின் சாற்றில் கலந்து கொள்ளவும். பின், கொன்றைச் சாறு சேர்த்து, அடுப்பிலேற்றிக் காய்ச்சி வேகவிடவும். பதத்தில் இறக்கவும். சாரணைச் சாற்றில் குடிக்கவும். அழல் குன்மம், சூலை, மாந்தம், அக விப்புருதி என்பன தீரும் என்று உறுதியாகச் சொல்லுகின்றேன்.

173. காந்தம் இரதம் அரிதாரம்
கடுக ரோகணி திரிபலையும்
மெந்தும், அபான இந்துப்பு
இசையுமடி எங்கனமும்
மற்றும் சிகை, அக்கிராகாரம்
அரைத்தும், நீலிச் சாற்றிலரைத்துச்
செய்த குளிகை குன்றிபோலச்
செரியச் சமையுங் கண்டிரே.

174. இப்படி சமைக்கும் இந்த
கொரந்தக குளிகை தன்னை
மைப்படுமோர், வெண்ணெய் தன்னில்
மருவி, நீர், நுகர்ந்தபோது

.................................................................................................

முறுக்குதல் - மாறுபடுதல். 171. ஆண் - வன்மரம். முற்றுதல் - முதிர்தல்; 172.மத்தித்தல் - கடைதல், தேய்த்தல். நகையால் என்றாதல் வேண்டும். நகையால் - பகன்றை பகண்டை

செய்த குளிகை குன்றிபோலச்

சேரியச் சமையுங் கண்டிரே.

174. இப்படி சமைக்கும் இந்த

கொந்தக குளிகை தன்னை

மைப்படுமோர், வெண்ணெய் தன்னில்

மருவி, நீர், நுகர்ந்தபோது

மேய்ப்படு, சூலை, குன்மம்

மிக விரைந்தேகும் காணே.

உரை: காந்தம், இரசம், தாளகம், கடுகு ரோகணி, திரிபலை, கடுக்காய், இந்துப்பு, சிக்சலிக்கிழங்கு, மயில் கொண்டை, அக்கிரகாரம் - சமஅளவு, நீலிச்சாற்றால் அரைத்து, குன்றி மணி அளவுக்கு குளிகை செய்யவும். இது ஏகாந்தக் குளிகையாகும். பசுமோர், வெண்ணெய் இவற்றில் உண்ணவும். படுசூலை, குன்மம் என்பன விரைவில் விலகும். மைப்படு என்ற சொல்லாட்சி, மோர், வெண்ணெய் என்பன பாலிலிருந்து எடுப்பதைக் குறிக்கும். பசுவின் உணவான புல், பால், மோர், வெண்ணெய் என்பவற்றையும் குறிப்பால் உணர்த்தியது.

175. சூலை தீர எண்ணெய்

உள்ளிச் சாறதுவும் கொண்டு

உளவண்டத் தைலம் நாழி

கள்ளிப் பாலதுவும் கூட்டித்

கடிப்பொடி உழக்கும் கூட்டி

வெள்ளியம் பத்து, இந்து

இராம மட மஞ்சள் ஐந்து

கொள்ளுறிக் குமிழுஞ் சாறும்

........................................................................................................

172. கொடி - சீந்தில்;

மதி - சோம்பு, அசோகு, அதிமதுரம், தேன்.

பொற்கொடி - பருத்தி. சீந்தில். தங்கத்தாலான கொடி. பொன் - தங்கம்; தங்கம் - பரி; பரி - பருத்தி. பொன் என்பது பருத்தியைக் குறிப்பால் உணர்த்தியது.

